# சிநேகிதி



அகிலன்

பாரி புத்தகப் பண்ணை

# சிநேகிதி

அகிலன்

முன்னுரை :

டாக்டர் மு. வரதராசனார் அவர்கள்




விற்பனை உரிமை :

பாரி புத்தகப் பண்ணை

58, டி.பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600 005

சிநேகிதி (நாவல்)

முதற் பதிப்பு : 1951
இரண்டாம் பதிப்பு : 1955
மூன்றாம் பதிப்பு : 1956
நான்காம் பதிப்பு : 1959
ஐந்தாம் பதிப்பு : ஜுலை 1965
ஆறாம் பதிப்பு : பிப்ரவரி 1969
ஏழாம் பதிப்பு : அக்டோபர் 1973
எட்டாம் பதிப்பு : ஏப்ரல் 1976
ஒன்பதாம் பதிப்பு : மார்ச் 1977
பத்தாம் பதிப்பு : மார்ச் 1978
பதினொன்றாம் பதிப்பு : ஜுலை 1979





விலை ரூ. 4 - 50

**PAARI PUTHAKAP PANNAI**
58, T. P. Koil Street
TRIPLICANE, MADRAS-600 005

பொற்கொடி வெளியீடு

---

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014

# முதற் பதிப்பின் முகவுரை

இந்த நாவலில் ஒரு பகுதியை 'நான்' என்று ஆரம்பித்து எழுதி முடித்த பிறகுதான், இதே முறையில் தொடர்ந்து எழுதுவதில் உள்ள சிரமங்களைஉணர்ந்தேன். என்றாலும் இப்படி எழுதுவதின் மூலம் வாசகர்களுக்கு அருகே, வெகு சமீபத்தில் இருந்து, நேருக்கு நேர் கதை சொல்லும் இனிய அநுபவம் உண்டாகிறது. இந்த அரிய வாய்ப்பை விரும்பும் நான் சிறிதளவு சிரமத்தைப் பொருட் படுத்தலாமா?

சமீப காலத்தில்தான் புதுமைத் தமிழ் நம்மிடையே பிறந்துள்ளது. இதுவரையில் சிறுகதையில் தவழ்ந்த புதுமை இலக்கியம் இப்போதுதான் நாவல் நடை போடுகிறது. அந்தச் சின்னஞ்சிறு செல்லக் குழந்தைக்கு இந்தக் காதற் கதையை ஒரு அன்பு மலராகச் சூட்ட விரும்புகிறன். இந்தக் கதையில் வரும் முக்கியமான பாத்திரங்கள் நினைத்துப் பார்க்கத் தெரியாத மக்களின் நிந்தனைக்குள்ளானவர்கள்; படிப்பும் பண்பும் அறியாதவர்களால் பரிகசிக்கப்பட்டவர்கள்; மனித இருதயம் படைக்காதவர்களால் மதிக்கப்படாத மனிதர்கள்.

அன்பில் அசையாத நம்பிக்கை கொண்டவன் நான். என்றோ வரப்போகும் அந்த அன்புலகத்திற்காக இன்றிருந்தே கனவு காண்பவன். அந்த உலகில் சாதி, சமயம், நிறம், பணம் எல்லாம் அன்புக்குத் தலைவணங்கி வழிவிட்டு, அன்பின் அடிமைகளாக ஒடுங்கும், அல்லது அன்பில் அழியும். அன்பை உணர முடிந்தவர்களால்தான் நல்லதையும் தீயதையும் சீர்தூக்கிப் பார்க்க முடியும்.

இந்த நாவலை நான் சிந்திக்கத் தெரிந்தவர்களுக்காகவும் சிந்திக்க விரும்புகிறவர்களுக்காகவும் எழுதுகிறேன். உடலோடு ஒட்டியும் ஒட்டாமலும் உள்ளத்துக்குள்ளே சுடர் விடும் ஒலிப் பெருக்கை இதில் நான் என் மனப் போக்குப்படி

சொல்லியிருக்கிறேன். இந்தக் கதையின் மூலம் நான் செய்வ தெல்லாம் ஒரேவிதப் பிரசாரந்தான்; அன்புப் பிரசாரம். அந்த அன்பினுல்தானே உலகம் இன்னும் அழியாமல் இயங்குகிறது? நம்பிக்கை கொண்டுதுடிக்கிறது? உருப்படப் போகிறது?

ஒழுக்க வரம்பை இதில் மீறியுள்ளதாக யாரும் கற்பனை செய்யவேண்டிய அவசியமில்லை. தமிழ்ப் பண்பாகட்டும்; இந்து தர்ம சாஸ்திர நெறியாகட்டும்; பொதுவான மனிதத்தன்மையாகட்டும் ஏதும் இதில் மீறப்படவிடவில்லை. கதைப் போக்கை வேண்டுமென்றே திரித்துக் கூறிப் பழி சுமத்த விரும்புகிறவர்களைத் தவிர, உண்மையை நடுநிலை யில் நின்று கவனிப்போருக்கு இதில் நேர்மை விளங்கும்.

தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள் இதற்கு மனமுவந்து முன்னுரை தர இசைந்தார்கள். நாவலின் கையெழுத்துப் பிரதியைச் சரிபார்த்துத் தந்தார் வித்வான் வி. துரைசாமி அவர்கள். இதை எழுத எனக்கு உதவியாக இருந்த ஓர் அன்பருக்கும் நன்ருக அச்சிட்ட அச்சகத்தாருக்கும் அழகான படத்தால் அலங்கரித்த ஓவிய ருக்கும் என்னுடைய நன்றியையும் அன்பையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கடைசியாக ஒரு எச்சரிக்கை: இக்கதையில் வரும் பாத்திரங்கள், நிகழ்ச்சிகள், சூழ்நிலைகள், வரிகள் இவற்றை ஆசிரியரின் அநுமதியின்றி எடுத்து வேறு கதைக்கோ, மேடைக்கோ, திரைக்கோ பயன்படுத்தினுல் அவர்கள் மீது சட்டப்படி ஒழுங்கு நடவடிக்கை எடுக்க நேரிடும்.

வாசகர்களே: நான் மறக்கவில்லை. அவர்களுக்காகவும், எனக்காகவும்தான் இந்த நாவலையே எழுதியிருக்கிறேன்.

அகிலன்

# முன்னுரை

(Dr. மு. வரதராசனார்)

காதல் கதை என்றால் ஏதோ நாகரிகத்தின் வரம்பைக் கடந்து எழுதப்படும் கதை என்றும் அதைப்புறக்கணிப்பதே கடமை என்றும் பலர் எண்ணும் நிலைமை இருக்கிறது. காதல் என்பது நாகரிகமான வாழ்க்கையில் இடம் பெறத் தக்க நல்லுணர்ச்சியே என்பது உண்மையானால், காதலைப் பற்றிய கலைக் கற்பனையும் நாகரிக வரம்புக்குள் நின்று நிலவ முடியும். திரு. அகிலன் எழுதியுள்ள 'சிநேகிதி' என்னும் இக் கதையே இதற்கு நல்ல எடுத்துக்காட்டாக உள்ளது, காதலரின் உள்ளத்தின் பலவகை உணர்ச்சிகளும் அங்கங்கே விளக்கப்படுகின்றன; அவற்றிற்குக் காரணமான சூழ்நிலைகளும் அவற்றின் வெவ்வேறு விளைவுகளும் எடுத்துரைக்கப்படுகின்றன. ஆயினும் உணர்ச்சிகள், சூழ்நிலைகள், விளைவுகள் ஆகியவற்றில் ஒன்றிலேயும் நாகரிக வரம்பு புறக்கணிக்கப்படவில்லை. கதையாசிரியராகவும் பத்திரிகையாசிரியராகவும் உள்ள 'துரை' தான் கூறுவதாகவே—தன்மைக் கூற்றாகவே—கதை ஓடுகிறது; அவ்வாறு சொல்லப்படும் வாய்ப்பு உள்ள ஒரு நூலில் உணர்ச்சிகளைத் தடையில்லாமல் கொட்ட முடியும். அந்நிலையிலும் தூய காதல் கதையாக இது விளங்குமானால், கதை பிறந்த உள்ளத்தைத்தான் வாழ்த்தவேண்டும்.

சமூக ஏற்பாட்டின்படி லலிதா, நாராயணசாமிக்கு உரிய மனைவியாக (காதலியாக அல்ல) வாழ்ந்து வருகிறாள். அவர்களின் அன்புக்கு உரிய நண்பராகச் சென்று பழகிய துரை அவளிடம் செலுத்திய அன்புமுதிர்ந்து காதலாகிறது. லலிதாவும் துரையின் காதலியாகிறாள். கதையின் முடிவில் வாழ்க்கைத் துணைவியாகவும் மாறுகிறாள். இத்தகைய ஒரு நிகழ்ச்சி கற்பனை உலகில் நிகழ்வதானால், நாராயணசாமி நம்முடைய பழிப்புக்கும் வெறுப்புக்கும் ஆளாகவேண்டும்; அல்லது நஞ்சுக்கும் துப்பாக்கிக்கும் இரையாக வேண்டும். நம்மைவிட மிகுதியாக லலிதா அவரை வெறுக்கவும் பழிக்க

வும் முற்படவேண்டும். அந்த நஞ்சும் துப்பாக்கியும் அவள் கையில் கொள்ளுமாறு நாம் கற்பனை செய்ய வேண்டும். இத்தனைச் சூழ்ச்சிக்கும் கொடுமைக்கும் துரை துணை செய்வதாகவும் தூண்டிவிடுவதாகவும் நேர வேண்டும். இவ்வளவும் இருந்தால்தான் ஒருவன் மனைவி இன்னொருவனுடைய காதலியாக மாறித் துணைவியாக அமைய முடியும். ஆனால் இந்த நூலின் கற்பனையில் இவற்றிற்கு இடமே இல்லை. நேர்மாருக, நம் உள்ளம் நாராயணசாமியைப் பழிக்கவும் முடியவில்லை; வெறுக்கவும் முடியவில்லை. லலிதா அவரிடம்கொண்டிருந்த அன்பும் மதிப்பும் இறுதி வரையில் மாருமல் இருந்து வருகிறது. கணவன் மனைவியாகிய அவர்கள் இருவரிடத்திலும் துரை செலுத்தும் பேரன்பு வியக்கத்தக்கதாக உள்ளது. நம் வெறுப்பும் பழிப்பும் செல்லுமிடம் முற்றிலும் வேறுபட்டதாக உள்ளது; துரைக்கும் லலிதாவுக்கும் குறுக்கே நின்று தீங்கு சூழும் சேதுராமனையே வெறுத்துச் சினம் கொள்ளுகிறேம். ஆனல் குறுக்கே நிற்பார் என்று எதிர்பார்க்கும் நாரயணசாமியோ நம்முடைய பெருமதிப்புக்கு உரியவர் ஆகிருர். சமூகம் செய்யத் துணியாத, செய்ய முடியாத பெருஞ் செயலைச் செய்து நம் உள்ளத்தில் தியாக வீரராக வாழ்கிருர். காதலுலகத்தில் ஒப்பற்ற புரட்சி— அன்புப் புரட்சி—நிகழ்ந்து வெற்றி பெறுகிறது. புரட்சியை எவர் எதிர்த்து அடக்க வேண்டுமோ, அவரே அமைதியாக வாழ்த்தியருளுகிருர்; வெற்றி பெறுமாறும் செய்கிருர்.

‘உலகம் வாழத் தெரியாதவர்களுக்காக நீலிக் கண்ணீர் வடிக்கும்; வாழத் துடிப்பவர்களுக்குக் குறுக்கே நிற்கும்’ என்று ஆசிரியர் அடிக்கடி எடுத்துரைக்கிருர். ஆனல் அத்தகைய உலகத்தில் ஒரு நாராயணசாமியைப் படைத்ததும், அந்த நாராயணசாமியின் பெருந்தன்மையை உணர்ந்து மதிக்கத்தக்க லலிதாவையும் துரையையும் படைத்ததும் ஆசிரியரின் கற்பனைச் சிறப்புக்களாகும்.

ஆசிரியர் திரு. அகிலன் அவர்களின் கலைத்தொண்டு நீடு வாழ்க.

28-10-51
சென்னை

மு. வரதராசன்

## 1

அதிகாலைதான் நான் வழக்கமாய்க் கதை எழுதத் தொடங்கும் நேரம். பத்திரிகாலயத்தில் என்னுடைய அறையில் உட்கார்ந்து காலை ஐந்து மணியிலிருந்தே அடுத்த இதழ் 'செந்தாமரை'க்குக் கதை எழுதிக் கொண்டிருந்தேன். கதை பாதிக்குமேல் வளர்ந்துவிட்டது. எழுத்தின் ஓட்டத்தில் தடங்கல் இல்லாதிருந்தால் ஒன்பது மணிக்குள் முடித்து விடலாம் என்று நினைத்தேன். பத்துப்பதினேறு மணிக்கப் புறம் பத்திரிகாலய வேலை தொடங்கிவிடும். தபாலில் வரும் கடிதங்களைக் கவனிப்பது, கதைகளைப் படிப்பது, சந்திக்க வருவோருடன் பேசிக் கொண்டிருப்பது இவைதான் முக்கிய வேலைகள். மத்தியில் அச்சுப்பிழை திருத்துதல், சித்திரக் காரருக்கு யோசனை கூறுதல் முதலியவற்றையும் கவனிக்க வேண்டும்.

படுக்கையை விட்டு எழுந்தவுடன் முதல் காபி ஆயிற்று. இப்போது மணி ஏழரை. பக்கத்து ஓட்டலில் அடுத்த காபி வாங்கி வருவதற்காக ஜானகிராமன் போயிருந்தான். எனக்கும் அவனுக்கும் அலுவலகமும் வீடும் அதே பத்திரி காலயந்தான். நான் பத்திரிகையின் ஆசிரியர்; அவன் ஆபீஸ் பையன். அவன் வேலைக்கு வந்து அதிக நாட்கள் ஆகவில்லை.

கதவை இலேசாகத் தட்டும் சத்தம் கேட்டது. ஜானகி ராமனுக்குத் திடீரென்று இந்த நல்லபழக்கம் வந்தது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. என் கவனம் கதையில் இருந்ததால் உடனே நான் அவனை உள்ளே வரச்சொல்ல வில்லை.

சத்தம் அதிகமாயிற்று.

"வா, ஜானகி!—வாயேன்!"

சத்தம் நின்றது; ஆனல் பையன் வரவில்லை.

"என்ன ஜானகி இது? வெள்ளைக்காரர்களுடைய பழக்கம் நமக்குள் வேண்டாம்; வா உள்ளே!"

பையன் வரவில்லை, அதற்குப் பதிலாக ஒரு பெண்ணின் குரல் ஒலித்தது! "'ஜானகி'யா?...ஹும்...சரிதான்!"

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. குரல் குழப்பத்தோடு ஒலித்ததால் ஒரு கணம் தயங்கினேன்.

"யாரது?"

"நான் வந்து...."

"யாரது?"

"உங்கள் ஜானகி இல்லை; வேறொருத்தி!"

உங்கள் என்ற சொல்லை அவள் அழுத்தமாக உச்சரித்தாள். நான் இப்போது குரலின் சொந்தக்காரியைப் புரிந்து கொண்டேன், "நீங்களா, வாருங்கள்" என்றேன்.

"நான் வரலாமோ? உங்களுக்கு ஒன்றும்—"

வார்த்தையை முடிக்காமலேயே கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். அவளுடைய கண்களில் தேங்கிய சந்தேகத்தை அவளால் மறைக்க முடியவில்லை.

"உங்கள் வரவால் ஒரு இடைஞ்சலும் இல்லை. கதை எழுதுகிறேன் என்று யோசிக்கிறீர்களா?"

"கதைக்கு இடைஞ்சலென்றால் பரவாயில்லை. ஆனால்..."

"ஆனால்?"

"வேறு யாரையோ எதிர்பார்க்கும் வேளையில் நான் வந்து நிற்கிறேனே என்றுதான்...நான் அப்புறம் வரட்டுமா?"

அவளுடைய உணர்ச்சிகளுடன் சற்று விளையாட விரும்பினேன்.

"ஓ! ஜானகியைப் பற்றிச் சொல்கிறீர்களா? வருகிற நேரந்தான்."

"யாரது ஜானகி?...ஹூம்! நான் ஏன் இதைக் கேட்க வேண்டும்? எத்தனையோ ரசிகைகள் உங்களுக்கு."

நான் சிரித்தேன். அவளுடைய முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். அது வெளுத்துப் போயிருந்தது. தன்னுடைய உள்ளத்து உணர்ச்சிகளை மறைக்கத் தெரியாதவள் அவள்.

என் சிரிப்பு அவளுக்கு அதிகத் துன்பத்தைக் கொடுத்திருக்கவேண்டும். "சரி நான் வரட்டுமா? பிறகு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டு, பதிலுக்குக் காத்திராமல் விர்ரென்று புறப்பட்டாள். கதவைப் படீரென்று அவள் வெளியே தள்ளிய போது தரையில் காபித் தம்ளர் உருளும் சத்தம் கேட்டது. மெதுவாக எழுந்து பின்னால் சென்றேன்.

ஜானகி ஒன்றும் புரியாமல் விழித்துக்கொண்டு நின்ருன். கீழே கொட்டிய காபி தரையில் அகலமாகப் பரவிக்கொண்டிருந்தது.

"பரவாயில்லை ஜானகி; இரண்டு காபி வாங்கிக்கொண்டு வா" என்றேன். அவன் ஓட்டம் பிடித்தான்.

வெளுத்திருந்த காந்தத்தின் முகம் இப்போது குபீரென்று சிவந்தது—வெட்கத்தினுலா மகிழ்ச்சியினுலா என்று தெரியவில்லை.

"ஜானகியைத் தெரிந்துகொண்டாயா காந்தம்?—ஆபீஸ் பையன்" என்றேன்.

"இந்த எழுத்தாளர்களே இப்படித்தான்; ரொம்பப் பொல்லாதவர்கள்."

"இந்தப் பெண்களே இப்படித்தான், ரொம்பச் சந்தேகப் பிராணிகள்."

எந்த வேகத்தில் அறையைவிட்டுக் கிளம்பினுளோ அதே வேகத்தில் திரும்பிவந்து எதிரே கிடந்த நாற்காலியில் 'ஜம்' மென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். பாதியில் நின்று போன கதை எங்களுக்கு மத்தியில் கிடந்தது.

"ஏன் ஸார், என்ன கதை எழுதிக்கொண்டிருக்கிறீர்கள்? கதையின் பெயர் என்ன?"

"காதல் கதை;—ஒற்றை ரோஜா!"

"எனக்கு ரோஜாவென்ருல் உயிர். அதிலும் ஒரே ஒரு ரோஜாவை மட்டும் ஒரே ஒரு இலையுடன் தனியாகத் தலையில் வைத்துக்கொண்டால் எத்தனை அழகாயிருக்கும்!"

நான் சும்மாயிருந்தேன்.

"நீங்கள் எழுதுவதெல்லாம் எனக்குப் பிடிக்கிறது—எனக்கு மட்டிலுமென்ன? ரொம்பப் பேருக்குப் பிடிக்கிறது".

"பிடிக்க வேண்டுமென்பதற்காகத்தானே எழுதுகிறேன்?"

"அப்படியென்ருல்?..."

"அழகுக் கலை செய்பவர்கள் எல்லாருமே மற்றவர்களை மகிழ்விக்கத்தான் விரும்புகிருர்கள். பூத்தொடுப்பவன் தன்னுடைய கதம்பச்சரத்தை எவ்வளவு கவனமாகக் கட்டுகிருன்! வளையல் செய்பவன் எத்தனை எத்தனை வண்ண நிறங்களை அந்த உடையும் கண்ணுடிக்குள் ஊடுருவ

விடுகிறான்!—ஏன், கடவுள் என்னும் மாபெரும் கலைஞன்கூட இத்தனை சௌந்தர்யங்களையும் இந்த உலகத்தில் ரசிக்கத் தெரிந்தவர்களுக்குத்தானே கொட்டிக் குவித்திருக்கிறான்?''

"எங்கள் காலேஜில் ஒருத்தி படித்தாள். அவளுக்கு மட்டிலும் உங்கள் கதைகள் கொஞ்சமும் பிடிக்காது!''

"ஒருத்தி என்ன, பலபேர் இருக்கலாம்...''

"அவள் 'இண்ட'ருடன் படிப்பை நிறுத்திவிட்டாள். எனக்கும் அவளுக்கும் அடிக்கடி உங்கள் கதையைப்பற்றித் தான் சண்டை!''

"அழகை ரசிக்க விரும்பாதவர்கள், ரசிக்கும் நிலையில் இல்லாதவர்கள்—இவர்களுக்காக நான் எழுதவில்லை. சமூகத் தின் நோயைத் தீர்க்கும் வைத்தியனல்ல நான். நோய் தீர்க்கும் வைத்தியர்கள் வேறே; வேதனையைக் குறைக்க முயலும் அன்புக் கலைஞர்கள் வேறே.''

"அந்தப் பெண் பெயர் லலிதா. எப்போதும் உயர்ந்த லட்சியங்களைப் பற்றியே பேசுவாள். தேவர்கள் தரையில் கால்படாமல் நடப்பார்களாம். அதைப்போல உலகில் ஒட்ட முடியாத விஷயங்களில் அவளுக்கு அதிகப் பிரியம்— எத்தனையோ குறைபாடுகள் சமூகத்தில் உள்ளபோது ஏன் இவர் காதலைப்பற்றி அடிக்கடி எழுதுகிறார் என்பாள்.''

"அவள் சொல்லுவதும் ஒரு வகையில் சரிதான், எதிர் காலத்தில் எல்லா விஷயங்களையுந்தான் எழுதவேண்டும்.''

"அவள் சொல்லுவதையா ஒப்புக்கொள்கிறீர்கள்?'' காந்தத்தின் முகம் காந்தத்தை இழந்தது.

காந்தத்தின் விசித்திரமான சுபாவத்தை எண்ணி நான் பேசாதிருந்தேன்.

"நான் உங்களிடம் ஒரு உதவிக்காக வந்திருக்கிறேன்'' என்றாள் திடீரென்று.

"என்ன உதவி?''

"கட்டாயம் செய்வீர்களா?''

"செய்ய முடிந்தால், செய்யக்கூடியதாக இருந்தால் செய்கிறேன்.''

"எங்களுடைய காலேஜில் இலக்கியக் கழகக் கூட்டம் நடைபெறுகிறது. நீங்கள் வரவேண்டும்.''

"கட்டாயம் வருகிறேன்—காபி கொடுப்பீர்களோ?"

ஜானகிராமன் கொண்டு வந்த காபியை அவளிடம் நீட்டினேன். நானும் சாப்பிட்டேன்.

"காபி கொடுக்கிறோம்; பெரிய ரோஜாப்பூ மாலை போடுகிறோம்; நிறையக் கை தட்டுகிறோம்—நீங்கள் கூட்டத்தில் பேசவேண்டும்!"

"அதுமாத்திரம் முடியாது!"

"ஏன்?"

"பேசத் தெரியாது!"

"பேசித்தான் ஆகவேண்டும். நான் உங்களை விடப் போவதில்லை."

"ஒரு பெண்ணின் எதிரிலேயே என்னால் பேச முடியவில்லையே! பெண்கள் கூட்டத்துக்கு முன்னே அகப்பட்டு விழிக்கவா சொல்கிறீர்கள்?"

காந்தா பிடிவாதம் பிடித்தாள்: "நாலு வார்த்தைகள் பேசினால் போதும். உங்களுக்குத் தெரியாவிட்டால் பேச வேண்டியதை நானே எழுதித் திருகிறேன்."

"தலைமை வகிப்பது யார்?"

"கே. சி. நாராயணசாமி."

நாராயணசாமியைப்பற்றி ஓரளவு கேள்விப்பட்டிருக்கிறேன். செல்வமும் செல்வாக்கும் உள்ள பிரபலஸ்தர். பதவிகள், பட்டங்கள் வகித்தவர். தர்மசிந்தனை உள்ளவர். வயதாகிவிட்டதால் பொதுவாழ்விலிருந்து விலகி இப்போது அமைதியாக வாழ்பவர்.

"அவரை எதற்காக அழைத்தீர்கள்?" என்றேன்.

"பணக்காரர்! பெரிய புத்தகசாலை வைத்திருக்கிறார். தலைமை வகிக்கச் சொல்லிவிட்டு மறுநாள் போய்ப் பார்த்தால் எங்களுக்கு நிறையப் புத்தகங்கள் கிடைக்கும்."

"என்னை எதற்காக அழைக்கிறீர்கள்? நான் பணக்காரனோ அரசியல்வாதியோ இல்லையே!"

"நீங்கள் எழுத்தாளர் என்பதால்தான்!"

"அப்படியென்றால்?"

"உங்களை வேடிக்கை பார்ப்பதற்காக!...எழுத்தைப் பார்த்தவர்கள் எழுதியவரைப் பார்க்க விரும்புகிறார்கள்."

அவள் சிரித்தாள்.

காட்சிசாலைக்கு வந்திருக்கும் நூதனப் பிராணியைப் போலவோ, கொலுவின் மத்தியில் நிற்கும் புதுமாதிரிப் பொம்மை போலவோ என்னை ஆக்கிக்கொள்வதற்கு நான் விரும்பவில்லை. என்றாலும் காந்தாவின் முகத்தைக் கோபத்தால் கனியவைக்க நான் தயங்கினேன்—அவள் பெண், கல்லூரிப் பெண், அதிலும் என் முதலாளியின் பெண்!

நான் ஒப்புக்கொண்டேன்.

"இன்னும் ஒரே ஒரு..." என்று இழுத்தாள்.

"உதவியா? வேண்டுகோளா? உபதேசமா?"

"உத்தரவு. கண்டிப்பான உத்தரவு!"

"முதலாளியின் மகளல்லவா? உங்கள் வீட்டுப் பூனைக் குட்டிக்குக்கூட உத்தரவிட அதிகாரம் உண்டு."

"வேண்டாம்! நான் ஒன்றுமே சொல்லவில்லை" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு எழுந்தாள்.

"உட்காருங்கள் காந்தா! உங்கள் உத்தரவுக்காக அப்புறம் உங்கள் வீட்டிற்கே நான் தேடிவரவேண்டிய அவசியம் இருக்கும்."

"என்னை 'நீங்கள்' என்று கண்டிப்பாய் அழைக்கக் கூடாது!"

"வேறு எப்படி அம்மா அழைப்பது?"

"நான் ஒன்றும் உங்கள் அம்மா அல்ல!"

"சரி; 'நீ' என்று கூப்பிடட்டுமா? அப்படியானால் நீயும் என்னை ஸார் என்று கூப்பிடக்கூடாது."

"'ஐயா அன்புள்ள ஆசிரியரே' என்று சொல்லட்டுமா?"

"நானும் உன்னை 'அம்மா காந்தாமணி தேவியாரே' என்று அழைத்தால்—"

"வேறு எப்படிக் கூப்பிடுவதாம்?"

"அண்ணு என்று சுலபமாய் அழைக்கலாமே?"

அவள் இதை எதிர்பார்க்கவில்லை. சிறிய அதிர்ச்சியை அவளிடம் கண்டேன். அதை மறைப்பவள் போல் அவள் சிரித்தாள்.

"வடநாட்டுக் கதைகளில் வரும் பெண்கள் இப்படித்தான் முதன் முதலில் ஆண்களை அழைக்கிறார்கள்" என்றான்.

"தென்னாட்டிலும் அந்த நல்ல பழக்கம் இருந்தால் என்ன?''

"ஆனால் அண்ணா என்று அழைத்தவரையே அடுத்த மாதம் கல்யாணம் செய்து கொண்டு அத்தான் ஆக்கிக் கொள்கிறார்கள்!''

நான் மௌனத்தில் முழுகினேன்.

அவள் என்னை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் தலையைக் கீழே குனிந்து கொண்டாள். அவளுடைய கரங்கள் கழுத்தில் தொங்கிய நீண்ட தங்கச் சங்கிலியை வெளியே இழுத்து அதன் மத்தியில் தொங்கிய 'டாலருடன்' விளையாடின. மறுகணம் வேகமாய் அந்தச் சங்கிலியைக் கழுத்தின் பின்புறம் வீசினாள். அவளுடைய விரல்களின் விஷமத்துக்கு இப்போது அவள் பின்னியிருந்த இரட்டைச் சடைகளில் ஒன்று அகப்பட்டது.

"நான் போய் வரட்டுமா?''—அவளுடைய வார்த்தைகள் செத்துப்போய் வெளியே வந்தன.

"சரி.''

"கதைக்கு மத்தியில் குறுக்கிட்டதற்கு மன்னியுங்கள்.''

போகும்போது கதவுப்பக்கமாக நின்று அவள் கைகூப்பினாள். எதையோ என் முகத்தில் ஆழமாகத் தேடிப்பார்த்தாள். தேடிப் பார்த்ததைத் தெரிந்து கொள்ளவில்லை போலும். வேகமாய் வெளியே நடந்தாள்.

காந்தம் என்னுடைய பத்திரிகை முதலாளி ராமலிங்கத்தின் செல்வமகள். வயதுக்கு அதிகமான உடல் வளர்ச்சி; அந்த வளர்ச்சியால் கொழிக்கும் வனப்பு; ஆற்றங்கரையில் வளரும் தென்னங்கன்றுபோல் அவள் தளதளவென்று இருந்தாள். அவளுடைய படிப்பும் பணமும் சூழ்நிலையும் அவளுக்கு அலங்காரக் கலையின் அற்புதங்களைச் சொல்லிக் கொடுத்திருந்தன. கண் கவரும் முறையில் தன்னை அழகு படுத்திக் கொள்ள ஒருநாளும் அவள் தவறியதில்லை.

அவளுக்காக ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, நான் சிறு கதையைத் தொடர்ந்து எழுதினேன்.

# 2

ஐந்து நிமிடங்கள் பேச ஒப்புக்கொண்ட தர்ம சங்கடத்திற்காக ஐந்து மணி நேரம் யோசனை செய்தேன். ஐந்து புத்தகங்களை புரட்டினேன்; ஐந்து பக்கங்கள் குறிப்பெடுத்தேன்; ஐந்து காபிகள் குடித்தேன்—சரியா ஐந்து மணிக்குக் கூட்டம்.

கூட்டம் அதிகமாய்த்தான் இருந்தது. மலர்காட்சிக்காக வந்து குவியும் பற்பல நிற மலர்க்கொத் துக்களைப்போல் கண்ணைக் கவரும் வர்ணங்களில் உடை உடுத்தி மாணவிகள் வந்திருந்தார்கள். நந்தவனத்தின் கதம்ப மணம் அங்கு வீசியது. காலை நேரத்தில் கொண்டையில் ஊசலாடிய செடிகளின் மலர்கள் அப்போது மாணவிகளின் கேசத்தைத் தழுவி வாட்டமுற்றிருந்தன.

காந்தம் அந்தக் கூட்டத்தில் மிகவும் முக்கியமான பங்கு கொண்டவள் போல அடிக்கடி குறுக்கும் நெடுக்கும் நடந்தாள். யார் யாரிடமோ சென்று முகத்தை விநயமாக வைத்துக்கொண்டு பேசினாள். இடையிடையே என்னையும் பார்த்துச் சிரித்துக்கொண்டாள்.

ஒருமுறை என்னருகே வந்து, ''பேசும்போது உங்களுக்கு என்ன வேண்டும்? சோடாவா? காபியா? தண்ணீரா?'' என்றாள்.

"குறைந்த நேரம் பேசுகிறவர்களுக்கு உங்கள் கல்லூரியில் என்ன கொடுப்பது வழக்கம்?''

''இங்கே வந்துகூட உங்களுக்கு விளையாட்டுத்தான்!''

மறுநிமிடம் காந்தத்தின் கையில் ஒரு தட்டு நிறையச் 'சாக்லெட்' இருந்தது. ஏற்கனவே அதை வழங்கிக்கொண்டிருந்த மாணவியிடமிருந்து வெடுக்கென்று பிடுங்கித்தானே அதைக் கொடுக்க ஆரம்பித்தாள். சாக்லெட் பிடிக்காத எனக்கு இரண்டு சாக்லெட்கள் கிடைத்தன—பெண்கள் தங்களுக்குப் பிடித்தமான விஷயங்களைத்தானே மற்றவர்கள் தலையிலும் வைத்துக் கட்டுகிறார்கள்!

தலைமை வகித்த நாராயணசாமிக்கு அறுபது வயதுக்கு மேல் இருக்கும். சிவப்பாக இருந்தார். நடுத்தரமான உடலமைப்பு; உயரமும் அப்படித்தான் இருந்தது. தங்க பிரேம்

போட்ட மூக்குக் கண்ணாடியும் சலவை கலேயாத வெள்ளே உடையுமாகக் காணப்பட்டார். கையில் பாரதியாரின் கவிதைகளும் வெள்ளிப் பூண் போட்ட பிரம்பும் இருந்தன. சிரித்த முகத்தோடு என்னருகில் வந்து உட்கார்ந்து இளைஞரைப் போன்ற உற்சாகத்துடன் பேசினுர். அறுபது வருடங்களேத் தாண்டிய ஒரு பெரிய மனிதர் இப்படி என்னோடு நான் ரசிக்கும் விதமாகச் சுவையுடன் பேசியது எனக்கு வியப்பாக இருந்தது.

பெரிய மனிதர்களுடைய பழக்கத்தில் எனக்கு இரண்டு விதமான அநுபவங்கள் சாதாரணமாக ஏற்பட்டிருக்கின்றன; சிலர் என்னுடைய கதைகளில் ஒன்றைக்கூடப் படிக்காமலே என்னே அளவுக்கு மீறிப் புகழ்வார்கள். இன்னும் சிலரோ என் கதைகளே எல்லாம் ஒன்றுவிடாமல் படித்திருப்பார்கள்; ரசித்திருப்பார்கள்; மகிழ்ந்திருப்பார்கள். ஆனுல் நேரில் என்னேக் காணும்போது பாராட்டக் கூடிய மனம் அவர்களுக்கு இருப்பதில்லே. அவர்களது அந்தஸ்துக்கும் வயதுக்கும் அது குறைந்த செயல் என்பது அவர்கள் எண்ணம்.

இந்த நாராயணசாமி தனிப்பட்ட மனிதராக இருந்தார். கதைகளின் பெயர்கள், கதாபாத்திரங்கள், சம்பவங்கள் இவற்றைச்சொல்லித் தம் கருத்தைக் கனிவோடு வெளியிட்டார். ஒரு எழுத்தாளன் பெருமை கொள்ளத்தக்க இன்பம் இதைப் போன்ற பாராட்டுகளில்தானே பொதிந்து கிடக்கிறது!

கூட்டம் ஆரம்பமாயிற்று. ஏற்கெனவே பல முறைகள் ஒத்திகை நடத்தித் தயார் செய்து வைத்த ஐந்து நிமிடத்துக் கருத்துக்களேக் கச்சிதமாய்ச் சொல்லிவிட்டு உட்கார்ந்தேன். நாராயணசாமி தமது முடிவுரையாக அரைமணி நேரம் பேசினுர். குரல் கணீரென்று ஒலித்தது. பாரதியாரின் கவிதை வரிகள் இடையிடையே இன்பமூட்டின. அந்த அரைமணி நேரமும் பசுஞ்சோலேயின் குளிர்நிழலில் அமர்ந்திருப்பதுபோல இருந்தது எனக்கு.

நன்றி கூறவந்த மாணவி நான் பெரிய பேச்சாளனுக மாறி விட்டதாகக் கதை அளந்தாள். நாராயணசாமியைக்

கர்ணனுக்குப் பிறகு இந்த நாட்டில் தோன்றிய ஒரே கொடைவள்ளல் என்று புகழ்ந்தாள். கூட்டம் முடிந்தது; மாணவிகளின் கையெழுத்துப் படையெடுப்பை ஒருவிதமாக முடித்துக் கொண்டு நானும் நாராயணசாமியும் சிறிது நேரம் தனியே உட்கார்ந்து பேசினோம்.

"உங்கள் கதைகளை என் மனைவியும் படித்து ரசிப்பதுண்டு. அவளுடைய விமர்சனமே புது மாதிரியாக இருக்கும்—சுவாரஸ்யமாக நேரம் போவதற்கு கதைகளும் கவிதைகளும் ஏற்ற சாதனங்களல்லவா?" என்றார்.

"கதைகளால் நான் நிறைய நண்பர்களைப் பெற்றிருக்கிறேன். ரசிக உள்ளங்களின் தொடர்புதான் எனக்கு எழுதுவதற்கு உற்சாகமளிக்கிறது."

"அவள்கூட உங்களைச் சந்தித்தால் மிகவும் சந்தோஷப் படுவாள்."

"அவர்களையும் இங்கே அழைத்து வந்திருக்கலாமே"?

"வந்திருக்கலாம்." ஒரு கணம் பெரியர் யோசனை செய்தார்.

நானும் யோசனை செய்தேன்: தமிழ் நாட்டில் பெண்களுக்குத்தான் கதை படிப்பதற்கு ஆண்களைவிட அதிகமாக நேரமும் விருப்பமும் இருக்கின்றன. நாராயணசாமியின் மனைவியும் கிழவியானாலும் பெண்தானே? இந்தத் தள்ளாத காலத்தில், குடும்பத் தொல்லைகளுக்கு மத்தியில், அந்த அம்மாளுக்குக் கதைகளை விமர்சனம் செய்யும் அளவுக்கு அதில் ஈடுபாடு இருக்குமானால் நான் பெருமைப்படத்தானே வேண்டும்?

"உங்களுக்கு இப்போது வேறு எங்கும் வேலை இல்லையே? சாயங்கால நேரந்தானே! என்னுடன் வீட்டிற்கு வந்து திரும்புவதற்கு உங்களுக்குச் சௌகர்யம் இருக்குமா?"

"இன்னொரு முறை வருகிறேனே."

"வேலை ஏதும் இல்லாவிட்டால் இப்போதே வாருங்கள்; சீக்கிரம் திரும்பிவிடலாம். அங்கே தோட்டத்தில் சுகமாகக் காற்று வீசும்."

"சரி வருகிறேன்."

திரும்பிப் பார்த்தேன். கதவருகில் காந்தம் எனக்காக நின்று கொண்டிருந்தாள். எழுந்து அவளிடம் சென்றேன்.

"வாருங்கள் போகலாம்; கார் காத்திருக்கிறது" என்றாள்.

"இன்னொரு நாள் அங்கு போய்க் கொள்ளலாம். உங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன். வேண்டுமானால் இங்கே பேசிவிட்டு இன்னும்கொஞ்சநேரத்தில் வாருங்கள்."

"இல்லை; அங்கு வருவதாக ஒப்புக்கொண்டுவிட்டேன்."

கண்களைக் கோபத்தோடு உருட்டி விழித்துவிட்டுக் காரில் போய் உட்கார்ந்தாள். காரின் கதவு படீரென்ற ஓசையுடன் மூடிக் கொண்டது.

"யார் இந்தப் பெண்?" என்றார் பெரியவர்.

"பத்திரிகையாளர் ராமலிங்கத்தின் மகள்."

"சரிதான்."

நாராணசாமியின் வீட்டுக் காம்பவுண்டுக் கதவை அவருடைய தோட்டக்காரனும் உட்கதவை வயது வந்த ஒரு அம்மாளும் திறந்தார்கள். அவர்களுக்கு நாற்பது வயதுக்கு மேல் இருக்கும். ஜரிகைக் கரைபோட்ட பட்டுப்புடவை, நெற்றி நிறையக் குங்குமம், தலை நிறையப் பூ இத்தனையும் இருந்தன. நான் அங்கு சற்றுத் தயங்கினேன். அந்த அம்மாளிடம் என்னை அறிமுகப்படுத்துவார் என எதிர் பார்த்தேன். ஆனால் அவர் வேகமாக உள்ளே சென்றதால் நானும் அவரைப் பின்பற்ற வேண்டியதாயிற்று.

தோட்டத்தில் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்திருந்தன. இருபுறமும் வரிசையாகப் பூச்செடிகளும் அவற்றிற்கு அப்பால் கத்திரி, வெண்டை முதலிய காய்கறிச் செடிகளும் பூத்திருந்தன. தோட்டத்தின் மத்தியில் கூரையால் வேயப்பெற்ற ஒரு வட்டமான சிமெண்ட் மேடை இருந்தது. அங்கே பெரியமேசை ஒன்றும் அதைச் சுற்றிச் சில மெத்தை தைத்த நாற்காலிகளும் கிடந்தன. ஒரு மூலையில் இருபது வயதுப் பெண்ணொருத்தி 'செந்தாமரை'யை வைத்துப் படித்துக் கொண்டிருந்தாள்.

"இவள்தான் லலிதா! நான் உங்களிடம் சொன்னேனல்லவா, அந்தக் கதைப் பைத்தியம். பாராட்டுவதிலும் பழித்துக் கொட்டுவதிலும் கெட்டிக்காரி!" என்ருர். அத்துடன் அவளுக்கும் என்னை, "'துரைராஜு!' செந்தாமரை பத்திரிகையின் ஆசிரியர்" என்று அறிமுகப்படுத்தினர்.

அவள் எழுந்து மௌனமாகக் கைகூப்பிவிட்டுத் திரும்பவும் அமர்ந்தாள்—என் மனம் குழம்பியது; இவளா அவர் மனைவி?

"இதோ, ஒரு நிமிடத்தில் வந்துவிடுகிறேன்; பேசிக் கொண்டிருங்கள்" என்று சொல்லிவிட்டு அவர் வீட்டிற்குள் நுழைந்தார். என்னுடைய குழப்பம் தீரவில்லை. இந்தப் பெண் அவர் மகளா? மனைவியா!

"நீங்கள் வந்து இவருக்கு?..."

"மனைவி" என்ருள் லலிதா சுருக்கமாக.

எனக்கு என்னவோ போல் இருந்தது. சுகமாக இங்கே வீசிய காற்றை நான் அப்போது உணரவில்லை. மேசையில் கிடந்த ஒரு அகலமான பத்திரிகையை எடுத்து நான் விசிறிக் கொண்டேன்—மனைவி! இந்தச் சிறு பெண் அவருடைய மனைவி!

என்னுடைய உணர்ச்சிகளுக்குள் நான் அகப்பட்டுக் கொள்ளாவண்ணம் தடுப்பவள்போல் அவள் பேசினுள்.

"உங்களுடைய கதைகளை நான் தொடர்ந்து படித்து வருகிறேன்."

"சந்தோஷம்."

"நான்கூட இன்றைக்குக் கல்லூரிக்கு வரலாமென்று நினைத்தேன்."

"வந்திருக்கலாமே! கூட்டம் நன்ருக நடந்தது."

"நான் படித்த பள்ளிக்கூடம்; இன்னும் என் தோழிகள் அங்கே படிக்கிருர்கள், கண்டால் விடமாட்டார்கள், அதனுல்தான்..."

"சரிதான்."

"காந்தம்கூட என்னோடுதான் 'இண்ட'ரில் படித்தாள்"

எனக்கு இப்போது என்னருகே உட்கார்ந்திருக்கும் லலிதா யார் என்பது விளங்கிவிட்டது. நேற்றுக் காலையில்

என்னிடம் காந்தம் கூறிய அதே அபூர்வப்பிறவியாகத்தான் இவள் இருக்கவேண்டும். தரையில் கால்படாமல் நடக்க விரும்பும் மனிதர்களைப் போல், வானத்து மீன்களை வாரி இறைத்து விளையாட விரும்பும் லட்சியப் பைத்தியம் இவள்.

"என் கதைகளைப் பிடிக்காத ஒரு பெண் என்ற முறையில் காந்தம் ஏற்கெனவே உங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிருள்."

"பிடிக்காவிட்டால் ஏன் படிக்கிறேன்!...காதலை அழகாக எழுதும் நீங்கள், மக்களின் இதர துன்பங்களையும் உருக்கமாகச் சித்திரிக்கவேண்டும்."

"அதை நான் மறக்கவில்லை. ஆனுல் மனித வாழ்வின் வளர்ச்சிக்குக் காதல் உறவு சரியான முறையில் அமைய வேண்டியது அவசியந்தானே?"

அப்போது நாராயணசாமி அங்கு வந்தார்.

"அதிக உணவைப் பயிர்செய்யும் இயக்கத்திற்கு லலிதா எவ்வளவு உதவுகிருள் தெரியுமா? இந்தத் தோடங்களெல்லாம் இவள் வந்த பிறகு கத்திரிக்காயாய்க் காய்க்கிறது. எனக்கு மட்டிலும் அதிகாரமிருந்தால் லலிதாதான் இந்த நாட்டின் உணவு மந்திரி!"

"நந்தவனமெல்லாம் சோளக்கொல்லையாக வேண்டும். எழுத்தாளர்களெல்லாம் ஏர் பிடிக்க வேண்டும் என்று உத்தரவு போட்டாலும் போடுவார்" என்றேன்.

நாராயணசாமி சிரித்தார். அவள் முகம் கொஞ்சம் சிவந்தது.

உலகத்தின் இலக்கிய கர்த்தர்களில் எங்களுக்குள் பொதுவாகத் தெரிந்த சிலரைப் பற்றிப் பேசினேம். நாராயணசாமி தம்முடைய வாசகசாலைக்கு என்னை அழைத்துச் சென்றுர். லலிதாவும் உடன் வந்தாள். ஆயிரக்கணக்கான புத்தகங்கள் தமிழும் ஆங்கிலமுமாக இருந்தன. அதை வேடிக்கை பார்ப்பதே பேரானந்தமாக இருந்தது எனக்கு. கா. ஸ்ரீ. ஸ்ரீயின் மொழி பெயர்ப்பான காண்டேகர் நாவல்களில் ஒன்றை லலிதா கையில் எடுத்தாள்.

"காண்டேகரைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்றுள்.

"அழகை உமிழும் கவிதை நடை, கவர்ச்சிகரமான உபமானங்கள், நெஞ்சோடு ஒட்டவைக்கும் சம்பவங்கள் இவை காண்டேகரின் பெருமைகள்" என்றேன்.

"ஆனால் அவருடைய பல கதைகள் ஒரே மாதிரி இருக்கின்றன. நடையின் அழகு மாறினால் போதுமா?"

"உண்மைதான், கதையின் கருத்தில் அதிக மாறுபாட்டைக் காணோம்."

நான் விடை பெற்றுக் கொண்டேன்.

"அடிக்கடி வந்து செல்லுங்கள் துரை. இந்த வீட்டில் எனக்கு ஒரு வேலையும் கிடையாது. நீங்கள் நினைத்த போதெல்லாம் வரலாம்; உங்கள் வரவு எங்களுக்கு அதிக மகிழ்ச்சி தரும்" என்றார் நாராயணசாமி.

புன்னகையுடன் லலிதா கைகூப்பினாள்.

ரசிக உள்ளங்கொண்ட இரண்டு சோம்பேறிகளும் பெரிய வாசகசாலை ஒன்றும் குளிர்ந்த தென்றல் வீசும் பசுஞ் சோலையும் உள்ள இந்த வீடு எந்த எழுத்தாளனின் மனதைத்தான் கவராமல் இருக்கும்?

## 3

'பெண்களை அலங்கரிப்பதற்காகக் கடவுள் தினந்தோறும் புத்தம்புது மலர் கூட்டத்தைச் சொரியவிட்டிருக்கும் போது, அவர்களுக்குப் பொன்னும் மணியும் முத்தும் வைரமும் எதற்கு? ஏன் அவர்கள் செயற்கையழகுச் சாதனங்களைத் தேடி அலைகிறார்கள்?' என்ற கருத்தைக் கவி தாகூர் எங்கோ ஓரிடத்தில் கூறிய ஞாபகம் இன்றைக்கு நான் லலிதாவைப் பற்றி நினைக்கும்போது வந்தது. சிறிய முத்து மாலை ஒன்றும் நீண்ட தங்கச் சங்கிலியும் போட்டிருந்தாள். கைகளில் இரண்டு கண்ணாடி வளையல்கள்; காதில் மட்டிலும் வட்டமான வைரத்தோடு பளிச்சிட்டது.

ஆரஞ்சு நிறத்தில் நூல் புடவையும்அதே துணியில் ஜாக்கெட்டும் அணிந்துகொண்டு, வடநாட்டில் நான் கண்ட ஓர் ஆசிரமத்துப் பெண்ணைப்போல் அவள் அங்கு வீற்றிருந்தாள். என்னை இவள் சாதாரணமாக ஏறிட்டுப் பார்த்தபோது அவளுடைய கண்களில் எவ்விதக் கவர்ச்சியையும் காணோம்.

ஆனால் அவை பகற்கனவு கண்டு கொண்டிருந்தன. கற்பனை நினைவுகளில் தேங்கியவை போலவும் கவிதை சொல்லிக் கொண்டிருப்பவை போலவும் அந்தக் கண்கள் விழித்தன. எனக்கு அந்தப் பார்வை, மாலை நேரத்தில் அடிவானத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் அமைதியான நீலவர்ணக் கடலாக இருந்தது.

பெரியவர் நாராயணசாமி; நான் அவரை முதல் முதலாகக் கல்லூரியில் சந்தித்தபோது அவரிடம் எனக்கு உண்டான அன்பும் மரியாதையும் அன்று மாலை லலிதாவைச் சந்தித்த பிறகு அப்படியே குறையாமல் இருந்தது என்று சொல்ல முடியாது. மனிதர்களின் விசித்திரமான ஆசைகளையும் அவற்றின் கொடுமை பற்றியும் நினைத்தேன். நாகரிகமாய்ப் பேசவும் பழகவும் தெரிந்திருக்கும் மனிதர்களின் வெளித் தோற்றங்களைக் களைந்து, அவர்களது நெஞ்சில் பிரதிபலிக்கும் எண்ணச் சித்திரங்களைத் தெரிந்துகொள்ள முடிந்தால்...

நாராயணசாமியை என்னால் வெறுத்தும் ஒதுக்க முடியவில்லை. இரண்டு மணிநேரப் பழக்கத்தில் எந்தவிதச் சக்தியாலோ எனக்கு மிகவும் வேண்டியவராகத் தோன்றலானார். அவருடைய குரலும் பார்வையும் என்னை அவரிடம் அநுதாபம் கொள்ளச் செய்தன.

காந்தம் மறுநாள் காலை எட்டு மணிக்குக் கல்லூரிக்குப் புறப்படுகிற உடையில் என் அறையில் தோன்றினாள். கையில் பெரிய 'பிளாஸ்க்' இருந்தது.

"நீங்கள் ரொம்பவும் பெரிய மனிதர் ஆகிவிட்டீர்கள்!" என்றாள் கோபத்தோடு.

"ஆக வேண்டியதுதானே!—எப்படித் தோன்றுகிறது உனக்கு? அறுபது வயதுப் பெரிய மனிதர் ஆகிவிட்டேனா!"

"அறுபது வயதானால் நீங்களும் ஒரு இளம் பெண்ணை மணந்து கொள்ளலாம்."

நான் சும்மா இருந்தேன்.

"ஆமாம், உங்களுக்கு அந்தக் கிழவரோடு என்ன வேலை?"

"உங்களுக்கு மட்டும் என்ன வேலையாம்? எதற்காக அவரைப் பேச அழைத்தீர்கள்?"

"அவரிடம் புத்தகங்கள் வாங்குவதற்காக" என்முள்.

"நானும் அதற்காகத்தான் போனேன்."

"உங்களுக்கு எந்தெந்தப் புத்தகங்கள் வேண்டும்? புத்தம் புதிதாய் நான் வாங்கித் தருகிறேன். என் சொந்தப் பணத்தில் நானே வாங்கி வருகிறேன்."

எனக்குச் சிரிப்பு வந்தது. "விரும்பும் பொருளையெல்லாம் பணத்தினுல் பெற்றுவிடமுடியாது காந்தம்" என்றேன்.

அவள் சற்றுத் தயங்கினுள்; யோசனை செய்தாள்; பிளாஸ்க்கைத் திறந்து காபியை ஊற்றி எதிரே வைத்தாள்.

"நேற்று உங்கள் கடைக் காபியைச் சாப்பிட்ட பிறகு எனக்குத் தலைவலி வந்துவிட்டது—நானே போட்டுக் கொண்டு வந்தேன். சாப்பிடுங்கள்! நல்ல காபி கொடுத்தால் நல்ல கதை எழுதுவீர்கள் அல்லவா?" என்முள்.

"இதுவரை எழுதிய கதைகள்?"

"பார்த்தீர்களா! வேண்டுமென்றே என்னிடம் வம்புக்கு வருகிறீர்களா?"

காபி குடித்தேன். நன்முய்த்தான் இருந்தது. அதனுலேயே அது அவள் போட்ட காபி இல்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். அவளுடைய அப்பா அவளுடைய சமையல் திறமையைப் பற்றி முன்பே என்னிடம் சொல்லியிருக்கிமுர். ஒரு 'காலன்' பெட்ரோலும் மூன்று நெருப்புப் பெட்டிகளும் இருந்தால் முப்பது நிமிடத்தில் அடுப்பைப் பற்றவைத்து விடுவாளாம்!

"அந்த லலிதாகூட உன்னைப் பற்றி விசாரித்தாள்" என்றேன்.

"அவளைக்கூட நீங்கள் பார்த்தீர்களா!—என்ன சொன்னுள்?"

"காந்தம் ரொம்பவும் நல்ல பெண் என்முள்."

"பொய்!"

பொய்க் கோபத்தோடு காந்தம் என்னை நோக்கிவிட்டு லலிதாவுடன் கல்லூரியில் கழித்த நாட்களைக் கூறினுள். வகுப்பிலேயே லலிதா படிப்பிலும் சுட்டித்தனத்திலும் மிகவும் கெட்டிக்காரியாம். எதைப் பற்றியுமே எதிர்வாதம் செய்வாளாம். அடிக்கடி கோபம் வருமாம். ஆனுல் எப்

போதும் அவள் தலைமையில் பத்துப் பெண்கள் கூடிக் கொண்டு வகுப்பைக் கலகலக்க வைப்பார்களாம்.

"இந்த மாதிரி அவள் இருந்திருப்பாள் என்று நினைக்கவே முடியவில்லையே" என்றேன்.

"அரை மணி நேரப் பழக்கத்தில் நீங்கள் எப்படி ஒரு பெண்ணின் குணத்தைக் கண்டு பிடிக்க முடியும்? அதுவும் உங்களைப் போலக் கதை எழுதுகிறவர்களிடம் எல்லோரும் கவனமாய்த்தானே இருக்க வேண்டியிருக்கிறது?"

அவள் என்னை உற்றுப் பார்த்துவிட்டு மேலே பேசினுள்; "பாவம்! ஒருவேளை லலிதாவின் சுபாவமே இப்போது மாறிப் போயிருக்கலாம். கிழவரை மணந்த எந்தப் பெண்ணுல்தான் சந்தோஷமாய் வாழ முடியும்?"

"ஏன் மணந்தாள்?"

"அவள் ஏழை; அவர் பணக்காரர்."

"ஏழைகளின் அன்பைக்கூடப் பணக்காரர்கள் விலைக்கு வாங்க விரும்புகிருர்கள்" என்றேன்.—நான் ஏழை என்பது காந்தத்துக்குத் தெரியும்.

"என்ன சொல்கிறீர்கள்?" என்ருள்.

"நான் நாராயணசாமியைப் பற்றிச் சொல்கிறேன்."

"அதுதானே கேட்டேன். நீங்கள் ரொம்பவும் நல்லவராயிற்றே!"

"தயவு செய்து என்னை நல்லவன் என்று சொல்லாதே. என்னை ஏமாற்ற விரும்புகிறவர்கள் எல்லோரும் அப்படித் தான் சொல்கிருர்கள்."

அவள் குரல் சற்று கடுமையாயிற்று. "நீங்கள்தான் என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்கள். இந்த இரண்டு மாதமாய் ஏமாற்றி வருகிறீர்கள்" என்ருள்.

"நாளு!"

"ஆமாம்."

"எனக்கு ஒன்றும் புரியவில்லை, காந்தம்."

"உங்களுக்குப் புரியாவிட்டால், வேறு யாருக்குத்தான் புரியப் போகிறது? நான் ஒன்றும் பச்சைக் குழந்தையல்ல!"

"பச்சைக் குழந்தையல்ல; பி. ஏ. படிக்கும் சிவப்புக் குழந்தை!"

அவளுடைய கண்ணிமைகள் துடிக்கவில்லை. உதடு மட்டிலும் துடித்தது. "நீங்கள்தான் ஒன்றுந் தெரியாத குழந்தைபோல் நடிக்கப் பார்க்கிறீர்கள்" என்றாள், இப்படிச் சொன்னபின் அவள் குனிந்த தலை நிமிரவில்லை. நீண்ட மௌனத்தில் மூழ்கிவிட்டாள்.

'காந்தம்!"

தலைநிமிர்ந்து பார்த்தாள். மேலே அவளிடம் என்ன பேசுவதென்று எனக்குத் தெரியவில்லை

"நான் போய் வரட்டுமா?"—அவள் எழுந்தாள்.

"அண்ணா என்று கூப்பிடுவதாய்ச் சொன்னாயே! ஏன் ஒரு முறைகூட அப்படி அழைக்கவில்லை?"

"அது எனக்குப் பிடிக்கவில்லை" என்று வெடுக்கெனச் சொல்லிவிட்டுப் பிளாஸ்க்கை எடுத்துக்கொண்டு புறப்பட்டாள். அவளுடைய இரண்டு சடைகளுக்கும் மத்தியில் பாலம்போல் பிணைந்திருந்த கனகாம்பரம் கீழே தரையில் விழுந்தது. அதைக் கையிலெடுத்துக்கொண்டு, "இந்தா. காந்தம்! பூ கீழே விழுந்துவிட்டது" என்றேன்.

காந்தம் திரும்பி வந்தாள்; தயங்கி நின்றாள்; பின்புறமாகத் திருப்பிக்கொண்டு, "வைத்து விடுகிறீர்களா?" என்றாள்.

"முதலாளியின் மகள் என்ற முறையில் இந்த வேலை கூடச் செய்யாவிட்டால்" என்று சொல்லி நடுங்கும் கரத்தால் பூவை அவள் தலையருகே கொண்டு சென்றேன்.

"அந்த முறையென்றால் வேண்டாம்" என்று பூவை என்னிடமிருந்து வேகமாகப் பிடுங்கிக்கொண்டு தன் கரத்தால் கசக்கியவாறே வெளியில் நடந்தாள்—அன்புக்கும் காதலுக்கும் உள்ள மாறுபாட்டைத் தெரிந்து கொள்ளாத அவளிடம் எப்படி நான் என் உள்ளத்தைத் திறந்து சொல்வது?

பதினொரு மணியிருக்கும். அலுவலக அறையில் அன்றைய தபால்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஜானகிராமன் ஒரு விலாசச் சீட்டை என்னிடம் கொண்டுவந்து நீட்டினான். 'சேதுராமன்-எழுத்தாளர்' என்ற விவரம் இருந்தது. அழைத்துவரச் சொன்னேன்.

எழுத்தாளன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்

டும் என்று சிலர் கற்பனை செய்து கொண்டிருக்கிறார்கள் அல்லவா? அந்த மாதிரித்தோற்றத்தில் ஓர் இளைஞன் கைகூப்பிக் கொண்டே வெற்றிலைக்காவி ஏறிய உதடுகளில் புன்முறுவலுடன் உள்ளே நுழைந்தான். கரையில்லாத வெள்ளை வேஷ்டியும் பழுப்புநிறத்தில் ஜிப்பாவும் அணிந்திருந்தான். வலது கையில் பளபளப்பான தோல் பை ஒன்று இருந்தது. இது வரையில் அவன் எழுதியிருக்கும் பத்திரிகைகளின் பெயர்களைக் கூறினான். முக்கியமான பத்திரிகைகள் அந்த வரிசையில் இல்லை.

"இந்தக் கதைகளைக் கொஞ்சம் பாருங்கள்; நான் சாயங்காலம் உங்களை வந்து பார்க்கிறேன்" என்று நாலு கதைகளை ஒன்றாய் எடுத்து என்னிடம் நீட்டினான்.

"நீங்கள் வரவேண்டிய அவசியமில்லை. கதைகளைப் பார்த்து விவரம் எழுதச் சொல்கிறேன்."

"இன்றைக்கு நான் அவசரமாய் வெளியூர் போக வேண்டும். எனக்காகக் கொஞ்சம் பார்க்கச் சொல்லுங்கள். உங்களுக்குப் பிடிக்காவிட்டால் வேறு பத்திரிகைகளுக்குக் கொடுக்கலாமல்லவா?" என்றான்.

'அவசரப்பட எங்களால் முடியாது; மெதுவாகத்தான் சொல்ல முடியும்' என்று கூற நினைத்தேன். அதற்குள் அவன் எழுந்து விட்டான். போகும்போது, "நாராயணசாமி இருக்கிறாரே. அவருக்கு நான் நெருங்கிய உறவு" என்று சொல்லிக் கிளம்பினான்.

உதவி ஆசிரியர் சங்கரனிடம் அந்தக் கதைகளைப் படித்துப் பார்க்கும்படி கொடுத்தனுப்பினேன். ஒரு மணி நேரங் கழித்துக் கதைகளுடன் என் அறைக்குத் திரும்பி வந்தார். "கதைகளா இவை? கற்பனை இல்லை; நடையழகில்லை; கருத்துமில்லை. உடற் சுவையின் வெறித் தன்மைகளைப் பச்சையான வார்த்தைகளில் எழுதியிருக்கிறான்" என்று கோபத்தோடு என்னிடம் கொடுத்தார். கதைகளில் ஒன்றை நானும் படித்தேன். அவர் சொல்லியது முற்றிலும் சரி என்று தோன்றியது.

சாயங்காலம் அந்த இளைஞன், சேதுராமன் வந்தான். சங்கரனும் அப்போது என்னுடன் இருந்தார்.

"கதைகளைப் படித்தோம். எங்கள் பத்திரிகைக்கு ஏற்றதல்ல—இந்தாருங்கள்" என்று கொடுத்தேன்.

"ஏன் ஏற்றதில்லை?"

"எங்கள் போக்குக்கு உங்கள் கதை ஒத்து வராது" என்றார் சங்கரன்.

"இப்படிச் சொன்னால் போதுமா? எந்த விதத்தில் சரி யில்லை என்று கதை எழுதுபவன் தெரிந்துகொள்ள வேண் டாமா?—நீங்கள்தான் காதற் கதைகளை வெளியிடு கிறீர்களே!"

"காதற் கதைகளா நீங்கள் எழுதியிருப்பவை?" என்றார் சங்கரன்.

"வேறு என்ன கதைகளாம்!"

"காதலை எழுதுவது கத்தி முனையில் நடப்பதைப்போல. அதற்குப் போதிய சிந்தனை, பயிற்சி, பொறுப்புணர்வு கண் ணியம் எல்லாம் வேண்டும்—தெரிந்ததா?" என்று சங்கரன் அவனைக் கோபமாய் விழித்துப் பார்த்தார்.

ஏதோ பதிலுக்குச் சொல்ல அவன் வாயெடுத்தான். ஆனால் ஒன்றும் பேசவில்லை.

"இனிமேல் கதைகளைத் தபாலில் அனுப்புங்கள்" என்றார் சங்கரன்.

"அனுப்பவே போவதில்லை!"

"மிகவும் நன்றி" என்றார் சங்கரன்.

மாலை ஆறு மணியான போது அலுவலகத்தில் ஒருவரும் இல்லை, எல்லோரும் ஐந்தரைக்கே புறப்பட்டு விட்டார்கள். குழாயடிக்குப் போய் முகம் அலம்பிக்கொண்டு, வேற்றுடை உடுத்து, எங்காவது சினிமாவுக்குப் போய் வரலாம் என்று கிளம்பினேன். அறையைப் பூட்டிக்கொண்டிருக்கும் சமயம் காந்தத்தின் செருப்புச் சத்தம் கேட்டது.

"எங்கேயோ புறப்படுகிறீர்கள் போலிருக்கிறதே?"

"சினிமாவுக்கு."

"நானும் வரலாமோ?"

நான் தயங்கினேன்.

"ஏன் உங்கள் தனிமை கெட்டுவிடுமோ?"

"தாராளமாய் வரலாம்-வீட்டில் சொல்லிவிட்டு வா."

அவளுடைய வீடு அடுத்தாற்போல்தான் இருந்தது.

சொல்லி வருவதாகப் புறப்பட்டவள், வாசலில் கார் வந்து நிற்பதைக் கண்டு என்னிடம் திரும்பி வந்தாள். "அந்தக் கிழம் தன் ஆசை மனைவியோடு வந்திருக்கிறது" என்று மெதுவாக என் காதருகில் சொன்னாள். நான் வெளியே வருவதற்குள் நாராயணசாமியும் லலிதாவும் உள்ளே வந்து விட்டார்கள்.

"காந்தம்!" என்று உற்சாகமாகக் கூவிக்கொண்டே குதித்தோடி வந்து அவளைக் கட்டிக்கொண்டாள் லலிதா. அவர்கள் இருவரும் தனியே கொஞ்சநேரம் பேசிக்கொண்டார்கள்.

"எங்கோ புறப்பட்டீர்கள் போலிருக்கிறதே!" என்றார் பெரியவர்.

"எங்குமில்லை. பொழுது போகாததால் சினிமாவுக்குப் போக நினைத்தேன்."

"நாங்களும் சினிமாவுக்குத்தான்—வருகிறீர்களா போய் வரலாம்?"

லலிதாவும் காந்தமும் இப்போது எங்களுக்குப் பக்கத்து நாற்காலிகளில் இருந்தார்கள். பெரியவர் என்னைச் சினிமாவுக்கு அழைத்ததைக் கேட்டு நான் காந்தத்தின் கண்களைக் கவனித்தேன். அவள் நேற்று என்னைக் கல்லூரியிலிருந்து அவர் வீட்டிற்குப் போகவேண்டாம் என்று சொல்லி விழித்தாளே அப்படி விழித்துக் கொண்டிருந்தாள்.

"வாருங்கள்; எல்லோரும் போய்வரலாம்" என்றாள் லலிதா.

"சரி, போவோம்" என்றேன்.

"நீங்கள் போய்வாருங்கள்; நான் வரவில்லை" என்றாள் காந்தம்.

"வா, காந்தம்! நாம் சந்தித்து வெகுநாள் ஆகிறதல்லவா?" என்றாள் லலிதா.

"இல்லை; எனக்கு வீட்டில் வேலையிருக்கிறது."

செருப்புகளைப் போட்டுக்கொள்ள நான் என் அறைப் பக்கம் வந்தேன். காந்தமும் பின்னால் எழுந்து வந்தாள்.

"வருகிறேன் என்றாயே, ஏன் இப்போது வரவில்லை?"

"நீங்கள் தனியாகப் போவதானால் வருகிறேன்."

"எல்லோரும் இன்றைக்குப் போகலாமே?"

"முடியாது!"

"நான் அவர்களிடம் ஒப்புக்கொண்டுவிட்டேன்..."

"நேற்றும் இப்படித்தான் சொன்னீர்கள்."

காருக்குள் அமர்ந்த நான் காந்தத்தின் முகத்தைப் பார்த்தேன். அவள் அதை வேண்டுமென்றே வேறுபுறம் திருப்பிக்கொண்டாள். நாங்கள் மூவர் மட்டிலும் சினிமாவுக்குப் போனோம்.

4

ஒரு மாதம் ஆகிவிட்டது. இதற்குள் நாலைந்து மாலைப் பொழுதுகளை நான் நாராயணசாமியின் வீட்டில் கழித்துவிட்டேன். முதல் முறையாக நான் அங்கே சென்றபோது அங்கு இரண்டு சோம்பேறிகள் இருப்பதாய்ச் சொன்னேனல்லவா? அப்படிச் சொன்னது முற்றிலும் தவறு. அங்கு இருந்தது ஒரே சோம்பேறிதான்—அந்தப் பெரியவர் நாராயணசாமி!

இந்த ஒரு மாதப் பழக்கத்தில் நாராயணசாமியிடம் நான் ஆரம்பத்தில் கண்ட குறைபாட்டை அறவே மறந்துவிட்டேன். அவருடைய சுபாவம் நான் எதிர்பார்த்ததைவிட இனிமையாக இருந்தது. முகமலர்ந்து பேசினார்; உபசரித்தார்; இளைஞரைப் போலவே பழகினார்.

லலிதா சோம்பேறியில்லை. வீட்டு நிர்வாகம் முழுவதும் அவளிடம்தான். தோட்டக்கார சுப்பன் முதல் வீட்டுத் தலைவர் நாராயணசாமி வரை எல்லாக் காரியங்களையும் லலிதாவிடம் யோசனை கேட்ட பிறகே செய்தார்கள். நாராயணசாமிக்கு அவளிடம் கேட்பதற்கு என்ன யோசனை இருக்கப் போகிறது என்கிறீர்களா?

"கலெக்டர் மாற்றிப் போகிறார்; விருந்துக்கு அழைப்பு வந்திருக்கிறது; எந்தச் சட்டை போட்டுக் கொள்வது?" என்று கேட்பார்.

"ஹிந்துப் பத்திரிகையில் பெண்கள் சொத்துரிமையைக் கண்டித்து ஒரு கட்டுரை வந்திருக்கிறது. அதற்கு மறுப்பு எழுதிப் போடட்டுமா?" என்பார்.

"சமீபத்தில் வந்திருக்கும் புதுமாடல் 'மாரிஸ்' பார்ப்பதற்கு அழகாயிருக்கிறது. இன்னொரு கார் நமக்குத் தேவைதானே? அதை வாங்கலாமா?" என்பார். எல்லாவற்றுக்கும் லலிதாவின் பதிலே முடிவான தீர்ப்பு.

அந்த வீட்டைப் பற்றி இன்னும் சிறிது விவரம் தெரிந்துகொண்டிருந்தேன்; லலிதாவைச் சிறுபிள்ளையிலிருந்து வளர்த்து வந்த அவளுடைய மாமாவும் அத்தையும் அதே வீட்டில்தான் இருந்தார்கள். மாமா ராமையாவுக்கு எந்த நேரமும் வெளிவேலைகள் சரியாக இருந்தன. சுற்றுப் பக்கங்களிலுள்ள நிலபுலன்களைக் கவனித்த நேரம்போக, வீட்டில் இருக்கும்போது அவர் சும்மா இருப்பதில்லை. ஏதாவது வீட்டுக் கணக்கை எடுத்துப் புரட்டிக் கொண்டிருப்பார். வயல் வரப்புக்கள், கணக்குப் புத்தகங்கள், கடை கண்ணிகள் இவற்றைத் தவிர அவருக்கு வேறெதிலுமே அக்கறை இருந்ததாய்த் தெரியவில்லை. அவர் வெகு காலமாகவே இந்த வீட்டின் கணக்கப்பிள்ளை. அந்தத் தொடர்பு மூலமாகத்தான் லலிதா நாராயணசாமியைக் கல்யாணம் செய்து கொண்டாளாம். அவளைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டு, அவரும் இங்கே வந்த பிறகும்கூட அந்தக் கணக்கு வேலையை ராமையா விடவில்லை.

அடுத்தாற்போல் அவர் மனைவி நாகம்மாள்; முதல்நாள். நான் வாசற் கதவருகில் சந்தித்தேனே அந்தப் பெண்மணி. அவர் நான் பார்த்தபோதெல்லாம் ஜரிகைக் கரை பட்டுப் புடவைதான் உடுத்துக் கொண்டிருந்தார். நெற்றி நிறையக் குங்குமமும் தலை நிறையப் பூவும் எந்த நேரமும் இருக்கும். அவருடைய குரலை அடிக்கடி அதிகாரத்தோரணையில் வேலைக்காரர்களிடை சமையல் அறையிலோ வீட்டின் வேறு பகுதிகளிலோ கேட்கலாம். அதே அதிகாரத் தோரணை தான் அவருடைய கணவர் ராமையாவிடம் பேசும்போதும் இருக்கும்.

அந்த அம்மாளின் பார்வை என்மீது விழும்போதெல்லாம் எனக்கு என்னவோ போல் இருந்தது. வேண்டாத விருந்தாளியை வீட்டுஎஜமானி பார்ப்பதுபோல் பார்த்தார்.

லலிதாவின் அத்தைக்குப் பெண் குழந்தை ஒருத்தி இருந்தாள். ஆறு ஏழு வயதிருக்கும். பெயர் லக்ஷ்மி. பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொடுக்கும் பாடங்களை மட்டிலும் மறந்துவிடு

வாள்; மற்றபடி அங்கே கற்றுவரும் ஆடல்களும் பாடல் களும் வீட்டையே குலுங்க வைத்துவிடும்.

ஒரு வாரத்திற்கு முன்புமாலை நேரத்தில் நான் அங்கே போனபோது தோட்டத்தின் மத்தியிலிருந்த மண்டபத்தில் லலிதா தையல் மிஷினை வைத்துத் தைத்துக் கொண்டிருந் தாள். கையால் சுற்றும் சிறிய மிஷின் அல்ல அது. கடை களில் தையல்காரர்கள் வைத்திருக்கும் பெரிய இயந்திரம். பக்கத்துமேசையில்வெட்டப்பட்ட துணிகள், கத்திரிக்கோல் நூல் உருண்டை முதலியன கிடந்தன. மேசைக்கு மறுபுறம் இருந்த சோபாவில் சாய்ந்து கொண்டு நாராயணசாமி கவி மணி தேசிகவிநாயகம் பிள்ளை எழுதிய 'ஆசிய ஜோதி'யைப் படித்துக் கொண்டிருந்தார்.

நான் அங்கு போனவுடன் இருவரும் அவரவர்களுடைய வேலையை அப்படியே போட்டுவிட்டார்கள். வேலைக்காரனை அழைத்துத் தையல் இயந்திரத்தை உள்ளேவைக்கச் சொன் ஞள் லலிதா. 'ஆசிய ஜோதி'யைக் கீழே வைத்துவிட்டுக் கண்ணுடியைத் துடைத்தவண்ணம் என்னைப் பார்த்தார் பெரியவர்.

லலிதா வைத்துக்கொண்டிருந்த சட்டையைப் பார்த்த வுடன் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளுடைய ரவிக்கையோ, அவள் தங்கையின் பாவாடையோ இருந்தால் எனக்கு வியப்பாய் இராது. பெரியவர் போட்டுக் கொள் வதற்காக வெள்ளை ஸில்க் துணியில் ஒரு சட்டையின் பெரும் பகுதியை அவள் முடித்திருந்தாள்.

"ஆச்சரியமாய்ப் பார்க்கிறீர்களே! இந்தஆறு மாதமாக எனக்கு எல்லாஉடையும் லலிதாதான் தைத்துத் தருகிருள். இவ்வளவு கச்சிதமாக நான் இதுவரையில் சட்டைகள் போட்டுக் கொண்டதே இல்லை" என்றுர் பெருமையுடன் நாராயணசாமி.

"எதிலுமே இவர்கள் சிக்கனம் பார்ப்பதில்லை. என்னைப் புகழ்ந்துபேசுகிற விஷயத்தில் கேட்கவாவேண்டும்?" என்ருள் லலிதா.

"பல வருட அனுபவமுள்ள தையல்காரிகூட சமீபத்தில் கற்றுக்கொண்ட லலிதாவிடம் பாடம் கேட்கவேண்டும்.

லலிதாவை என்னவென்று நினைத்தீர்கள்?—அவளுடைய கைத்திறமையெல்லாம் நீங்கள் கண்டதில்லையே!''

பெரியவரின் பெருமையையும் அன்பையும் நினைத்து நான் பெருமையுற்றேன். வேலைக்காரன் மிஷினைத் தூக்கிக் கொண்டு உள்ளே போனான். லலிதா அங்கே வெட்டுத் துணிகளைச் சேகரித்தாள்.

நாராயணசாமி என்னை அழைத்துக்கொண்டு தோட்டத்துப் பக்கம் இருந்த மாடிப்படிகளின் வழியே மேலே ஏறினார். மாடியில் பல அறைகள் இருந்தன அறைகளின் அடித்தளம் முழுவதும் வேலைப்பாடுகள் நிறைந்த பளிங்குக் கற்கள். எங்கு திரும்பினாலும் பல நாட்டு ஓவியர்கள் வரைந்த வண்ணச் சித்திரங்கள். பெரியவரின் கலையுணர்வு எனக்கு மகிழ்வைக் கொடுத்தது.

“இதுதான் லலிதாவின் அறை; உத்தரவின்றி உள்ளே நுழைய நமக்கு மட்டும் அநுமதி உண்டு'' என்று சொல்லிக் கொண்டே வலது புறமாக இருந்த ஓர் அறைக்குள் நுழைந்தார்.

மேசை முழுவதும் புத்தகங்கள் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. எடுத்துப் பார்த்தேன். பெரும்பாலும் பெண்கள் முன்னேற்றத்தைப் பற்றிய புத்தகங்கள்—மகாத்மா காந்தி எழுதிய ‘பெண்களுக்கு', திரு. வி. க. வின் ‘பெண்ணின் பெருமை', இன்னும் இதர ஆசிரியர்களின் ‘தமிழ் நாட்டுப் பெண்கள்', ‘ரஷ்யாவில் பெண்கள்', ‘கைத்தொழிலும் பெண்களும்' முதலிய புத்தகங்களே காணப்பட்டன

“இந்த வீட்டிற்கு வேண்டிய எல்லாத் துணிகளும்—வேலைக்காரர்களுடைய குழந்தைகளுக்குக்கூட லலிதா தான் தைத்துத் தருகிறாள்'' என்றார் நாராயணசாமி,

அறையின் மூலையில் அகலமான பெட்டியின் மேல் கையால் பின்னிய திரைத் துணிகளும் பூ வேலையுள்ள தலையணை உறைகளும் துணிப்பைகளும் மடித்து வைக்கப்பட்டிருந்தன, திருக்குறள், கீதை, பாரதி இவற்றிலிருந்து சில வரிகள் பொறிக்கப்பட்டு சுவரில் தொங்கிக்கொண்டிருந்தன

“அன்பிற்கு உருவமில்லை; நிறமில்லை; சாவில்லை. அன்பு அழியாதது.''

இந்த வரிகளை ஏனோ என் கண்கள் அந்த அறையிலிருந்த அரைமணி நேரத்திற்குள் பல தடவைகள் கவனித்தன. நானும் நாராயணசாமியும் அருகருகே உட்கார்ந்தோம். அவர் மேசையிலிருந்த விசிறியைச் சுற்றச் செய்துவிட்டுப் பக்கத்திலிருந்த ரேடியோ ஒலிபரப்பியை மெதுவாகத் திருகினார். அந்த வீட்டின் மத்தியில் ஒரு ரேடியோவும், ஒவ்வொரு அறையிலும் ஒரு ஒலிபரப்பியும் இருந்தன.

ரேடியோவிலிருந்து நாதஸ்வர கீதம் தொலை தூரத்திலிருந்து ஒலிப்பதுபோல் மெல்ல இழைந்து வந்தது.

"என்னைப் போலவே அவளுக்கும் இந்த மெல்லிய இசையில் பைத்தியம். அறையில் அவள் தனியாக இருக்கும்போது ஒன்று அவள் பாடிக்கொண்டிருப்பாள்; இல்லாவிட்டால் ரேடியோ பாடிக்கொண்டிருக்கும்" என்றார்.

லலிதாவே இப்போது அங்கு வந்துவிட்டாள்.

"காபி சாப்பிடலாம் வாருங்கள்...அல்லது இங்கேயே கொண்டு வரச் சொல்லட்டுமா?"

"இங்கேயே வந்துவிட்டால் கீழே இறங்க வேண்டிய சிரமமில்லை" என்றார் பெரியவர்.

காபி மட்டிலும் வரவில்லை; பலகாரங்களும் பழத்துண்டுகளும் உடன் வந்தன; அவளே எல்லாவற்றையும் கொண்டு வந்தாள்.

"உங்களுடைய பொழுதுபோக்கை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றேன் நான்.

"பொழுது போக்கல்ல; தொழில் என்று சொல்லுங்கள் ஒவ்வொருவரும் தம்முடைய வாழ்க்கை வசதிக்காக உழைக்க வேண்டாமா? மற்றவர் உழைப்பையே நம்பும் மனப்பான்மை எல்லோருக்கும் வளர்ந்துவிட்டால் இந்த உலகம் என்ன ஆவது?"

"நான் மாத்திரம் உழைக்க முடியாது! கண்டிப்பாய் முடியாது!"—நாராயணசாமி சிரித்தார்.

"உழைக்காமலா நீங்கள் இத்தனை பொருளையும் புகழையும் தேடினீர்கள்?—இனி நீங்கள் ஓய்வு பெறுங்காலம்; எங்களை உழைக்கச் சொல்லிப் பார்த்துக் கொண்டிருந்தாலே அது பெரிய காரியம்" என்றாள்.

"பொருளும் புகழும் கிடக்கட்டும். உன்னைத் தேடிக் கொண்டேனே, அதுதான் பெரிய விஷயம்."

அவள் வெட்கத்துடன் பேசாதிருந்தாள். நான் எனக்குள் சிரிக்க முயன்றேன். இருப்பத்தைந்து வயது இளம் வாலிபரைப் போலல்லவா அவளைப் பரிகசிக்கிறார்! அவளும் அதை ஆனந்தத்தோடு ஏற்றுக்கொள்கிறாள்?—எனக்கு, அவர்களுடைய இந்தத் தாம்பத்திய ரகசியம் சுலபமாகப் புரியவில்லை.

"கலையுணர்ச்சி உள்ளவர்களுக்கு உடல் உழைப்பில் ஆர்வம் கிடையாது என்கிறார்களே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்!" என்றார் பெரியவர்.

"நான் அதை நம்பவில்லை" என்றேன்.

"கலை வேறு, வாழ்க்கை வேறு என்று பிரித்து அறிய முயற்சி செய்யும் பைத்தியக்காரர்களின் பேச்சு அது" என்றாள் லலிதா.

"லலிதாவின் முடிவை நான் எப்போதும் ஆதரிக்கிறேன்" என்றார் நாராயணசாமி.

அன்றைக்கு நான் அவர்கள் வீட்டைவிட்டு வெளியே வரும்போது லலிதாவின் அத்தை பக்கத்து அறைக்குள் பேசும் ஒலி எனக்குக் கேட்டது. "லலிதாவுக்கு இவ்வளவு நேரம் மாடியில் என்ன வேலை? கொஞ்சமாவது அடக்கம் வேண்டாமா? மூன்றாவது மனிதர் வந்திருக்கும்போது இப்படியா அங்குபோய் நிற்பது?" என்றார்.

"நீ கொஞ்சம் பேசாமல் இரேன்" என்று கெஞ்சும் பாவனையில் ராமையா அதற்குப் பதிலளித்தார்.

அந்தக் கணத்தில் எனக்கு 'நீங்கள் கட்டாயம் செவ்வாய்க் கிழமை வரவேண்டும்' என்று லலிதா சொல்லியனுப்பியதும், 'வராவிட்டால் நாங்களே அங்கு வந்து விடுவோம்!' என்று குழந்தைபோல் நாராயணசாமி கூறியதும் நினைவுக்கு வந்தன.

செவ்வாய்க்கிழமை வந்தது. அன்று காலையே என்னுடைய வெகு நாளைய நண்பன் சாமிநாதன் என்னிடம் வந்து விட்டான். அவனுடைய சொந்தக் கிராமம் தஞ்சாவூர்ப்

பக்கம். இரண்டு மூன்று சகோதரர்கள் உண்டு. கல்யாணம் செய்துகொண்டு அவர்கள் தங்கள் வேலைகளில் கண்ணும் கருத்துமாயிருந்தார்கள். சாமிநாதன் கடைசிப் பிள்ளை. பி. ஏ. வரை படித்துவிட்டு, ஒரு வேலைக்கும் போகாமல், ஒருவர் சொல்லையும் கேட்காமல் ஊர் ஊராய்த் திரிந்து கொண்டிருந்தான். பள்ளிக்கூடத்தில் நாங்கள் ஒன்றுய்ப் படித்தோம். படிப்பு முடிந்தவுடன் பிரிந்தோம். இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை எந்த ஊரிலிருந்தாவது என் கதைகளைப் படித்துவிட்டுக் கடிதம் எழுதுவான். கடிதத்தில் உள்ள விலசாமெல்லாம் அந்தந்த ஊரில் உள்ள ஹோட்டல் அறையின் விலாசமாகத்தான் இருக்கும், ஒரே இடத்தில் அவன் நிலைத்து இருந்ததில்லை.

இயந்திர சாமான் விற்பனையில் அவனுக்கு நிறையப் பணம் வந்தது. ஆனால் அவனும் இயந்திரம் போல்தான் வாழ்ந்தான். சம்பாதிக்கத் தெரிந்த வழி அவனுக்குச் செலவு செய்யும் விதத்தில் தெரியவில்லை. எப்பொதுமே வரவுக்கு மீறிய செலவு. அந்தச் செலவு நல்ல செலவென்றும் சொல்லமுடியாது. அவன் கடிதங்களைக் காணும்போது அவன் தங்கியிருக்கும் ஹோட்டல் வாழ்வு ஞாபகம் வரும்; மிகக் கசப்பாகவும் வருத்தமாகவும் இருக்கும் எனக்கு— பெண்கள் விஷயத்தில் அவன் அதிகம் செலவு செய்வதாய் அறிந்தேன்.

பள்ளி நாட்களில் அவன் அப்படி இல்லை. மக்களின் துன்பத்தையே அடிக்கடி நினைப்பான்; ஏழைகளுக்கும் அபலைப் பெண்களுக்குமாக உழைக்கப் போவதாய்ச் சொல்வான். நாட்டின் வறுமைக்கெதிரே போராடப் போவதாய்த் திட்டங்கள் வகுப்பான்—இத்தனை நல்ல குணங்கள் உள்ளவன் இந்தமாதிரி முக்கியமான மனிதப் பண்பிலிருந்து மட்டும் எப்படி நழுவினுன் என்று தெரியவில்லை.

'பணக்காரர்களிடமிருந்து பெருந் தொகையைப் பறித்துக் கொண்டு ஏழைகளின் வயிற்றை நிரப்பும் வழிகளோடு உன்னை ஒரு நாள் சந்திக்கப்போகிறேன்' என்று முன்பு என்னிடம் கூறிச் சென்றுன். ஆனுல் இப்போது அந்த முறையில் அவன் இங்கு வரவில்லை என்பது நிச்சயமாகத் தெரிந்தது. ஏனென்றுல் அவனுடைய பெட்டி படுக்

கையைத் தூக்கி வந்தவனுக்கு என்னுடைய சட்டைப் பையில் கைவிட்டுச் சில்லரை எடுத்துக் கொடுத்தான்.

அன்று மத்தியானம் அவன் கூறினன்: "துரை! ஊர் ஊராய் அலைந்து நான் களைத்துவிட்டேன், இயந்திர வாழ்வு எனக்கு வெறுத்துவிட்டது.—நான் சொல்வது உனக்குப் புரிகிறதா? அமைதியாகக் கொஞ்சநாள் தங்க விரும்புகிறேன். பணத்தைப் பற்றிக் கவலைப்படாதே! இன்றைக்கே இந்த ஊரில் என்னுல் சம்பாதிக்க முடியும்."

"பணம் கிடக்கட்டும். எப்போதும் நீ என்னுடனேயே இரு; ஆனுல் குணத்தை மட்டிலும் பார்த்துக்கொள். என் அறை நீ வழக்கமாக வெளியூர்களில் தங்கும் ஹோட்டல் அறையல்ல!"

"தெரியும் துரை. அதற்காகத்தான் நான் இங்கு வந்தேன். நடந்தவற்றை எல்லாம் நான் எவ்வளவு தூரம் வெறுக்கிறேன் தெரியுமா? உன்னுடைய பெயருக்குத் தவறு செய்ய நான் இங்கே வரவில்லை."

"அப்படியானுல் சரி" என்றேன்.

## 5

செவ்வாய்க்கிழமை மாலை எனக்கு நாராயணசாமியின் வீட்டிற்குப் போவதில் அவ்வளவு உற்சாகமில்லை. பத்திரிகாலயத்திலேயே தங்கிவிடலாம் என்று நினைத்தேன். ஆனுல் அன்றைக்கு அவர் கூறியபடி நிச்சயம் லலிதாவுடன் இங்கு வந்துவிடுவார். இப்போது என் அறையில் சாமிநாதன் இருந்தான். அவன் இங்கே இருப்பதால் வரப்போகும் நண்பர்களுடன் பொழுது போக்குவதில் ஏதும் தடங்கல் இராது. இந்த வேளையில் காந்தமும் இங்கு வந்துவிட்டால்?

காந்தம் வந்துவிட்டால்? அவளுடைய வரவை யாரும் தடுக்க முடியாது. அவளுடைய போக்கை யாரும் மாற்ற முடியாது. அவளுடைய குறுக்கீடு நிச்சயம் தர்மசங்கடமாக இருக்குமென்பதில் சந்தேகமேயில்லை. ஏனே நான் நாராயணசாமி குடும்பத்தாருடன் பழகுவது அவளுக்குக் கசப்பாக இருந்தது.

ஆகையால் நானே நண்பரின் வீட்டிற்குப் புறப்பட்டேன்.

தோட்டத்தில் அப்போது லலிதா மட்டிலும் இருந்தாள். நாராயணசாமியைக் காணவில்லை. நான் போனதும் போகாததுமாய், "வாருங்கள், இப்போதுதான் உங்களுடைய 'ஒற்றை ரோஜா'வைப் படித்தேன். அந்த ரோஜாவில் அழகும் மணமும் இருக்கிறது; ஆனால்...." என்று பாதியில் நிறுத்தினாள்.

"கூரான முள்ளும் இருக்கிறது" என்றேன் நான்.

"நான் சொல்ல வந்ததை நீங்களே சொல்லி விட்டீர்கள்."

பெற்றவளுக்குப் பிள்ளையைப் பற்றிய பேச்சைக் கேட்கும்போது மற்ற யாவும் மறந்துவிடுகிறதல்லவா? எனக்கும் அப்படித்தான். என் கதைகளை மற்றவர்கள் பாராட்டும் போது ஒரு கணம் என்னையே மறந்து விடுகிறேன். நீங்கள் இதை இயற்கை என்றாலும் சரி, எழுத்தாளனிடம் உள்ள பலவீனம் என்றாலும் சரி—நான் நாராயணசாமியைப் பற்றியே அப்போது அவளிடம் கேட்க மறந்துவிட்டேன்.

'ஒற்றை ரோஜா'வில் வரும் பெண் அதிகச் சிந்தனையில்லாதவள். குழந்தையைப் போன்ற சுபாவங்கொண்ட நல்ல பெண். குழந்தை தன்னுடைய கண்ணுக்குக் கவர்ச்சியாகத் தோன்றும் பொம்மையிடம் திடீரென்று எத்தனை அன்பு செலுத்துகிறது? ஆனால் அந்த வேகம் எப்போதும் நிலைத்திருப்பதில்லையே,—இப்படித்தான் 'ஒற்றை ரோஜா'வில் வரும் அந்தக் கதாநாயகி ஓர் இளைஞனிடம் அளவுக்கதிகமாய் அன்பைச் சொரிகிறாள். அந்த அன்பால் அவனை அடிமையாக்கத் துடிக்கிறாள். ஆனால் அவனோ அவளைக் காதலிக்கவில்லை.

"நீங்கள் எப்போதும் உங்களைப்பற்றித்தான் எழுதுகிறீர்களோ?"

"இல்லை; எப்போதாவது என்னைப் பற்றியும் எழுதுவேன்; அவ்வளவுதான். என்னைச் சுற்றி உள்ளவர்களையும் எனக்குத் தெரிந்தவர்களையும், எனக்குக் கொஞ்சமும் தெரியாதவர்களையும் எழுதுகிறேன். மாறுபட்ட மனிதப் பண்புகளைப் பொதுப்படையாக உணரும் நெஞ்சு இருந்தால் யாரைப்பற்றி வேண்டுமானாலும் எழுதலாமல்லவா?"

"ஆனால் இந்தக் கதை உங்களுடையதுதான்!"—நான் திடுக்கிட்டேன்.

"மற்றவர்களுக்கு உங்களுடைய 'ஒற்றை ரோஜா'வின் இதழும் மனமும்தான் தெரியும். எனக்கு அதோடு முள்ளும் தெரிகிறது. ஆனால் காந்தாவுக்கு..."

காந்தாவின் பெயரை நான் கேட்டபோது என் உள்ளம் சிலிர்த்தது.

"காந்தாவுக்கு உங்கள் கதையில் உள்ள முட்கள் மட்டும் தான் தெரியும்."

சில விநாடிகள் நான் ஒன்றும் பேசவில்லை.

"உங்களுக்கு நான் பேசுவது கஷ்டமாக இருக்கிறதா?" என்றாள்.

"இல்லை; என்னுடைய நிலையை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன்."

"காந்தாவைப்பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும்; அவள் தங்கமான பெண்."

"அவளை நான் குறைகூறவில்லை. ஆனால் அவளுக்கு எழுத்துப் போர்வைக்குள்ளே இருக்கும் சாதாரண மனிதனை என்னைப் புரிந்து கொள்ள முடியாது. என் எழுத்தை ரசிப்பவர்களில் எத்தனைபேர் அதில் என்னுடைய நெஞ்சை உணர்கிறார்கள்?"

"என்றாலும்..."

"உங்களுக்கு எப்படி இந்த விவரம் தெரியும்?" என்றேன்.

"நேற்றுக்கூட காந்தம் இங்கே வந்திருந்தாள். எல்லாவற்றையும் கூறினாள். அவள் உங்களை..."

நான் பெருமூச்சு விட்டேன்.

"என்னைப் போன்ற ஒரு பெண் இந்த மாதிரி விஷயங்களை உங்களிடம் பேசுவது கஷ்டமான காரியந்தான். ஆனால் நான் என் சிநேகிதிக்கு உதவி செய்ய விரும்புகிறேன். என்னைப் பற்றி நீங்கள் வேறு விதமாக நினைத்துக்கொள்ள மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும்."

"இப்போதைக்கு நான் கல்யாணம் செய்துகொள்ள விரும்பவில்லை."

"அவசியமானால் அவள் உங்களுக்காகக் காத்திருப்பாள்."

"அவளால் அது முடியாது. நானும் அதை எதிர்பார்க்கவில்லை—ஒருவர் மற்றவரின் இன்பத்திற்காக வாழ்வதோடு தம்முடைய நோக்கத்திற்காகவும் வாழவேண்டும்."

"கலைஞரான உங்களுக்கு அவள் ஏற்றவளில்லையா?"

"கலையின் மேல் அழகைக் கண்டு ரசிக்க எத்தனையோ பேர் தயாராக இருக்கிறார்கள். தங்களுடைய இன்பத்திற்கும் கௌரவத்தற்குமாகக் கலைஞனுடன் பழகப் பலர் விரும்புகிறார்கள். ஆனால் அவனுக்குக் கண்ணீர் பெருகியோடும் சமயத்தில் அவனை ஆதரிப்பவர் யார்?—மனிதர்களை நான் குறைகூறவில்லை; அவர்களுடைய சூழ்நிலை அவர்களைப் பலவிதமாக மாற்றி அமைக்கிறது."

இந்தச் சமயத்தில் லலிதாவின் அத்தை பெண் லக்ஷ்மி ஓடோடியும் அங்கு வந்தாள். குறுகுறுத்த கண்களால் எங்கள் இருவரையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டே ஒரு மூலையில் போய் உட்கார்ந்தாள். அவளுடைய பார்வையின் கூர்மையும் பரபரப்பும் என்னைச் சிரிக்க வைத்தது. மரக்கிளையில் உட்கார்ந்து கண்ணுக்குத் தெரியாமல் அலையும் சின்னஞ்சிறு பூச்சிகளைக் கொத்தும் மரங்கொத்திப் பறவையைப் போல அவள் இருந்தாள்.

"எங்கே அவரை இன்னும் காணோமே! எங்கே போயிருக்கிறார்?" என்று பெரியவரைக் கேட்டேன்.

"இதோ வந்துவிடுவார். அவசரமாக வக்கீலுடன் வெளியில் போயிருக்கிறார். உங்களை இங்கே இருக்கும்படி கேட்டுக் கொண்டார்."

அவர் வரும்வரையில் எதையாவது படிக்கலாம் என்று, அங்கு கிடந்த பத்திரிகைகளைப் புரட்டத் தொடங்கினேன்.

"நீங்கள் கற்பனைக்காரராயிற்றே, அவரைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

இதற்கு நான் என்ன பதிலைச் சொல்லுவது?—'அவர் நல்ல மனிதர்தான்; ஆனால் சபல புத்தி உடையவர்; இல்லாவிட்டால் இப்படித் தள்ளாத காலத்தில் ஒரு கல்யாணத்தைப் பண்ணிக் கொள்வாரா?' என்று நான் அவளிடம் துணிந்து சொல்லலாமா?

அதே கருத்தை வேறு வார்த்தைகளில் சொன்னேன்: "ரொம்பவும் நல்லவர்; இளமை உள்ளம் கொண்டவர்; நட்புக்கு இவரைப் போல் மனிதர் கிடைப்பது அருமை" என்றேன்.

"நட்புக்கு மாத்திரமல்ல; வாழ்வுக்குந்தான்" என்றாள் லலிதா. அவளே மீண்டும், "உங்களுக்குப் புரியவில்லையா? அவர் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பியபோது நான் முழுச் சம்மதத்துடன் இணங்கினேன். எங்கள் வாழ்வில் எந்தக் குறையுமில்லை. நாங்கள் சந்தோஷத்தோடு வாழ்கிறோம்—கல்யாணத்திற்குப் பிறகு என்னுடைய தோழிகள் சிலர் என்னிடம் துக்கம் விசாரிக்க வந்தார்கள். அவர்களை நான் திட்டி அனுப்பினேன்!" என்றாள்.

"நான் ஒன்றும் அப்படி நினைக்கவில்லை. என்னைத் திட்டி அனுப்பமாட்டீர்களே?"

"என்னிடம் அனுதாபம் கொள்ளாமல் இருந்தால்..." என்று சொல்லிச் சிரித்தாள்.

அவளிடம் எப்படி அனுதாபம் கொள்ளாமல் இருப்பது? அவளுடைய முகத்தின் சோகத் திரையைக் கண்ட பிறகும் அவள் தனக்குத்தானே ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பிடிப் பற்ற வாழ்க்கை முறையை உணர்ந்த பிறகும் அவளிடம் அனுதாபம் கொள்ளாமல் இருக்க முடியுமா?

"பற்றற்ற வாழ்வு என்று சொல்கிறீர்களே, அதில் உங்களுக்குப் பற்றுதல் உண்டோ?" என்றேன்.

"பள்ளிக்கூடக் காலத்திலேயே நான் ஆடம்பரத்தை விரும்பவில்லை; அப்போது அதற்கு வசதியும் கிடையாது. இப்போது வசதி உண்டு; விரும்பவில்லை."

எனக்குத் தாகமாக இருந்தது.

"கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா, லக்ஷ்மி" என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்த சிறுமியிடம் கேட்டேன்.

அவள் எழுந்து குதித்துக்கொண்டே ஓடிப்போய், ஒரு தம்ளர் தண்ணீரை வழியெல்லாம் சிந்திக்கொண்டே வந்து தன் பிஞ்சுக்கரங்களால் என்னிடம் நீட்டுவாள் என்று எதிர் பார்த்தேன். ஆனால் இருந்த இடத்தைவிட்டு அவள் அசையவில்லை.

"ஊஹூம்" என்று தலையை ஆட்டினாள்.

"போக்கிரிப் பெண்ணே! ஒரு நாளும் சொன்ன சொல்லைத் தட்டமாட்டாயே! இன்றைக்கு என்ன வந்துவிட்டது உனக்கு?" என்று லலிதா தானே தண்ணீர் கொண்டு வர எழுந்தாள்.

"அம்மாதான் என்னை இதே இடத்திலே இருக்கச் சொன்னாங்க. நீங்க பேசறதையெல்லாம் கேட்டு வந்து சொல்லச் சொன்னாங்க..."

அதற்குமேல் லலிதா அவளைப் பேசவிடவில்லை. கோபமாய்க் கரத்தைப் பற்றி உள்ளே இழுத்துக் கொண்டு போனாள். சமையல் அறையில் லலிதாவின் சத்தம் அதிகமாய்க் கேட்டது. ஆனால் அடுத்த நிமிடமே கையில் வெள்ளித் தம்ளருடன் சிரித்த முகத்தோடு என்னிடம் வந்தாள். தண்ணீருக்குப் பதிலாய்ப் பனிக்கட்டி போட்ட குளிர்ந்த நன்னாரி சர்பத் இருந்தது.

"தண்ணீர்தானே கேட்டேன்?"

"இந்த இரண்டு நிமிடத்தில் இந்த இடம் அதிக உஷ்ணமாகி விட்டதல்லவா?"

அவளும் சிரிக்க முயன்றாள்; நானும் சிரிக்க முயன்றேன்; இருவராலும் சிரிக்க முடியவில்லை.

லலிதா என்னிடம் அதிக உற்சாகத்தோடு கவிதைகளைப் பற்றியும் கவிஞர்களைப் பற்றியும் பேசினாள். கதாசிரியர்கள், சினிமாக்காரர்கள், அரசியல்வாதிகள், உலகயுத்தம் இந்த மாதிரி எல்லா விஷயங்களைப் பற்றியும் பேசி என் மனத்தை ஏதாவது ஒன்றில் லயிக்கச் செய்யப் பிரயாசைப் பட்டாள். நானும் அவளுடைய சிரமத்தை உணர்ந்து அவளைத் தேற்றுவதற்காக அவள் பேச்சில் ரசனை காட்ட முயற்சித்தேன். என்றாலும் எங்கள் இருவருக்குமே எங்களுடைய இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டுத் தெரியாமல் இல்லை.

இந்தச் சமயத்தில் பின்புறம் ஒரு குரல் ஒலித்தது: "ஆசிரியர் ஸார், வணக்கம்!"

திரும்பிப் பார்த்தேன்.

சேதுராமன் கூப்பிய கரங்களைக் கலைக்காமலே கண்களால் சிரித்தவண்ணம் நின்று கொண்டிருந்தான்.

"வணக்கம், உட்காருங்கள்" என்றேன்.

"அத்தானை உங்களுக்கு முன்பே தெரியுமோ?" என்றாள் லலிதா.

"தெரியும்;—ஒரு நாள் சந்திப்பு."

"உதவி ஆசிரியர் சுகமா?" என்றான் சேது. என்னைவிட அவரிடம்தான் அவனுக்கு அதிகக் கோபம்.

"சுகமாக இருக்கிறார்."

'என் கதைகள் இவருடைய பத்திரிகைக்கு மட்டிலும் பிடிக்கவில்லையாம்' என்றான் லலிதாவிடம்.

"நீங்கள் கதை வேறு எழுதுகிறீர்களா?"

"ஏன் எழுதக்கூடாதா?"

"படிப்பதற்கு ஆள் வேண்டுமே."-அவள் சிரித்தாள்.

"படிப்பதற்கு மாத்திரம் நான் ஆள் தேடப் போவதில்லை; படித்துவிட்டுச் சிரிக்கவும் ஆள் தேடுகிறேன்."

"கோபமா அத்தான்?"

"எனக்கென்ன கோபம்? நான் எழுதும் கதையைப் படித்துவிட்டு நீங்கள் கோபப்படாமல் இருந்தால் போதும்."

"ஒன்றும் புரியவில்லையே?" என்றாள் லலிதா.

"இப்போது புரியாது நான் ஒன்றும் இவரைப்போல் கற்பனைக் கதை எழுகிறவனல்ல. உண்மைக் கதைதான் எனக்கு எழுதத் தெரியும்"

நான் அவனை உற்றுப் பார்த்தேன். அவனும் என்னைப் பார்த்தான்.--அந்தப் பார்வையில் தெறித்த வஞ்சம்!

"இவர் எனக்கு எப்படி உறவு என்று உங்களுக்குச் சொல்லவில்லையே! என் அத்தையின் தங்கைபிள்ளை; எனக்கு அத்தான முறை வேண்டும" என்றாள்.

ஏனோ எனக்கு அங்கே அதற்குமேல் இருப்புக்கொள்ளவில்லை; புறப்படுவதற்காக எழுந்தேன்.

"அவர் வந்துவிடுவார்; வந்த பிறகே போகலாம்" என்றாள் லலிதா.

"நான் இருப்பது ஆசிரியருக்கு இடைஞ்சலாயிருந்தால் நானே போகிறேன்" என்றான் சேது.

இதற்குள் அங்கு வேறொரு பெண் வந்து சேர்ந்தாள். அவளுடைய அலங்காரம் கண்ணைப் பறித்தது. கி. பி. 2000

வருடத்தில் அமெரிக்க நாட்டு நடிகைகள் அணியவேண்டிய உடைகளை எப்படியோ தெரிந்துகொண்டு, இப்போது, அந்த நாகரிகத்தைத் தன்னிடம் வரவழைத்துக் கொண்டிருந்தாள். நான் அங்கு வரவிருப்பதைத் தெரிந்து என்னைச் சந்திக்க வந்தாளாம்; லலிதாவின் பள்ளித்தோழி. இப்போது கல்லூரியில்தான் படிக்கிருள். பெயர் மாலதி.

"ரொம்ப நன்ருய் எழுதுகிறீர்கள், ஸார்" என்று ஆரம்பித்து, அவள் படித்த ஆங்கிலத் துப்பறியும் நவீனங்களின் பெயரையெல்லாம் ஒப்பித்துவிட்டாள். பேச்சுக்கு மத்தியில் ஒருமுறைகூட என் சிறுகதையோ நாவலோ குறுக்கிடவில்லை. அரைமணி நேரத்தில் ஐம்பதுமுறை அவள் கண்கள் சுழன்று விட்டன. பற்களால் தன் சேலைத் தலைப்பைப் படாதபாடு படுத்திவிட்டாள். நாற்காலியில் இருப்புக்கொள்ளாதவள் போல் இருபது தோற்றங்களில் மாறி மாறி உட்கார்ந்தாள். சேதுராமன் அவளையே வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தான்.

அவளுடைய தோழிகள், தோழர்கள், அவள் குடும்ப கௌரவம், சொத்துசுகம்;அவளுடைய எதிர்காலத் திட்டம் எல்லாம், நான் நொடிப் பொழுதில் தெரிந்துகொண்டேன். மேலும் மேலும் அவளுடைய பேச்சில் ஆண் நண்பர்கள் வந்து விழுந்தார்கள். நடிகர்கள், அரசியல்வாதிகள், பேச்சாளர்கள் பலரை அவளுக்குத் தெரியுமாம்.

முதல் ஐந்து நிமிடங்கள் அவளுடைய பேச்சை என்ளுல் கேட்க முடிந்தது; அடுத்த ஐந்து நிமிடம் சகித்துக்கொண்டிருந்தேன்; பிறகு தலைவலி வந்துவிட்டது. கடவுளே, எந்த அப்பாவி இவளுக்கு வந்து புருஷனுய் வாய்க்கப் போகிருனே?- பெண்களுடைய முன்னேற்றத்தை நான் முழுவதும் ஆதரிக்கிறேன்; ஆனுல் இந்தப் பைத்தியக்காரத்தனத்திற்கும்தான் 'முன்னேற்றம்' என்று பெயரானுல் அது நாசமாய்ப் போகட்டும்!

சமயத்தில் அங்கு வந்து சேர்ந்த நாராயணசாமி அவளுடைய பேச்சிலிருந்து என்னைக் காப்பாற்றினுர். "உங்களை வருகிறவழியில் அலுவலகத்தில்போய் பார்த்துவிட்டுத்தான்

வருகிறேன் என்ருர். அவருடைய அன்பு எனக்குத் தென்றலின் இனிமையைத் தந்தது.

## 6

காந்தாவின் தகப்பஞர் ராமலிங்கத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய கட்டம் இப்போது வந்திருக்கிறது. 'செந்தாமரை'யை அவர் பல வருடங்களுக்கு முன்பு ஆரம்பித்த போது, மிகவும் வசதிக் குறைவோடு தமிழார்வத்தையும் தன்னம்பிக்கையையும் துணையாகக் கொண்டுதான் ஆரம்பித்தார். கஷ்டப்பட்டு உழைத்துப் பத்திரிகையை நல்ல துறையில் நிலை நிறுத்திஞர். பெயரும் புகழும் அவரைத் தேடிக் கொண்டு வந்தன. ஆனல் பணம் மட்டிலும் பதுங்கிக் கொண்டது. பத்திரிகையை மட்டும் நம்பிஞல், பட்டினியும் பெருமையுந்தான் மிச்சம் என்பதை உணர்ந்து, பத்திரிகையால் வந்த செல்வாக்கைப் பணத்தின் வழியே திருப்பிஞர். பல கம்பெனிகளில் பங்குதார் ஆகி பல கம்பெனிகளைப் கவிழ்த்துப் பணக்காரர் ஆனுர்.

நான் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பிறகு என்னுடைய போக்கில் அவர் சாதாரணமாகக் குறுக்கிடுவதில்லை. எழுத்தாளர்களுக்கு அன்பளிப்பு அளிப்பதில் மாத்திரம் நான் அதிகத்தாராளமாக இருப்பதாக அவ்வப்போது சாடையாகக் குறிப்பிடுவார். "நம்முடைய பத்திரிகையின் நிலைக்கு இது அதிகமில்லை?" என்பார்.

"நம் பத்திரிகை நிலை நன்ருக இருக்க, அவர்கள் கதைகள் அவசியம். அவர்களுடைய நிலைக்கு நாம் கொடுப்பது மிகவும் குறைவு!"

"மற்றபத்திரிகைகள் நம்மைவிடக் குறைவாகக் கொடுக்கின்றனவே?"

"தரமும் அதற்குத் தகுந்தாற்போல்தான் இருக்கிறது' வறண்ட நிலத்தில் எப்படி இலக்கியப் பயிர் வளரும்? எழுதுகிறவனை ஏமாற்றிவிட்டு 'இலக்கிய வளர்ச்சியில்லை' என்று பேசுவதால் என்ன பலன்?"

ராமலிங்கம் யோசனை செய்வார்.

நானும் யோசிப்பேன்; அச்சுத் தொழிலாளி கூலி குறைவாக இருந்தால் வேலை நிறுத்தம் செய்கிருன். காகிதக்

காரனுக்குப் பணம் பாக்கி என்ருல், அவன் பத்திரிகை முதலாளியையே பாங்கில் அடகு வைத்து விடுகிருன்—ஒரே ஒருவனுல் மாத்திரம், பத்திரிகைக்கோ, பத்திரிகையாள ருக்கோ இடைஞ்சல் இல்லை. அவன் எழுத்தாளன்!

ஓவியன் பலவிதப் படங்கள் ஒரே மாதத்தில் வரைய முடியும்; இசைக் கலைஞன் சில பாட்டுக்களை வைத் துக்கொண்டு பல அரங்குகளில் பணம் பெற முடியும். நடிகனே, நடிகையோ, 'எந்தப் படத்தில் நடிக்கிருேம்' என்ற விவரங்கூடத் தெரியாமல் உடைகளை மாற்றிக்கொண் டால் போதும். ஆனல் எழுத்தாளன் ஒவ்வொரு சிறிய கதைக்கும் ஒரு புதிய கற்பனை செய்தாக வேண்டும். மாதத் தில் பத்துக் கதைகள் அவன் புதியனவாகவோ புதிய முறை யிலோ எழுத முடியுமா? அப்படி அவன் எழுதினுலும் இந்த நாட்டில் அவன் தன் எழுத்தைக்கொண்டு வாழ முடியுமா?

ராமலிங்கத்தைச் சமாதானம் செய்வதற்கு நான் இந்த விவரத்தைக் கூறுவேன். அவர் பதிலளிக்காமல், "சரி, உங்கள் இஷ்டம்'' என்று மெதுவாய்க் கூறிவிட்டு எழுந்து செல்வார்.

காந்தம் என்னேடு பழகும் நோக்கத்தை அவர் இது வரையில் தெரிந்து கொள்ளாமல் இருக்கமுடியாது. காந்தத் தைப் பற்றித்தான், தன் உணர்ச்சிகளைக் கொஞ்சமும் மறைக்கத் தெரியாத பேதை என்று சொல்லியிருக்கி றேனே!—யார் கண்டார்கள்? ஒருவேளை அவளே தன் அப் பாவிடம் "நான் அவரைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேனப்பா'' என்று சொல்லியிருந்தாலும் இருப்பாள்.

என்னை அவள் மணந்து கொள்வதில் ராமலிங்கத்திற்கு ஏதும் தடை இருக்காது. தவிரவும் காந்தம் வைத்ததுதான் அந்த வீட்டில் சட்டம். அவரால் அதைமீற முடியாது. அத்தோடு என்னை மருமகனுக்கிக் கொண்டால் எனக்குச் சம்பளம் கொடுக்க வேண்டிய சிரமமும் குறையும்! சொந்தப் பத்திரிகை ஆகிவிடுவதால் நானும் கண்டபடி எழுத்தாளர் களுக்குப் பணத்தைக் கொடுத்து விரயம் செய்துவிட மாட்டேன்!

காலை நேரம் என் அறையில் தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தேன். சாமிநாதன் எங்கோ வெளியில் போயிருந்தான். அறைக்கதவு சத்தமில்லாமல் உள்ளே திறந்தது. காந்தம் தயக்கத்துடன் நின்றுகொண்டிருந்தாள். உட்காரச் சொல்லி அழைத்தேன். எதிரே நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"உங்களிடம் ஒரு விஷயம் கேட்கவேண்டும்; நேரடியாகப் பதில் சொல்வீர்களா?"

எடுத்த எடுப்பில் அவள் இப்படிக் கேட்டது, எனக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. என்னிடம் பேசவேண்டும் என்பதற்காகவே அவள் சொல்லம்புகளைக் கூர்மையாக்கிக் கொண்டு வந்திருக்கிறாள் என்பதைப் புரிந்துகொண்டேன். பதிலளிக்காமல் அவள் முகத்தை நோக்கினேன்.

"நீங்கள் வேறு யாரிடமாவது அன்பு கொண்டிருக்கிறீர்களா?"

"அன்பு ஒரு எல்லைக்குள் கட்டுப்பட்டதில்லையே? நான் பலரிடம் அன்போடு பழகுகிறேன். ஆனால் நீ சொல்லும் விதத்தில்......அதாவது......நான் யாரையும் காதலிக்கவில்லையே?"

"உண்மைதானா?"

"ஆமாம்."

"பொய்! என்னிடம் ஏன் மறைக்கிறீர்கள்? உங்களுடைய அன்பின் விசித்திரம் எனக்கு நன்றாய்த் தெரிந்துவிட்டது. கண்ணியத்தை மறந்த நீங்கள், எப்படி என் அன்பை உணரப் போகிறீர்கள்? நீங்கள் அந்த லலிதாவை..."

"போ வெளியே!" என்று கத்தினேன். அவள் போகவில்லை.

ஐந்து நிமிடங்கள் சென்றன. வெந்து கொண்டிருந்த என் மனம் அவள் கண்ணீர் விடுவதைக் கண்டு வேகம் தணிந்தது.

"காந்தம்! உன்னை நம்பச் செய்வதற்கு என்னால் முடியாது. ஆனால் ஒன்றை மட்டிலும் நீ புரிந்துகொள்; அன்பு என்பது வேறு; ஆசை என்பது வேறு."

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்—ஒன்று மட்டிலும் உண்மை. உங்களுக்கு நெஞ்சே கிடையாது, நீங்கள் எழுது

வதெல்லாம் மற்றவர்களை ஏமாற்றுவதற்குத்தான்.''

"காந்தம்! கலைஞனையும் லட்சியவாதியையும் மணந்து கொண்டால் உன்னைப்போன்ற பெண்ணுக்கு அவள் எதிர் பார்க்கும் இன்பம் கிடைக்காது. கல்யாணத் தேதியை முடிந்தவரை நான் தள்ளிப்போட விரும்புகிறேன்.''

"பொறுப்பை ஏற்பதற்கு உங்களுக்குத் துணிவு கிடையாது. நீங்கள் கோழை!''

''கோழை என்ருலும் சரி; கலைப் பைத்தியம் என்ருலும் சரி.''

"என்ன செய்யப் போகிறீர்கள், எதிர்காலத்தில்?''

''மக்களின் துன்பத்தைத் துடைக்க என் எழுத்தைக் கருவியாக்கப் போகிறேன். சமுதாயப் புரட்சிக்காகப் பெரிய பெரிய மலைகளை என்னல் புரட்ட முடியாவிட்டாலும் சமுதாயத்தின் வெப்பத்தைத் தணிக்கும் தென்றலாக நான இருக்கலாமல்லவா? சின்னஞ்சிறு கதைகள் சொல்லி, மனிதரின் மனத்துள்ளே தொழில் புரிவதும் ஒரு தொண்டு தானே?''

"எழுத வேண்டாமென்று உங்கள் கைகளை நான் பிடித்துக் கொள்வேனு?''

''நான் உன்னை முதல் முறை பார்த்ததிலிருந்தே தங்கையாக்கிக் கொண்டேன், வேறு விதமாக நினைக்க முடியாதது என் தவரு?''

"சுயநலக்காரர்!''

"காதலிப்பது கூடச் சுயநலந்தான்.''

''உண்மையைச் சொல்லுங்கள்; ஏற்கெனவே நீங்கள் யாரையும் காதலித்து இழந்திருக்கிறீர்களா?''

அவளுடைய மனம் மாறிக்கொண்டு வருகிற நிலையை உணர்ந்தேன். அதை இன்னும் சரியாக மாற்ற வேண்டுமானல் அதற்கு ஏற்ருற்போல் எதையாவது சொல்லவேண்டும். இதுவரை நான் யாரையும் காதலித்ததுமில்லை; இழந்ததுமில்லை. கண்டதும் காதல், காணுமலே காதல், முதற் காதல் என்ற கவர்ச்சியான வாக்கியங்களில் எனக்குக் கொஞ்சமும் நம்பிக்கை கிடையாது. காதல் என்பது அவ்வளவு எளிமையாகிவிட்டால், அப்புறம் உலகில் ஒருவரை ஒருவர் காதலிக்கவே மாட்டார்கள்! சுலபமாகக் கிடைக்கக்

கூடிய விஷயமாக இருந்தால், யார்தான் அதில் அதிகமான அக்கறை செலுத்த முடியும்? என்ருலும் காதல் கதைகளை எழுதும் ஆசிரியனுகிய நான் அவளைத் திருப்தி செய்வதற்காக இரண்டு பொய்க் கதைகளைத் தயார் செய்தேன். 'ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை முடிக்க வேண்டும்' என்று சொன்னவர்கள் 'பதினுயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்திலிருந்து தப்பவேண்டும்' என்ற உண்மையை ஏன் உணரவில்லை?

நான் கதை சொன்னேன்:

'முதல் முதலில் ஒரு ஜமீன்தாரரின் மகளைக் காதலித்தேன் நல்லவேளையாக அந்த ஜமீன்தாருக்குத் தெரியு முன்பே, எங்கள் காதல் முறிந்துவிட்டது. தெரிந்திருந்தால் என் தலையைச் சீவிக் கொண்டுபோய் அவருடைய வேட்டை நாய்க்குப் போட்டிருப்பார்.''

''எப்படி அது முறிந்தது?'' என்று கேட்டாள்.

''என்னை அவள் கோட்டும் ஸூட்டும் போட்டுக் கொள்ளச் சொன்னுள். நான் 'சட்டையும் வேட்டியுந்தான்' என்றேன் இவ்வளவுதான் விஷயம்.''

''அவளுக்காகப் போய் உயிரை விடக்கூடிய ஆபத்தில் இருந்தீர்களே! நல்லவேளையாகத் தப்பினீர்கள்.''

''நானும் அதை எண்ணித்தான் சிரிப்பதுண்டு. சில பெரிய இடங்களில் காதலுக்காக இருக்கும் மதிப்பு சட்டைத் துணிக்குள்ள மதிப்புதான். சலவையான சமயம் சட்டை பளபளப்பாக இருக்கும்; பிறகு மடிப்பு கலையும்; அழுக்காகும் கிழிந்து போகும்;—அப்புறம் அதை எறிந்துவிட்டு வேறு சட்டை போட்டுக் கொள்ளலாம்!''

''உம் அப்புறம்?'' என்று அவள் அக்கறையோடு கேட்டாள். பாட்டியிடம் கதை கேட்கும் குழந்தையின் ஆர்வம் அவளிடம் இருந்தது.

''அடுத்தாற்போல் வேறு மதத்தைச்சேர்ந்த பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினேன். இதை அறிந்த அவள் பெற்ருேர்கள் ஊரைவிட்டே மாற்றிக்கொண்டு போய்விட்டார்கள்!''

''ஊரைவிட்டு மாறினுல் என்ன?''

“மனமும் மாறிவிட்டது; அதைத்தானே சொல்ல வந்தேன்! இரண்டு மாதங்கள் கழித்து அவளைப் பார்த்தபோது, ‘ஊரைவிட்டு வந்த மூன்று நாள் பைத்தியம் பிடித்த மாதிரி இருந்தேன். பிறகு எல்லாம் சரியாகிவிட்டது. எனக்கு அடுத்த மாதம் கல்யாணம். அழைப்பு அனுப்புகிறேன்!’ என்ருள்.”

“சரிதான்...”

சற்றுநேரம் மௌனம் நிலவியது.

“காந்தம்! என்னை எப்போதும் அண்ணு என்று அழைக்கிருயா? அண்ணு என்றே நினைக்கிருயா?”

அவள் சிரித்தாள்; அவளைச் சிரிக்கச் செய்து நான் அவள் அறியாவண்ணம் மனதிற்குள் அழுதேன்.

“நீங்கள் என் அண்ணு! ஆனுல் வடநாட்டு கதைகளில் வருமே அந்த மாதிரி அண்ணு அல்ல!”

என்னுடைய நெஞ்சு இலேசாயிற்று. பெருமூச்சுவிட்டுக் கொண்டு நாற்காலியில் சாய்ந்தேன். காபி வரவழைப்பதற்காகக் கதவுப் பக்கம் பையனைப் பார்த்தபோது, சாமிநாதன் அங்கு வந்து எட்டிப் பார்த்துவிட்டு அவசரமாகத் திரும்பிமுன். உள்ளே வரவில்லை.

“யார் இவர்?” என்ருள் காந்தம்.

“என் நண்பன் சாமிநாதன்.”

“உங்களைப் போலவே இருப்பாரோ? பெண் வாடையே பிடிக்காதோ?”

“அவனுக்கு ரொம்பப் பிடிக்குமே!”

“பிறகு ஏன் அவர் என்னை நேற்று அந்த விரட்டு விரட்டிஞராம்?”

“நேற்ரு?”

“கதையைக் கேளுங்கள்: நேற்று மாலை உங்களைத் தேடி இங்கே வந்தேன். ‘யார் நீங்கள்?’ என்ருர். கதை எழுதுகிறவள்; ஆசிரியரைப் பார்கக வந்தேன் என்றேன். இது நேரமல்ல; ஆசிரியரைப் பார்க்கும் இடமுமல்ல; இது அவர் தனி அறை என்ருர், ‘அவர்தான வரச் சொன்ஞர்’ என்றேன். சொன்ஞரா? அப்படியாஞல் நாளைக்கு ஆபீஸ் நேரத்தில் வந்து பாருங்கள்’ என்ருர். இப்படிச் சொல்லி

விட்டு என்னை நாலுதரம் மேலும் கீழும் உற்றுப் பார்த் தார்.''

"பார்த்திருப்பான்!''

"ரொம்பப் பொல்லாதவர்!''

"பொல்லாதவன் தான்!''

கலகலப்போடு காந்தம் நாற்காலியைவிட்டு எழுந் தாள். "வரட்டுமா, அண்ணு'' என்று அவளுடைய அழகான பல்வரிசை, வெளியே தெரியும்படி சிரித்துவிட்டு அறைக்கு வெளியே நடந்தாள்.

அவள் போனதற்கப்புறம் சற்றுநேரம் மேசையில் தலை யைக் கவிழ்த்துக்கொண்டு கிடந்தேன். இருள் பரவும் மாலை நேரத்தில், கடற்கரை மணற்பரப்பில் தனியாகப் படுத்திருக்கும்போது ஓர் உணர்வு தேங்குமே, அந்த நிலை அப்போது இருந்தது. பூகம்பத்தையும் அதன் பயங்கரவிளைவு களையும் எதிர்பார்த்திருந்த எனக்கு காந்தத்தின் பிரச்னை இவ்வளவு சுலபமாகத் தீர்ந்துவிட்டதை நம்பவே முடிய வில்லை. அதிசயத்திலும் அதிசயந்தான்; பெண்கள் விசித் திரமானவர்கள்!

தலையைத் தூக்கிப் பார்த்தபோது காந்தம் உட்கார்ந் திருந்த இடத்தில் சாமிநாதன் இருந்தான்

"யோசனை பலமாயிருக்கிறதே!''—அவன் கேலியாகச் சிரித்தான்.

"ஒரு யோசனையுமில்லை.''

"கதாசிரியரே! நான் ஒரு கதை சொல்கிறேன்; கேட்கி ருயா...?''

"என்ன கதை?'' என்று கேட்பது போல அவனைப் பார்த்தேன்.

"சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்காக ஓர் இளைஞன் குருநாதரைத் தேடிப் போனுனும். அங்கே குரு சிரேஷ்டர் தம்முடைய ஐந்தாவது மனைவியோடு மணப்பந்தலில் உட் கார்ந்திருந்தாராம்!''

சாமிநாதன் நூறு ரூபாய் நோட்டு ஒன்றை என்னிடம் கொடுத்தான்; அவன் பேசியிருக்கும் கமிஷன் வியாபாரத் திற்கு இது முன் பணமாம். இன்னும் பாக்கிப் பணம் இரண்டு நாட்களில் வருமாம்.

"நேற்று இவளை வரச் சொல்லிவிட்டு எங்கே போயிருந்தாய்?"

"நான் வரச் சொல்லவில்லை."

"ஒரு இடமாக இருந்தால் உனக்கு நினைவிருக்கும்; பல பேர், பல இடங்கள், பல நினைவுகள்..."

"சாமிநாதா!" என்றேன் கோபத்தோடு.

"துரை, நான் கண்ணால் பார்த்ததையும் காதால்கேட்டதையும் சொல்கிறேன்."

"இவள் கதை எழுதுகிறவள் அல்ல; பத்திரிகை முதலாளியின் மகள்; என் தங்கை மாதிரி—உன்னை நேற்று ஏமாற்றியிருக்கிறாள்."

"தங்கை மாதிரியா!" என்று கேட்டுக் கொண்டே அவன் ஆனந்தத்தோடு என்னைப் பார்த்தான், "ரொம்பப் பொல்லாதவள் போலிருக்கிறதே!" என்றான். அப்போது எனக்குக் காந்தம் அவனைப் பற்றிச் சொன்ன 'ரொம்பப் பொல்லாதவர் போலிருக்கிறதே!' என்ற வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

"அவள் கிடக்கட்டும். காதால் கேட்டதை இப்போது சொல்" என்றேன்.

"நான் நம்பவில்லை; மிகவும் மோசமான விஷயம்; நம்பாமலும் இருக்க முடியவில்லை."

"நேரடியாகச் சொல்; யார் சொன்னது?"

"எனக்குச் சேதுராமனைத் தெரியும்" என்றான்.

"அயோக்கியன்!"

"யோக்கியர்கள் என்று பெயரெடுத்தவர்களின் அயோக்கியத் தனத்திற்கும் அயோக்கிப் பட்டம் பெற்றவர்களின் அயோக்கியத் தனத்திற்கும் ஏதும் வித்தியாசம் உண்டா?—துரை, உன்னைப் போன்றவன் பெண்களிடம் அநுதாபம் கொள்ளவே கூடாது."

"நான் யாரிடமும் அநுதாபம் கொள்ளவில்லை."

"நான் கெட்டுப் போனதற்குக் காரணமே அந்த இரக்கக் குணம்தான். ஏழைப் பெண்களுக்கு உதவி செய்ய நினைத்தேன். கைமாறு கருதாத உதவி என்பது நடைபெறக் கூடிய காரியமா?"

அவன் பேச்சு எனக்குப் பிடிக்கவில்லை. அவனும் தன்

பேச்சை நிறுத்தவில்லை. அவன் கூறினான்: "நீ என்னைப் போன்ற நிலையில் உள்ளவனல்ல. நாலு பேர்களுக்கு உன்னை நன்றாய்த் தெரியும். உன் பெயரைப் பலர் அன்புடன் தெரிந்து வைத்திருக்கிறார்கள். அந்தப் பெயரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பல்லவா?"

"நீ நினைப்பதெல்லாம் தவறு" என்றேன்.

"உன்னைவிட எனக்கு அந்த நராயணசாமியைப் பற்றிக் கொஞ்சம் அதிகமாகத் தெரியும்."

எனக்குச் சுரீர் என்றது.

"நாராயணசாமியின் முதல் மனைவி இறந்து பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாகிறது. அவருக்குக் குழந்தைகள் கிடையாது. லலிதாவின் குணம் அவரை மயக்கிவிட்டது. அவருடைய பணம் அவளை மயக்கிவிட்டது. சம்மதத்தோடு கல்யாணம் செய்து கொண்டாள்."

"இருக்கலாம். இருந்தால் என்ன?"

"அவரும் லலிதாவும் தகப்பனும் மகளும் போல்தான் பழகுகிறார்கள்—அப்படித்தான் அவரால் பழக முடியும்!"

"......"

"துரை, சொத்தைக் காப்பாற்ற ஓர் பிள்ளைக்காகவும் வாழ்க்கை வசதிக்கான பெண்ணுக்காகவும் அவர் லலிதாவைக் கல்யாணம் செய்து கொண்டார். கல்யாணத்தின் மறு நாளே அவருக்குக் கார் விபத்து ஏற்பட்டது. படுக்கையிலிருந்து எழுந்த போது அவர் கணவனாக இருக்கமுடியாத நிலையில் இருந்தார். இப்போதும் அப்படித்தான் இருக்கிறார்."

என் மனம் சுழன்றது. வேகமாகச் சுழன்றது. கல்யாணத்திற்குப் பிறகு அவருக்கு ஏற்பட்ட விபத்தைக்கூட ஒரு சமயம் லலிதா எனக்குக் கூறியிருக்கிறாள். ஆனால்...!

"ஆகையால் வஞ்சகர்களின் எண்ணங்களுக்குப் பலியாகி உன்னைக் கெடுத்துக் கொள்ளாதே என்று எச்சரிக்கிறேன்" என்றான் சாமிநாதன்.

மனம் மாத்திரமல்ல; இப்போது என் தலையும் சுழன்றது. என் அறை, மேசை, நாற்காலி, படங்கள், புத்தகங்கள் எல்லாம் சுழன்றன. யார் வஞ்சகர்? நாராயணசாமியா? யார்

வஞ்சகி? லலிதாவா! நான் இதை நம்ப வேண்டுமா? இல்லவே இல்லை! இருக்கவே முடியாது! என் எதிரே இருப்பவன் சாமிநாதனாக மட்டும் இல்லாமல் அந்தத் துரோகி சேதுராமனாக இருந்திருந்தால்...

"போதும் நிறுத்து!" என்று சத்தமிட்டேன்.

## 7

பொழுது போக்குவதற்குச் சென்னையில் கடற்கரை இருப்பது போலத் திருச்சியில் காவேரிக்கரை உபயோகப்படுவதில்லை. மாலை நேரங்களில் உலாவுவதற்கேற்ற பூங்காக்களும் இங்கு கிடையாது. நான் அலுவலகத்திற்கு வந்த பிறகு பின்புறத் தோட்டத்திலேயே பூப்பந்து விளையாடுவதற்கு ஓர் இடம் ஒதுக்கினேன். ஆனால் விளையாடுவதற்கு ஆட்கள்தான் கிடைக்கவில்லை. வேலை நேரம் முடிந்த பிறகு வீட்டிற்குப் போய் அவரவர்கள் சொந்த வேலையைக் கவனிப்பதற்குத்தான் இவர்களுக்குப் பொழுது சரியாக இருந்தது.

முன்பெல்லாம் காந்தம் வந்து விளையாட வேண்டுமென்று பிடிவாதம் பிடிப்பாள். சிறிதுகூட விளையாடத் தெரியாது அவளுக்கு. வேகமாக அவள் அடித்து, அவள் வெளியே அனுப்பும் பந்தையெல்லாம் காம்பவுண்டுச் சுவரைத் தாண்டிப் பொறுக்கி வருவதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகிவிடும். அவளுக்குத் தெரியாமல் அந்த விளையாட்டுச் சாமான்களை எல்லாம் அடுத்த தெருவில் உள்ள மாணவர்களுக்கு நன்கொடையாகக் கொடுத்து விட்டேன்.

சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியே புறப்பட்டேன். வழியில் சாமிநாதனும் சேதுராமனும் ஒரு பெட்டிக்கடையில் நின்று கொண்டிருந்தார்கள். என்னை அவர்கள் கவனிக்கவில்லை. நானும் அவர்களுக்காக நிற்காமல் ஊரைத் தாண்டிக் கரூர் ரோட்டுப் பக்கமுள்ள காவேரிக் கரைக்குச் சென்றேன். மணற் பரப்பு விசாலமாக இருந்தது. துண்டை விரித்துப் போட்டு அமைதியாகப் படுத்தேன். காவேரி எதிர்க்கரையைத் தொட்டுக் கொண்டு வளைவாக ஓடியது.

நாராயணசாமியைப் பற்றியும் லலிதாவைப்பற்றியும்

நான் கேள்விப்பட்ட பழிச்சொல் என் நெஞ்சில் உறுத்திக் கொண்டிருந்தது. மனிதர்களைப்பற்றித் திடீரென்று ஒரு முடிவுக்கு வருவது யாருக்கும் எளிதல்லதான். அகத்தின் அழகை முகத்தில் கண்டுபிடிக்க முயல்வது எப்போதுமே சரியான முடிவைத் தராது. அகத்தின் அழுக்கை முகத்தின் மினுக்கால் மறைப்பதில் மனிதர் தேர்ச்சிபெற்று வருங் காலம் இது. ஆனால் காலத்தின் இந்தக் குணத்திற்கு நாராயணசாமி அடிமைப்பட்டவரல்ல, குழந்தை உள்ளமும் குதூகல சுபாவமும் கொண்ட அரிய மனிதர். பணத்தால் மனிதர்களின் பண்புவளர்வதும் உண்டு; தேய்வதும் உண்டு. இவருடைய உயர்ந்த பண்பு இவரிடம் சில நாட்களாவது திறந்த மனத்தோடு பழகியவர்களுக்குத்தான் தெரியும்.

அடுத்தாற்போல் என் சிநேகிதி லலிதா:

"எங்களுடைய மணவாழ்க்கை எனக்கு இன்பமாயிருக்கிறது. என்னிடம் நீங்கள் அனுதாபம் கொள்ளவேண்டாம்" என்று அவள் ஒருநாள் மாலை என்னிடம் சொல்லியசொற்கள் இப்போது மீண்டும் என் செவியில் ஒலித்தன. அவள் எனக்கு மிகவும் சமீபமாக இருந்து பழகினாலும், ஏனோ தொலைதூரத்தில் நின்று மணக்கும் சண்பக மலராகவே தோன்றினாள். இதுவரை அவளுடைய சொல்லிலோ, செயலிலோ, பார்வையிலோ எந்த விதச் சலனத்தையும் நான் காணவில்லை—அவளா வஞ்சகி?

அவளுடைய உள்ளம் எனக்குத் தெரியும்; அது அன்பு நிறைந்தது. அவள் கற்பனையும் கலையுணர்வும் கண்ணீரும் குடி கொண்டவள். மக்களின் துன்பத்தையும் வாழ்வின் சிக்கல்களையும் அவள் பேசும்போது அவளுடைய இருதயத்தின் கனிவைக் கண்டு நான் பகற்கனவில் ஆழ்ந்து விடுவேன்.

ஒரு சமயம் அவள் என்னிடம் கேட்டாள்: "ஆண்களின் உழைப்புக்குப் புல்லுருவியாகப் பல இடங்களில் பெண்கள் வாழ்கிறார்களே, இவர்களுக்கு ஏதும் வழி இல்லையா?"

"உழைப்பு என்றால் பொருள் தேடுவது மாத்திரம் இல்லையே? வீட்டிலும் பெண்கள் உழைக்கத்தானே செய்கிறார்கள்?"

'உழைப்பவர்களைச் சொல்லவில்லை, ஒருவன் சம்

பாதித்து ஒன்பது பெண்கள் சாப்பிட வேண்டிய நிலை பல இடங்களில் இருக்கிறது. உழைப்பை உறிஞ்சுவது மட்டிலுமல்ல இவர்கள் வேலை. உழைப்பவனுக்கும் தொல்லை கொடுக்கிறார்கள்:—இதற்கு வழி?''

“எல்லாப் பெண்களுக்கும் மானமுள்ள தொழில் ஏதாவது செய்து பணம் தேடத் தெரிந்திருக்க வேண்டும். அவசியம் ஏற்பட்டால் ஆண்களை எதிர்பாரமலே அவர்கள் தங்களைக் காத்துக்கொள்ளவேண்டும்—கல்வியும் தொழிலுந் தான் பெண்களுக்கு ஏற்ற துணை.''

“என்னிடம் ஒரு சிறிய திட்டம் இருக்கிறது. அதற்கான வசதிகளையும் செய்து வருகிறேன்;—படிக்காத பெண்களும் கொஞ்சம் படித்த பெண்களும் தையல் வேலை செய்யலாமல்லவா? நான் பெண்களுக்காக ஒரு தையல் பள்ளிக்கூடம் வைக்கப் போகிறேன். கற்றுக்கொண்ட பிறகு தேவையானவர்களுக்கு இயந்திரமும் வாங்கித் தருவேன். பெண்களுக்கு வேண்டிய உடைகளையாவது பெண்களே தைத்துக் கொடுக்கலாம்.''

எனக்கு இது நல்ல யோசனையாகத் தோன்றியது. என்றாலும் விளையாட்டாக, “இந்த ஊர்த் தையல்காரர்கள் உங்கள் வீட்டிற்கு முன் மறியல் செய்யப் போகிறார்கள்!'' என்றேன்.

“ஆண்களுக்கா பிழைப்பதற்கு வழியில்லை?—நம் நாட்டிலேயே பல இடங்களில் சாதாரணமாகப் பெண்கள் தையல் வேலை செய்து வருகிறார்களே.''

இந்த மாதிரி இன்னும் லலிதாவின் ஆசைகளும் கனவுகளும் திட்டங்களும் எத்தனை எத்தனையோ! எல்லாம் பிறருக்கு உதவும் திட்டங்கள்தான். தன்னுடைய சுகத்தையும் தேவையையும் சிரமத்தையும் அவள் தன்னை மறந்துகூட வெளியிட்டதில்லை. இவளா வஞ்சகி?

சமவயதுள்ள ஆணும் பெண்ணும் நெருங்கிப் பழகமுடியுமானால் அவர்கள் இந்தத் தமிழ்நாட்டில் ஒன்று உடன் பிறந்தவர்களாக இருக்கவேண்டும்; அல்லது கணவன் மனைவியாக இருக்கவேண்டும். இந்த இரண்டு நியதிக்கும் உட்படாமல் வேறு எந்தத் தொடர்பையும் மனிதர்கள் ஏற்றுக்கொள்ள

மாட்டார்கள்! இந்தஇரண்டே முறைகளேத்தான் ஓர் ஆணே யும் பெண்ணேயும் அன்பினுல் பிணேப்பதற்கு இயற்கை வழி வகுத்திருக்கிறதா? நட்பு என்பதும் தோழமை என்பதும் ஆணுக்கும் பெண்ணுக்கும் மத்தியில் அமையும் பாலமாக இருக்கக்கூடாதா?

என்னுடைய பால்ய சிநேகிதி கஸ்தூரியின் கதை என் நினேவுக்கு வந்தது:—

ஐந்தாறு வயதுச்சிறுவனுக நான் இருந்தபோது எனக்கு அதிகமாக விளேயாட்டுத் தோழர்கள் கிடையாது. பக்கத்து வீடுகளிலெல்லாம் அநேகமாய்ப் பெண்குழந்தைகள்.எந்நேர மும் எங்கள் வீட்டில்தான் வந்து குதித்துக் கும்மாளம் போடுவார்கள். நான்கு சிறுமிகளுக்கு மத்தியில் ஒரே மரப் பாச்சி அகப்பட்டால் அது படும்பாட்டை நீங்கள் பார்த் திருக்கிறீர்களா? எனக்கும் அதே பாடுதான்!

எப்போதுமே மற்ற குழந்தைகளேவிட என்னிடம் அதிக உரிமை பாராட்டினுள் கஸ்தூரி. அந்த உரிமையை அவளு டைய தோழிகளும் அப்போது ஒப்புக்கொண்டார்கள். இது என்ன காரணத்தாலோ?

கஸ்தூரிக்கு என்னேவிட மூன்று வயது அதிகம். பள்ளிக் கூடத்திலும் மேல் வகுப்பில் படித்தாள். நாங்கள் இருவரும் பிரிந்திருக்கும் நேரம் மிகவும் குறைவு.

பத்தாவது படித்து அவள் நிறுத்திவிட்டாள். படித்த குற்றத்தால் அவளுக்கு ஏற்ற மாப்பிள்ளே எங்கு தேடியும் கிடைக்கவில்லே படித்த பையன்கள் கிடைப்பது அவளு டைய அப்பாவுக்குக் குதிரைக் கொம்பாக இருந்தது. ஓரிரண்டு வருடங்கள் சும்மா வீட்டில் இருந்தாள்.

நான் அப்போதுதான் ஒன்பதாவது வகுப்பைத் தாண்டி இருந்தேன். அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருப்பதாக என் தாயார் சொன்னதால் சந்தோஷத் தோடு உவளிடம் ஓடினேன். எப்படியாவது கல்யாண மாகாத அந்தக் குறை அவளுக்குத் தீரவேண்டும் என்று எனக்கு அதிகத் துடிப்பு.

“உனக்கு எப்போது கஸ்தூரி, கல்யாணம்?”

அவள் பதிலளிக்காமல் கட்டிலின் ஓர்ஓரத்தில் உட்கார்ந்

திருந்தாள்.

"சொல்லமாட்டாயா, கஸ்தூரி?"

"சீக்கிரந்தான்."

"யார் மாப்பிள்ளை?"

"யாரோ ஒருவர். அவருக்குப் படிக்க மட்டிலும் தெரியாது; நான்தான் பாடம் சொல்லிக்கொடுக்க வேண்டும்."

"கல்யாணத்திற்குப் பாட்டுக் கச்சேரியும் பாண்டு வாத்தியமும் உண்டா?"

அவள் என் தோளைப் பற்றிக்கொண்டாள். அவள் கண்களில் நீர் சுரந்தது. "ஏன் துரை, நீ இவ்வளவு சிறு பிள்ளையாயிருக்கிறாய்?—ஹூம், நாம் இருவரும்தான் எப்போதுமே குழந்தைகளாய்இருந்திருக்கக் கூடாதா?"

கல்யாணமென்றால் கண்ணீர் விடுகிறாளே என்று ஆச்சரியப்பட்டேன் நான்.

அதற்குப் பிறகு பிறந்தகம் வந்தபோது அவளை ஓரிரு முறைகள் பார்த்தேன். ஒவ்வொரு தரமும் பிரசவத்திற்காகத்தான் அங்கு வந்திருந்தாள். மூன்று நான்கு குழந்தைகள் அவளுக்கு...

இப்போது நான் இருக்கும் இதே ஊரில் அவளுடைய குடும்பம் இருந்தது. அவளுடைய விலாசத்தையும் நான் தெரிந்து வைத்திருந்தேன். அவளுடைய தகப்பனார் கல்யாணம் செய்து கொடுத்தவுடன் கண்ணை மூடிவிட்டார். பல தடவைகள் நான் அவளைச் சந்திக்க விரும்பினேன். அவளுடைய வாழ்வுஇப்போது எந்தமாதிரி இருக்கிறதோ! பத்துப் பன்னிரண்டு வருடங்கள் ஒன்றாய் ஒரே உள்ளத்தோடு பழகிய நட்பென்றால் சாதாரணமானதா?

ஆனால் எந்த விதத்தில் அவளைச் சந்திப்பது என்ற தயக்கத்தாலேயே பல மாதங்கள் சென்று விட்டன.

கடைசியாக ஒருநாள் துணிந்து புறப்பட்டேன். நான் எழுதிய புத்தகங்கள் சிலவற்றை எடுத்துக்கொண்டு, குழந்தைகளுக்கு மிட்டாய் வாங்கிக்கொண்டு கிளம்பினேன். வீட்டைக் கண்டுபிடிப்பது மிகச் சிரமமாக இருந்தது. என்னுடைய கற்பனைப்படி அவள் நல்ல வீட்டில் நல்லவிதமாக வாழவில்லை. ஏற்கனவே ஐந்து குடித்தனங்கள் இருந்த

வீட்டில் ஆறுவது குடித்தனக்காரியாக வாழ்ந்தாள். அந்த வீடு, அந்த வாழ்வு. அவளுடைய தோற்றம், அதற்கு வாழ்க்கை என்று பெயர்? அவள் கொடுத்த காபி என் குடலைப் புரட்டியது. சிரித்துக்கொண்டே சாப்பிட்டேன்.

அவள் என்னை அங்கே தங்கிச் சாப்பிட்டுப் போகச் சொல்லவில்லை. ஒருவேளை சாப்பாட்டு நிலைமை அங்கு எப்படியோ? அல்லது அவள் கணவன் எனக்குச் செய்யும் உபசாரத்தை விரும்பாதவனோ? அவனுக்குக் கடை ஒன்றில் வேலையாம்; மத்தியானம் சாப்பாட்டுககு வருவானும்.

நான் கொண்டுபோன புத்தகங்களை அவளிடம் கொடுக்கவில்லை. என்னிடமே வைத்துக் கொண்டேன்—கந்தல் உடுத்தியிருந்த அவள் குழந்தைகளிடம் நான் பணம் கொடுத்தபோது அவைகள் வாங்க மறுத்துவிட்டன.

பக்கத்து வீட்டுக்காரி என்னைப்பற்றிக் கேட்டாள். ''எனக்குத் தம்பிமுறை வேண்டும்'' என்றாள் கஸ்தூரி.

நான் அங்கிருந்து புறப்பட்டபோது, ''சீக்கிரம் கல்யாணம் செய்துகொண்டு உன் வீட்டுக்காரியை இங்கே அழைத்து வா. பிறகு நான் உன் வீட்டுக்கு வருகிறேன்'' என்றாள்.

ஆம்; அதுவரையில் நான் அங்கே போகக்கூடாது. போகவும் மாட்டேன், அவளும் அதை விரும்பவில்லை—விரும்பவில்லையா!

சிநேகிதர்கள் பல வருடங்கள் கழித்துச் சந்திக்கலாம். மீண்டும் அதேவேகத்தில் சிநேகிதத்தைப் பரிமாறிக்கொள்ளலாம். நமக்குச் சிநேகிதர்கள் உதவுகிறார்கள்; அல்லது உதவியை நம்மிடமிருந்து பெறுகிறார்கள்; அதுவும் இல்லாவிட்டால் சிலர் நம்மை ஏமாற்றவாவது பார்க்கிறார்கள். இந்த மாதிரி ஏதாவது ஒரு வகையில் நமக்கு அவர்களிடம் தொடர்புகொள்ள முடிகிறது. ஆனால் சிநேகிதிகள்?

இருட்டிய பிறகு நான் காவேரிக் கரையிலிருந்து திரும்பி வந்தேன். அறையில் விளக்கு எரிந்தது. சாமிநாதன் சினிமாப் பாட்டொன்றை உற்சாகமாகப் பாடிக்கொண்டிருந்தான். எனக்கு அவனைப்பார்த்தவுடன் கோபம் வந்தது.

'நீ அந்த சேதுராமனுடன் பழகுவதை நிறுத்தமாட்

டாயா?'' என்றேன்.

அவன் கேலியாகச் சிரித்தான். ''நீ அந்த லலிதாவுடன் பழகுவதை நிறுத்தமாட்டாயா?'' என்று திருப்பிக் கேட்டான்.

நான் வெறுப்புடன் அவனை நோக்கினேன்.

''கோபப்படாதே துரை! நான் பணக்காரர்களுடன் அதிகமாய்ப் பழகியிருக்கிறேன்...''

''பேய்களுடன் கூட நீ பழகுவாய்.''

''பணக்காரர்களுக்குத்தான் எந்த மனிதனை எந்த அளவுக்குக் கருவியாகப் பயன்படுத்த வேண்டும் என்ற உண்மை தெரியும். காரியம் முடிந்த பிறகு அவனைக் கழுத்தை நெறித்துக் கொல்லத் தயங்கமாட்டார்கள்—சேதுவுடன் உன்னுடைய நன்மைக்குத்தான் பழகுகிறேன்.''

''என்னைப் பற்றிக் கவலைப்படாதே, அவனால் எனக்கு எந்த உதவியும் ஆகவேண்டியதில்லை. நீயோ அவனோ என் போக்கில் குறுக்கிடாமல் இருந்தால் அதுவே போதும்.''

அன்றைக்கு மாலை எனக்கு வந்திருந்த தபால்கள் மேசையில் கிடந்தன. பிரித்துப் படித்தேன். சென்னையில் எனக்குத் தெரிந்த சினிமாக் கம்பெனியிலிருந்து, சினிமாவுக்குக் கதை அமைத்துத் தருமாறு ஒரு கடிதத்தில் இருந்தது. படம் உடனடியாக எடுக்க வேண்டியிருந்ததால், விரைவில் புறப்பட்டு வரச்சொல்லி எழுதியிருந்தார்கள். அங்கு வந்து ஒரு மாதம் தங்கியிருந்தால் நலமாக இருக்கும் எனவும் குறிப்பிட்டிருந்தார்கள்.

நான் கடிதங்களை முடித்த பிறகு, ''துரை!'' என்று யோசனையோடு என்னை அழைத்தான் சாமிநாதன். ''இந்த அலுவலகத்தில் எனக்கு ஏதாவது வேலை வாங்கித் தருகிறாயா?'' என்றான்.

''விளையாடுகிறாயா நீ?''

''இல்லை; உண்மையைச் சொல்லுகிறேன். ஏதாவது வேலை பார்க்கவேண்டும் போலிருக்கிறது.''

''வேலையில்லாமலே நீ நிறையச் சம்பாதிக்கிறாயே!—இங்கு உனக்குச் சம்பளம் போதுமா?''

''சம்பளமே எனக்கு வேண்டாம். பொழுது போனால் போதும்.''

அச்சகத்தின் மேற்பார்வைக்கு அப்போது ஒருவர் தேவையாக இருந்தது. ராமலிங்கத்திடம் சொல்லி ஏற்பாடு செய்வதாய் வாக்களித்தேன். சாமிநாதன் திறமையோடு தன்னுடையவேலைகளை முடிப்பவன் என்பது எனக்குத் தெரியும்.

மறுநாள் முதல் சாமிநாதனுக்கு அச்சகத்தில் வேலை. சுறுசுறுப்பாக அதைக் கவனித்துவிட்டுக் கமிஷன் வியாபாரத்தையும் ஓய்வில் பார்த்துக்கொண்டான்.

இரண்டு நாட்கள் சென்றன. என் அறையில் புத்தம் புது பூப்பந்தும் வலையும் இதர விளையாட்டுச் சாமான்களும் காணப்பட்டன. என்னைச் சாமிநாதன் விளையாட்டிற்கு அழைத்தான். நான் போகவில்லை. உலவுவதற்காக வெளியே சென்றேன். திரும்பி வந்தபோது தோட்டத்தில் பந்தாட்டம் வெகு மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. வழக்கம்போல் காந்தம் பல்லைக் கடித்துக்கொண்டு பந்தை ஓங்கி அடித்தாள். பந்து காம்பவுண்டைத் தாண்டி அடுத்த பங்களாவுக்குள் விழுந்தது. சாமிநாதன் சுவர் ஏறிக் குதித்துப் பந்தை அங்கேயிருந்து வீசினான்!

அவன் இந்த அலுவலகத்தில் வேலை கேட்ட லட்சணம் இப்போது எனக்கு விளங்கிவிட்டது.

## 8

காலை எட்டுமணிக்கு என் அறைக்குள் நாராயணசாமி நுழைந்தபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இத்தனை மாதங்களுக்கு இப்போதுதான் முதல் முறையாக என் அறைக்குள் வந்திருக்கிறார். மற்ற சமயங்களில் அவர் வந்தபோது பெரும்பாலும் மாலைநேரமாக இருந்ததால் அலுவலக வெளிவராந்தாவிலோ, பின்புறத் தோட்டத்திலோ உட்கார்ந்து பேசுவது வழக்கம். அதுவும் ஐந்து நிமிடங்களுக்கு மேல் தங்கமாட்டார். ''வாருங்களேன் வீட்டிற்குப் போவோம்'' என்று கட்டாயப்படுத்தி அழைத்துச் செல்வார்.

சில விநாடிகள் நாற்காலியில் உட்கார்ந்துவிட்டு மெதுவாக எழுந்து அறை முழுவதும் சுற்றிப் பார்த்தார். புத்தக அலமாரியிலிருந்த புத்தகங்களைக் கவனித்தார். அன்றயின்

ஓரத்தில் வட்டமான சிறு மேடையின் மீதிருந்த புத்தர் பிரானின் பளிங்குச் சிலையைப் பார்த்தவுடன் அங்கேயே சற்று மெய்ம்மறந்து நின்றுவிட்டார் அந்தச் சிலைக்கு சற்று உயரே சுவரில் நடனமாடும் தில்லைக் கூத்தனின் படம் இருந்தது.

"ஒரே மாதிரி மனப்பான்மை உடையவர்கள் பல இடங்களில் இருக்கிறார்கள்."

அப்போது எனக்கு அவருடைய பெரிய புத்தகசாலையும் அதன் மத்தியிலிருந்த புத்தர் சிலையும் நினைவுக்கு வந்தன. அவருடைய அலமாரிகளில் ஒன்று புத்தரைப் பற்றிய நூல்களுக்கு மட்டுமே ஒதுக்கப்பட்டிருந்தது. இலங்கை, பர்மா, சீனா முதலிய நாடுகளிலிருந்து புத்தகங்களை வரவழைத்திருந்தார்.

"கடவுள் கொள்கையை மட்டும் புத்தர் ஏற்றுக் கொண்டிருந்தால்..." என்றார் நாராயணசாமி.

"அந்த மதம் இந்தியாவில் வேரூன்றித் தழைத்திருக்கும். இப்போதுகூட இங்கே அது அழிந்துவிடவில்லை; ஹிந்து மதத்தின் வைதீகக் கொடுமைகளை அழிக்க முயன்று, ஓரளவு வெற்றியும் பெற்று, அந்த மதத்துடன் ஐக்கியமாகி விட்டது."

"உண்மைதான்; உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை உண்டா?"

"உண்டு. பக்தியிலும் தியானத்திலும் கூடப் பற்றுதல் உண்டு."

"கடவுள் நம்பிக்கை உள்ள பலர் நேர்மையற்றவர்களாக இருக்கிறார்கள்" என்றார்.

"நம்பிக்கை உள்ளதாகக் கூறுகிறவர்கள் எல்லாம் நம்பத் தெரிந்தவர்கள் என்று சொல்லமுடியாது. அநீதிக்கு அனுமதிச் சீட்டளிக்கும் அதிகாரியல்ல கடவுள். கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் எல்லாம் நேர்மையானவர்கள் தாமா?"

"நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"அன்பு மனம், அருளறிவு, அழகுணர்வு—இதை உடையவர்கள் கடவுள் என்ற ஓர் தனிச் சக்தியை நம்பாவிடினும் கடவுள் நம்பிக்கை உள்ளவர்களே."

நாராயணசாமி திரும்பவும் வந்து என்னருகே உட்

கார்ந்தார். தமது கைப்பிரம்பை மேசைமீது போட்டார். கண்ணுடியைத் துடைத்து மீண்டும் போட்டுக் கொண்டார்.

"இன்றைக்குத்தானே நீங்கள் சென்னைக்குப் புறப்படுகிறீர்கள்?"

"ஆமாம்."

"மத்தியானம் நம் வீட்டில் சாப்பாடு; அதை உங்களிடம் சொல்வதற்குத்தான் வந்தேன்."

"விஷேசம் ஒன்றும் இல்லையே!"

"உங்களுடன் சாப்பிடுவது விசேஷமில்லையா? திரும்பவும் ஒரு மாதம் கழித்துத்தானே வரப் போகிறீர்கள்? தவிரவும் இன்றைக்கு லலிதாவின் பிறந்த நாள்."

"ஓஹோ!"

"இந்த வருடந்தான் அவள் அதைக் கொண்டாடுவதற்கு ஒப்புக்கொண்டாள். போன வருடம் சம்மதிக்கவே இல்லை—பன்னிரண்டு மணிக்கெல்லாம் கார் அனுப்புகிறேன்; வந்து விடுகிறீர்களா! அங்கேயே தங்கிவிட்டுச் சாயங்காலம் திரும்பலாம்."

"கார் வேண்டாம்; நானே வந்துவிடுகிறேன்."

ஆனல் சரியான நேரத்தில் கார் வந்துவிட்டது. வீட்டிற்குள் நுழைந்தபோது, "வாருங்கள்" என்று புன்முறுவலுடன் அழைத்துக் கொண்டே கதவைத் திறந்துவிட்டாள் லலிதா. நான் பிரமித்துவிட்டேன். என் கண்களை நான் நம்பவில்லை. லலிதா தாஞ இவள்! கால்கள் கணநேரம் அந்த இடத்தைவிட்டு நகர மறுத்தன. அவளும் அந்தக் கணநேரம் பொற்சிலை போல் எதிரே நின்ருள். பிறகு என்னை நோக்கியிருந்த அவள் கண்கள் கீழே தாழ்ந்தன. முகம் சிவந்தது. சிறிது தடுமாற்றத்துடன் அவள் விலகிஞள். நானும் தடுமாற்றத்தோடுதான் மேலே நடந்தேன். லலிதா! என்ன இது?

இந்த விதமாக லலிதா ஒரு நாள் தன்னை அலங்கரித்துக் கொண்டு என்னெதிரே நிற்கப் போகிருள் என்று நான் கனவிலும் கருதவில்லை. பாரதியார் எழுதிய 'ஞானரத'த்தில் அவருடைய கனவுச் சோலையான கந்தருவ லோகத்தில் உலவியிருக்கிறேன். கவி ஷேக்ஸ்பியரின் 'வேனிற் காலத்து

நள்ளிரவுக் கனவில்' வரும் மோகனப் பூங்காவிலும் அலைந் திருக்கிறேன். அங்கெல்லாம்கூட இந்த லலிதாவைப் போன்ற பெண்ணை நான் காணவில்லை-கரு நீல வர்ணத்தில் வழவழப்பான சில்க் புடவை உடுத்தியிருந்தாள்; அமாவாசை இரவில் சுடர்விடும் விண்மீன் கூட்டம்போல் வெள்ளைப் புள்ளிகள் அந்தப் புடவையெங்கும் பூத்திருந்தன: உடம்பை ஒட்டினாற்போல் பச்சை நிற ஜாக்கெட் அணிந் திருந்தாள். அவளுடைய முதுகுப்புறம் தெரிந்த அந்த ஜாக்கெட்டில் மாவடுவைப் போன்ற வண்ணத்தில் நூல் இழைகள் ஓடியிருந்தன. துவளும் சடைப் பின்னல் புரண்டு அலைய அவள் என் முன்னே வேகமாய் நடந்தாள். கூந்தலில் சிவப்பும் வெள்ளையுமாகக் கனகாம்பரமும் மல்லிகையும் சேர்ந்து குடியிருந்தன.

பக்கத்து அறைக்குள் அவள் நுழைந்து மறைந்த பின்பு, நான் குனிந்த தலை நிமிராமல் நடந்தேன். என்னுடைய நினைவு என்னிடமில்லை; அது லலிதாவிடமும் இல்லை. நினைவே இல்லாத ஓர் சூன்ய நிலை இருக்கிறதல்லவா? அந்தப் பயங் கர நிலையில் நான் என்ன செய்கிறேன் என்பதே தெரியாமல் தோட்டத்துப் பக்கம் இருந்த கொட்டகையில் போய் உட்கார்ந்தேன். முகமெல்லாம் ஒரேயடியாய் வேர்த்தது.

“அடே அப்பா! உஷ்ணம் தாங்க முடியவில்லை” என்று சொல்லிக்கொண்டே வந்து சேர்ந்தார் நாராயணசாமி. விசிறியைத் தள்ளி தன்னருகே வைத்துச் சுற்றச் செய்தார். மின்சார விசிறியால் உள்ளக்கொதிப்பை ஆற்ற முடியுமா? அன்புத் தென்றலை உமிழ முடியுமா?

சாப்பாடு நடந்து கொண்டிருந்தது.

“இன்றைக்குச் சமையலை லலிதாதான் நேரில் இருந்து கவனித்தாள்” என்றார் நாராயணசாமி.

சமையல் எப்படி இருந்தது என்று எனக்குத் தெரியாது. ஏதும் நான் சுவைத்துச் சாப்பிடவில்லை. எல்லாம் ஒரே மாதிரிதான் இருந்தது—சாம்பார், ரசம், அப்பளம், பாயசம்......

“இன்னும் கொஞ்சம் பாயசம் விட்டுக்கொள்ளுங்கள்” என்றாள் லலிதா.

அப்போதுதான் நான் பாயசம் சாப்பிட்டுக்கொண்டிருப்பதைக் கவனித்தேன்.

"வேண்டாம்....இல்லை போதும்!"

"சாப்பிடுங்கள் துரை, ரொம்பவும் நன்ருக இருக்கிறது, இன்றைக்கு!" என்ருர் பெரியவர்.

"கொஞ்சம் சாப்பிடுங்கள்" என்று நிறையப் போட்டாள் லலிதா.

"துரைக்கு இப்போதே சென்னை ஞாபகம் வந்துவிட்டது. சினிமாக் கதையை இங்கேயே தீர்மானம் செய்து முடித்துவிடுவார் போலிருக்கிறது. சரியாகக்கூட பேச மாட்டேனென்கிருர், லலிதா!" என்று சிரித்தார் நாராயணசாமி.

என்னுடைய தவறை நான் உணர்ந்து கொண்டேன். கற்பனையாளனுயிருப்பதில் எத்தனை சிரமம் இருக்கிறது தெரியுமா? ஒரு சிறிய சம்பவத்தால் மனத்தை இவ்வளவு தூரம் அலைய விட்டுவிட்டேன்!

"இல்லை கதை நினைவு இல்லை; சாப்பாடு மிகவும் நன்ருக இருந்தது. அநுபவித்துச் சாப்பிட்டேன்" என்றேன்.

"நேற்றுச் சாயங்காலம் நானும் லலிதாவும் கடைத் தெருவுக்கு போயிருந்தோம். லலிதாவுக்குக்கூட இத்தனைத் துணிப் பைத்தியம் இருக்கிறது என்பதை நேற்றுத்தான் தெரிந்துகொண்டேன். என்னை இருபது கடைகளில் ஏறி இறங்க வைத்துவிட்டாள்! ஆனுல் சிரமம் வீண் போகவில்லை. நீங்கள்தான் பாருங்களேன்; பிறந்தநாள் உடுப்பு இதை விடக் கச்சிதமாக லலிதாவுக்கு அமைய முடியுமா?"

அவளை ஏறிட்டுப் பார்க்காமலேயே 'ரொம்பவும் அழகாயிருக்கிறது' என்று சொல்ல நினைத்தேன். ஆனுல் நாராயணசாமி பொல்லாத மனிதர். "பத்திரிகாசிரியர் என்பதை சரியாகக் காட்டி விட்டீர்களே; புத்தகத்தைப் படிக்காமலேயே மதிப்புரையைஎழுதுவதைப் போலல்லவோ சொல்கிறீர்கள்!" என்று கூசாமல் என்னைக் கேட்டுவிடுவார். ஆகையால் நான் எதிரே நின்ற லலிதாவைப் பார்த்தேன்.

"நன்ருக இருக்கிறது" என்றேன்.

அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

"வானவில்லின் நிறத்தில் புடவை எடுத்துக் கொள்ளச்

சொன்னேன். அவள் 'நீல வானத்தின் அழகுதான் எனக்கு அதிகமாய்ப் பிடிக்கும்' என்ருள். பெண்களுக்குத்தான் எத்தனை கலை உணர்ச்சி பாருங்கள்! 'கலை' என்ருல் துணி என்ற அர்த்தத்தில் சொல்கிறேன். தங்களுடைய செளந்தர்யம் எந்தெந்தத் துணிக் கடையில், நகைக்கடையில், 'பெளடர்' பெட்டிக்குள் ஒளிந்திருக்கிறது என்பதை அவர்கள் எவ்வளவு நுணுக்கமாய் ஆராய்ந்து வைத்திருக்கிருர்கள்!''

நாராயணசாமியின் உற்சாகம் அன்று வழக்கத்தைவிட அதிகமாக இருந்தது. அவரே மேலும் பேசினுர்: 'லலிதாவை இத்தனை நாள் நான் புதுமைப் பெண்ணென்றே நினைக்கவில்லை. எவ்வளவு சொன்ஞலும் தன்னைச் சரியாக அலங்கரித்துக் கொள்ளமாட்டாள். அவளுடைய இந்தப் பிறந்த நாள் வாழ்க!—மாதந்தோறும் இப்படி அவளுக்குப் பிறந்த நாள் வந்தால், நமக்கு நல்ல சாப்பாடு, நல்ல கண் விருந்து.... என்ன லலிதா?''

சாப்பிட்டுவிட்டு இருவரும் காற்றுக்காக மாடி அறையில் போய் உட்கார்ந்தோம். வெற்றிலை போட்டுக்கொண்டோம். அது நாராயணசாமியின் அறை. அந்த இடம் முழுவதும் கமகமவென்று சுகந்த மணம் வீசிக் கொண்டிருந்தது. சம்பங்கிப் பூ 'ஸெண்ட்' அவர் வழக்கமாக உபயோகித்ததால் அதன் மெல்லிய வாசனை அங்கிருந்த எல்லாச் சாமானகளிலும் படிந்திருந்தது

"கலை கலைக்காகவே என்று சொல்கிருர்களே, உங்கள் கருத்தென்ன?'' என்று ஆரம்பித்தார்.

"அப்படிச் சொல்பவர் இப்போது யாரும் இருக்க மாட்டார்கள்'' என்றேன்.

"அப்படியாஞல் நீங்கள் நம்முடைய கட்சி! வாழ்வுக்காகத்தானே கலை இருக்கிறது.''

"ஆமாம்?''

"கொஞ்சம் பொறுங்கள்; இதோ வந்துவிடுகிறேன்'' என்று வேகமாகக் கீழே இறங்கிப் படிகளில் நடந்தார்.

எனக்கு அப்போது லலிதா உடுத்தியிருந்த புடவையின் நினைவு வந்தது; அத்தோடு பாரதியாரின் பாடலையும் எண்ணிப் பார்த்தேன்.

'பட்டுக் கருநீலப்—புடவை
பதித்த நல் வயிரம்
நட்ட நடுநிசியில்—தெரியும்
நக்ஷத் திரங்க ளடி'

"எங்கே அவர்?"

திரும்பிப் பார்த்தேன். லலிதா கதவோரத்தில் நின்று கொண்டிருந்தாள்.

"இதோ வந்து விடுவார்" என்றேன்.

'சினிமா உலகிற்குப் போகிறீர்களாக்கும்?" என்று தனக்குள்ளே சொல்லிக்கொள்பவள்போல் சொல்லிவிட்டுப் பக்கத்துச் சோபாவில் சாய்ந்தாள்.

"போய் வர ஒரு மாதமாகுமா?"

"ஆகும்."

"சினிமா உலகம் பிரகாசமான இடம்; மின்னும் நக்ஷத்திரங்கள் அங்கே அதிகம்" என்று அவள் மெதுவாய்ச் சிரித்தாள்.

"இருந்தாலென்ன? நக்ஷத்திரங்களின் தொடர்பே எனக்கு இருக்காதே! தனிமையான இடமும் வெள்ளைக் காகிதங்களுந்தானே எனக்கு வேண்டியவை?

"இருந்தாலும் கலை உலகம்..."

"கவனமாக இருக்கவேண்டிய உலகந்தான்.

அவள் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. தன்னுடைய வலது காலின் பெருவிரலால் தரையில் கோடு கிழித்துக் கொண்டு அதையே வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தாள். சில நிமிடங்கள் சென்ற பின் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்தாள். தலையைத் திருப்பி என்னை உற்றுப் பார்த்துவிட்டுக் கீழே குனிந்துகொண்டாள்—அந்தப் பார்வை இத்தனை மாதங்களாக இல்லாத இந்தச் சலனம் ஏன் இன்று இவளுக்கு?

எனக்கு அந்த அறையில் அதற்குமேல் இருப்புக்கொள்ளவில்லை. ஒன்று நான் வெளியே போய்விடவேண்டும்; அல்லது அவள் போகவேண்டும். ஏற்கனவே இருந்த சம்பங்கிப் பூ மணத்தோடு அவன் வைத்திருந்த மல்லிகை

மணமும் சேர்ந்து கொண்டு என்னை என்னவோ செய்தன. நல்லவேளையாக ஒரு புத்தகக்கட்டைச் சிரமத்தோடு தூக்கிக் கொண்டு அப்போது நாராயணசாமி வந்து சேர்ந்தார்.

"சினிமாவில் முன்பு புராணப் பிரசாரம் நடந்தது; இப்போது கட்சிப் பிரசாரம் நடக்கிறது; இனிமேல் அன்புப் பிரசாரம் நடக்கட்டுமே!—நீங்கள் இதைச் செய்யுங்களேன்" என்ருக.

"தாராளமாய்ச் செய்கிறேன்."

"அசோகன் ஆட்சியில் நாடு செழிப்பாக இருந்த தென்ருல் அதற்குக் காரணம் புத்தரின் கொள்கைகள்—இந்தப் புத்தகங்களை உங்களோடு சென்னைக்கு எடுத்துச் செல்லுங்கள். படித்துவிட்டுத் தேவையான இடத்தில் புத்தர் கருத்துக்களைப் பரப்புங்கள்.

அவர் அன்போடு கொடுத்த ஒன்பது புத்தகங்களையும் பத்திரமாக வாங்கிக் கொண்டேன். அவற்றில் ஒன்றை மட்டும் ஒழுங்காய்ப் படிப்பதென்ருலே ஒரு மாதம் போதாது. சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் புறப்பட்டேன்.கணவனும் மனைவியும் வாசல்வரையில் வந்து வழியனுப்பினர்கள்.

"வருகிறேன்."

"போய் வாருங்கள்."—இரு குரல்கள் ஒன்ருய் ஒலித்தன.

வரும் சமயம் லலிதாவின் முகத்தைப் பார்க்க எனக்குத் துணிவில்லை. ஆனல் சற்று தூரம் சென்ற பிறகு திரும்பி னேன், அங்கே நாராயணசாமி இப்போது இல்லை. லலிதா மட்டிலும் எட்டிப் பார்த்துக்கொண்டு நின்ருள்—அவள் கண்களில் ஏன் இந்த எக்கம்?

## 9

சென்னையில் வேலைகள் நிறைய இருந்தன. பத்து நாட்கள் ஓய்வின்றி எழுதிப் படக் கதையின் ஒரு பகுதியை முடித்தேன். மத்தியில் அந்த மாதத்துச் 'செந்தாமரை'க்கு ஓர் சிறுகதை எழுத வேண்டியிருந்தது. திருச்சியிலிருந்து

புறப்படும்போது, சென்னையில் கிடைக்கும் ஓய்வு நேரத்தில் எழுதி அனுப்பிடலாமென்று நினைத்தேன். ஆனால் புதிய கற்பனை ஒன்றுக்கும் அங்கு நேரமே இல்லை. எதிரே இருந்த வேலைக்கே இரவெல்லாம் கண்விழிக்க வேண்டிய அவசிய மிருந்தது. சிறு கதை எழுதாமல் இருக்க முடியவில்லை. உதவி ஆசிரியர் சங்கரனிடமிருந்து இரண்டு கடிதங்கள் கதைக்காக வந்துவிட்டன. அச்சகம் அதற்காகக் காத்திருப்ப தாய் எழுதியிருந்தார்.

வேறு வழியில்லாமல் எந்தக் கதையை இத்தனை நாட்களாக எழுத வேண்டாமென்று ஒதுக்கியிருந்தேனோ அந்தக் கதையை அவசரத்தில் எழுதி அனுப்பினேன். முன்பு நான் குறிப்பிட்ட என் சிறு வயதுச் சிநேகிதி கஸ்தூரியின் கதை அது. நடந்த நிகழ்ச்சிகளை அதிக மாறுதலின்றி அப் படியே அமைத்திருந்தேன். 'நினைவு' என்ற தலைப்புடன் கதை தபாலில் திருச்சிக்குச் சென்றது.

இந்தப் பத்து நாட்களுக்குள் எல்லோரிடமிருந்தும் கடி தங்கள் வந்துவிட்டன. முதற் கடிதம் காந்தம் எழுதி யிருந்தாள்.

அன்புள்ள அண்ணா,

வணக்கம்.

தங்கள் நண்பர் சாமிநாதனைப் பற்றி எனக்கு வந்த கடிதத்தை இத்துடன் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். இந்தக் கடிதத்தைக்கண்ட பிறகு என்னுடைய மனம்எப்படி இருக்குமென்று நான் சொல்ல வேண்டியதில்லை. இந்தக் கடிதம் எனக்கு வந்திருப்பது அவருக்குத்தெரியாது. தாங்கள் இங்கு இருந்தபோதும் சென்னைக்குச் சென்ற பிறகும் அவர் என்னிடம் பழகும் முறை கண்ணியமாகவே இருக்கிறது. தங்களுடைய நெருங்கியநண்பர் என்பதால் நான் அவரோடு சாதாரணமாய்ப் பழகி வருகிறேன். அவர் என்னைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறார். அவருடைய வாழ்வைப் பற்றித் தங்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கும். தயவு செய்து அவரைப் பற்றித்தங்களுடைய உண்மையான

கருத்தைத் தெரிவியுங்கள், தங்களைத் தவிர இந்த உதவியை யார் எனக்குச் செய்ய முடியும்?

தங்களன்புள்ள தங்கை,
காந்தம்.

அவள் தன் கடிதத்தோடு வைத்து அனுப்பியிருந்த இன்னொரு கடிதத்தையும் கவனித்தேன்.

அன்புள்ள சகோதரி காந்தம்,

உங்களைச் சாமிநாதன் என்ற இளைஞரோடு சில இடங்களில் பார்த்தேன். சாமிநாதனைப்பற்றி நீங்கள் கொஞ்சம் தெரிந்து கொண்டால், உங்களுடைய எதிர் கால வாழ்வுக்கு உபயோகமாக இருக்கும். சாமிநாதனை நம்பி இப்போது நடுத்தெருவில் நிற்கும் அபலைகளில் நான் ஒருத்தி. என்னைப் போன்ற பெண்கள் இன்னும் சிலர் உண்டு என்பதைப் பிறகுதான் தெரிந்துகொண்டேன்.

நீங்கள் பணக்காரப் பெண். ஆகையால் அவன் உங்களைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பலாம். கல்யாணத்திற்குப் பிறகுள்ள உங்களுடைய குடும்ப சுகத்தை நினைத்து நான் நடுங்குகிறேன்,

என்னைப் போன்ற ஒரு சகோதரிக்குச் செய்யும் சிறிய உதவி என்று எண்ணி இதை எழுதுகிறேன். பிறகு உங்கள் இஷ்டம்.

உங்கள் அன்புள்ள,
ஒரு அநாதைச் சகோதரி.

கடிதத்தை நன்றாய்க்கவனித்தேன். அந்த எழுத்துக்களை இதற்குமுன்பு நான் எங்கோ பார்த்த ஞாபகம். பச்சை மையால் எழுதப்பட்ட எழுத்துக்கள். நாராயணசாமி வீட்டில் இருப்பதைப் போன்ற விலாசமிடாத கடிதக் கற்றையின் ஆரஞ்சு நிறத்தாள். நான் புரிந்துகொண்டேன். எனக்குச் சிரிப்பு வந்தது. சேதுராமன் இந்த மாதிரி அவனுடைய நண்பனுக்கே உதவப்போகிறான் என்று நான் எதிர்பார்க்கவில்லை!

அடுத்தாற்போல் சாமிநாதனின் கடிதம்:

அன்புள்ள துரை,

நான் காந்தாவிடம் கொண்டிருக்கும் அன்பு உனக்குத் தெரியாமல் இருக்காது. நான் அவளை எவ்வளவு நேசிக்கிறேன் தெரியுமா? என்னைப்பற்றி நீ மிகவும் சாதாரணமாய் எண்ணுகிருய் என்பது தெரியும். உன் எண்ணம் ஓரளவு சரியானதுதான், ஆனல் நீ நினைக்கிறபடி பெண்கள் விஷயத்தில் நான் அத்தனை அயோக்கியனல்ல. இதுவரையில் நான் யாரையும் காதலித்ததுமில்லை; கைவிட்டதுமில்லை.

'காதல் என்பது வேறு; உடலுறவு வேறு' என்ற கருத்தை நீ ஏற்றுக் கொள்கிருயா?

கடந்துபோன இரண்டு வருடங்களாக என்னுடைய சுற்றுப்புறமும் சூழ்நிலையும் எனக்கு ஏற்றதாக இல்லை. வயிற்றுக்காகத் தங்களையே விற்கும் ஓரிரு ஏழைப் பெண்களுக்குப் பொருளுதவி செய்தேன். வேறு வழியில் அவர்கள் உழைத்து வாழ்ந்தால் நலமென்று நினைத்தேன். ஆனல் அவர்களும் திருந்தவில்லை! நானும் அவர்களைத் திருந்தவிடவில்லை.

குடித்துப் பழகியவன் அந்தக் குடியில் இன்பம் கண்டது போல் என் வாழ்வும் மிகக் கேவலமாகப் போய்க்கொண்டிருந்தது. அதைத் தடுத்து மீண்டும் மனிதனுவதற்குத்தான் உன்னிடம் வந்தேன். வந்தபிறகு எனக்கு வாழ்வின் முன்னேற்றத்தில் அதிக நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.

எதற்காக நான் இதெல்லாம் எழுதுகிறேன் தெரியுமா? நீதான் இந்தச் சமயத்தில் எனக்கு உதவ முடியும். உன்னல்தான் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவும் முடியும்— இந்த இரண்டு நாட்களாய்க் காந்தாவின் போக்குத் திடீரென்று மாறிவிட்டது. என்னிடம் எல்லையற்ற சந்தேகம் கொண்டிருக்கிருள், அவளுடைய சொல்லம்புகளை என்னல் தாங்கமுடியவில்லை. என்னைப்பற்றித் தவருன முறையில் எப்படியோ கேள்விப்பட்டிருக்கிருள். 'தவருன முறையில்' இல்லாவிட்டாலும் நடந்தவைகளை அப்படியே அறிந்திருந்தால் கூட ஒரு பெண் எப்படி என்னை நம்புவாள்? அவளை எந்தவிதத்தில் சாந்தப் படுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை. அவள் அன்பை நான் ஒருக்காலும் இழக்க

மாட்டேன். அவள் எனக்குத் துணையாகிவிட்டால் நிச்சயம் என் வாழ்வு நேரான பாதையில் செல்லும். நான் இழைத்த தவறுகளை மீண்டும் கனவில்கூட விரும்பமாட்டேன். அவற்றை நினைத்து நான் இப்போது வருந்திக் கொண்டிருக்கிறேன், துரை!

உன்னால் முடிந்தால் ஒருமுறை இங்கே வந்துவிட்டுப் போ. இல்லாவிட்டால் காந்தாவுக்கு என்னைப்பற்றித் தயவு செய்து எழுது. நடந்த தவறுகளுக்கு அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். இனி அப்படி இருக்க மாட்டேனென்றும் உறுதி கூறுகிறேன்.

உனதன்புள்ள,
சாமிநாதன்.

சிக்கல் சுலபமாகத் தீர்ந்துவிடும் போலிருந்தது. சாமிநாதன் எனக்கு எழுதிய கடிதத்தை அப்படியே காந்தத்திற்கு அனுப்பினேன். அத்தோடுசேதுராமனின் மொட்டைக் கடிதத்தைப் பற்றியும் குறிப்பிட்டேன்.

அன்புத் தங்கை காந்தம்.

இத்துடன் சாமிநாதன் எனக்கு எழுதிய கடிதம் உனக்கு வருகிறது. கடிதத்தில் அவன் எழுதியிருப்பதை நான் அப்படியே நம்புகிறேன். கல்யாணம் உன்னுடைய சொந்த விஷயம். நன்றாகத் தீர்மானம் செய்து முடிவுக்கு வா. தவறிழைத்தவர்கள் திருந்துவதும், தவறே இழைக்காதவர்கள் தவறுவதும் இயற்கைதான். கையெழுத்தில்லாத அந்தச் 'சகோதரி'யின் கடிதம் உண்மையானதல்ல. பிறர் வாழ்வில் தலையிடுவதே பொழுது போக்காகக் கொண்ட பலர் சமூகத்தில் இருக்கிறார்கள். அந்த மாதிரி மனிதர்களில் ஒருவன் எழுதிய கடிதம் இது. தவறான நோக்கத்துடன் அது எழுதப்பட்டாலும் நீ சாமிநாதனை அதிகமாகத் தெரிந்து கொள்வதற்கு அது உதவி செய்துவிட்டது. திருமணத்திற்கு முன்பே ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொள்ள முடியுமானால் அதைவிட உபயோகமான செயல் வேறொன்றுமில்லை.

உன் அன்புள்ள,
துரை.

நாராயணசாமியும் ஒரு பெரிய கடிதம் எழுதியிருந்தார். தாம் கொடுத்த புத்தகங்களைப் பற்றியும், எவ்வளவு தூரம் நான் எழுதும் சமூகக் கதைக்குள் புத்த பகவான் உலவுகிறார் என்பதையும், என்னுடைய உடல்நலம், பொழுதுபோக்கு உணவு எல்லாவற்றையும் விவரமாய்க் கேட்டிருந்தார். அத்தோடு, 'நீங்கள் இருக்கும் ஸ்டுடியோவில் இப்போது நல்ல படம் ஒன்று தயாராவதாகத் தெரிகிறது. படம் எடுப்பதை லலிதா நேரில் பார்க்க வேண்டுமென்கிறாள். நான்கூட 'ஷூட்டிங்' பார்த்ததில்லை. ஆகையால் சுவாரஸ்யமான கட்டம் ஏதும் சமீபத்தில் பிடிப்பதாயிருந்தால் தெரியப் படுத்துங்கள். இரண்டு நாள் சென்னையில் தங்கி உங்களோடு சந்தோஷமாய்ப் பொழுது போக்கலாமல்லவா?'' என்று கேட்டிருந்தார்.

மாதக் கடைசியில் முக்கியமான கட்டம் இருப்பதாய் என்னுடைய நண்பரான டைரக்டர் தெரிவித்தார். நாராயணசாமிக்குத் தேதியை அறிவித்து எழுதினேன். அந்தத் தேதி வருவதற்குள் என் படக்கதை அமைப்பும் முடிந்து விட்டது. குறிப்பிட்ட நாள் காலை பத்து மணிக்கு அவரும் லலிதாவும் நான் தங்கியிருந்த ஓட்டலுக்குக் காரில் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்காக நான் வசதியான அறை ஒன்றை ஏற்பாடு செய்திருந்தேன். வந்து சேர்ந்த ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் உடையை மாற்றிக்கொண்டு என் அறைக்கு வந்து சேர்ந்தார் நாராயணசாமி. எழுதி வைத்திருந்த சினிமாக் கதையைப் புரட்டினார். என் மனமும் புரண்டது. மருந்துக்குக்கூட மகான் புத்தரின் வாக்கியத்தை என்னால் அந்தக் கதைக்குள் வைக்க முடியவில்லை!

அவருடைய புத்தகங்களில் இரண்டைப் பார்த்தபோது, அவற்றில் என் கதைக்கு ஏற்ற வாக்கியங்கள் ஏதும் கிடைக்காததால் பேசாதிருந்துவிட்டேன். இப்பொது அவருக்கு என்ன பதில் சொல்வதென்று எனக்குப் புரியவில்லை,

“ஆஹா! அபாரம். ரொம்ப அபாரம்! என்ன துரை! இப்படிக் காட்சிக்குக் காட்சி மணி மணியான வார்த்தைகளைக் கோத்து விட்டீர்கள்? புத்தர் பிரானின் உபதேசம் கதையெங்கும் ஒலிக்கிறதே.''

"வந்து..."

"எல்லாப் புத்தகங்களையும் எனக்காகச் சிரமப்பட்டுப் படித்திருக்கிறீர்கள்!"

"நான் வந்து..."

"அதுதான் தெரிகிறதே! அன்பின் சாரமே கதைக்குள் கனிந்துவிட்டது."

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"அன்பு, சத்தியம், அஹிம்சை, சமத்துவம்...அடடா ஜீவனுள்ள வார்த்தைகள் அத்தனையும் அப்படியே பொறுக்கி விட்டீர்கள்! நவரத்தினங்கள்போல் சொற்கள் ஜொலிக்கின்றன."

போய்க்கொண்டிருந்த உயிர் எனக்குத் திரும்பி வந்தது. அன்பு, சத்தியம் என்ற சொற்கள் இல்லாமல் எப்படித்தான் கொலையும் கொள்ளையும் நிறைந்த இந்தக் காலத்தில் சமூகப் படங்களுக்கு எழுதுவது? ஆபத்துக் காலத்தில் கைகொடுத்த புத்தர் பிரானுக்கு மனத்திற்குள் நன்றி செலுத்தினேன்.

அன்றைக்கு இரவு சினிமா ஸ்டூடியோவில் 'கணவன்' என்ற தமிழ்ப் படப்பிடிப்புக்கு நிலைக்களம் தயாராகிக் கொண்டிருந்தது. கதாநாயகியாக நடிக்கும் பிரபல கேரள நடிகை குட்டியம்மாள் கடைசி நிமிடத்தில் அவசரமாக வந்து வேஷந்தரிக்கும் அறைக்குள் நுழைந்தாள். வேறு ஒரு படத்தின் 'ஷூட்டிங்'கிலிருந்து இப்போதுதான் வருவதால் சற்று தாமதமாகிவிட்டது என்றான் அவளுடைய காரியதரிசி. டைரக்டருக்குக் கோபம் தாங்க முடியவில்லை. இருந்தாலும் வேஷம் போட்டுக்கொண்டு வெளியே வந்தபோது, இவரும் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு வெளி வேஷம் போட்டுக்கொண்டார். இல்லாவிட்டால் அவளுடைய 'மூட்'கெட்டுவிடுமாம்—காதற் கட்டமாயிற்றே!

கடைசி நிமிட ஒத்திகை ஆரம்பமாயிற்று; கதாநாயகன் சோபாவில் சாய்ந்தவண்ணம் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தான். கதாநாயகி குட்டியம்மாள் அவனை நோக்கி அருகில் நடந்தாள். முகத்தைச் சர்வ கோணலாக வைத்துக் கொண்டாள்.

"அன்னா? என்னால் ஸகிக்க முடியவில்லையே அன்னா"

என்றாள்.

எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நாராயணசாமிக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. மெதுவாக எனக்கும் லலிதாவுக்கும் மட்டிலும் கேட்கும்படியாக, "என்னால் இந்தத் தமிழ்க் கொலையைச் சகிக்க முடியவில்லையே!" என்றார்.

"இப்போது படம் மட்டிலும் எடுக்கிறார்கள். வேறொரு பெண்ணை இதைப்போல் பேசச் சொல்லித் தனியே ஒலிப் பதிவு செய்வார்கள்" என்றேன்.

அதற்குள் அங்கே அந்த 'ஸெட்டில்' ஒரே பிரமிப்பாக இருந்தது. கதாநாயகன் சிகரெட்டைக் கையில் எடுத்துக் கொண்டு குட்டியம்மாளைப் பைத்தியக்காரியைப் பார்ப்பது போல் பார்த்தான். டைரக்டருடைய முகம் பேயறைந்த மாதிரி இருந்தது.

"அம்மா! இந்த மாதிரி வசனமே இந்தப் படத்தில் கிடையாதே!—இது 'கணவன்' படம்; உங்கள் எதிரே இருப்பவர் உங்கள் புருஷன்; அண்ணா அல்ல!" என்றார் டைரக்டர்.

"அடடா! மறந்து போயிட்டேன் ஸார்!—ம், சாரி!" என்று கதாநாயகன் பக்கம் திரும்பினாள். காளிபோல் முகத்தை வைத்துக் கொண்டாள் கையை வேகமாக அவன் பக்கம் நீட்டி "எண்ணுங்க! ரேஷன் அரிசி வாங்கி வராட்டி, இண்ணிக்கி ரெண்டு பேரும் ஹோட்டலுக்குப் போகவேண்டியதுதான்!" என்று கத்தினாள்.

"ரொம்ப சரி, ஷூட்!" என்றார் டைரக்டர், படப்பிடிப்பின் அந்தக் காதல் காட்சி' தொடங்கியது!

எங்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த குட்டியம்மாளின் காரியதரிசி, "இப்பத்தான் அம்மா 'தங்கை' படத்து ஷூட்டிங்கிலேயிருந்து வர்ராங்க; அந்த வசனத்தை ஞாபகமறதியாச் சொல்லிட்டாங்க" என்றான்.

படப்பிடிப்பு முடிந்தபிறகு வேர்க்க விறுவிறுக்க எங்களிடம் வந்தார் டைரக்டர். "இப்படித்தான் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. பாடத் தெரியாதவர்களைப் பாட வைத்து, ஆடத்தெரியாதவர்களை ஆடவைத்து, பேசத் தெரியாதவர்களைப் பேசவைத்துப் படம் எடுக்க வேண்டும்.

நடிக்க வருபவர்கள் நக்ஷத்திரங்களாக மாறும் வரையில் நம்முடைய பேச்சைக் கேட்பார்கள். பிறகு திடீரென்று உச்சி வானத்துக்குப் போய் மின்ன ஆரம்பித்து விடுவார்கள்!'' என்றார்.

''நக்ஷத்திரலோகத்தை எட்டுவதற்குள் நீங்கள் அவர்களை மோக்ஷலோகத்துக்கு அனுப்பாமல் இருந்தால் போதாதா?'' என்றான் கதாநாயகியின் காரியதரிசி.

மறுநாள் மாலை கடற்கரைக்குப் புறப்படுவதற்காக லலிதா உடை உடுத்திக்கொண்டு அறையின் கதவருகே தயாராக நின்றாள். நாராயணசாமி குளியல் அறைக்குள் முகம் கழுவிக் கொண்டிருந்தார். வராந்தாவில் நின்று கொண்டிருந்த என்னுடைய ஓட்டல் நண்பர் ஒருவர் லலிதா கதவருகே நிற்பதைக் கவனியாமல், ''உங்களுடைய மனைவி வந்திருக்கிறார்கள் போலிருக்கிறதே!'' என்று சாதாரணமாய் விசாரித்தார்.

எனக்குச் சுருக்கென்று தைத்தது அவருடைய வார்த்தைகள்.

''இல்லை; மனைவி இல்லை...'' என்று தடுமாறினேன்

''மன்னிக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டு வேகமாய்த் திரும்பினார் அவர்.

லலிதா என்னை அப்போது கவனித்துக் கொண்டிருந்தாள். நான் அவளைத் திரும்பிப் பார்த்த பிறகும் அவள் தன் தலையைக் கவிழ்த்துக் கொள்ளவில்லை. ஆகையால் என் தலைதான் கவிழ்ந்தது.

நாராயணசாமியிடம், ''எனக்குக் கொஞ்சம் தலை வலிக்கிறது. தயவுசெய்து நீங்கள் இருவரும் கடற்கரைக்குப் போய் வாருங்கள். நான் இங்கே தங்கி ஓய்வெடுத்துக் கொள்ளுகிறேன்'' என்றேன்.

''கடற்காற்றுப் பட்டால் தலைவலி பறந்துபோகும்.''

''மன்னித்துக் கொள்ளுங்கள்; படுத்துத் தூங்கலாமென்று நினைக்கிறேன்.''

''அப்படியானால் நாங்களும் போகவில்லை! எல்லோருமே தூங்கலாம்!'' என்றார் பெரியவர்.

அவருடைய அன்பைத் தட்டமுடியாமல் நானும் புறப்

பட்டேன். கார் திருவல்லிக்கேணிப் பக்கம் மெதுவாகப் போய்க்கொண்டிருந்தது. எதிரே ஊர்ந்துவரும் டிராம் வண்டியிலிருந்து யாரோ சத்தமிட்டார்கள். எட்டிப் பார்த்தேன்; டிராம் வண்டியின் கைப்பிடியில் ஒரு கையால் தொங்கிக் கொண்டே மறு கையை எங்களைப் பார்த்துக் காற்றில் ஆட்டினான் சேதுராமன்.

கடற்கரையில் மாலைப் பொழுது இன்பமாக இருந்தது. கூட்டம் அதிகமாக இல்லாத பக்கம் நாங்கள் நடந்தோம். தெற்குக் கடைசிக்கு மீனவர்கள் வாழும் இடத்தருகே வந்து விட்டோம். பெரிய தோணி ஒன்று கரையில் ஒதுங்கி நின்றது. அதன் மறைவில் எல்லோரும் உட்கார்ந்தோம்.

"தெரிந்த மனிதர்களிடமிருந்து மறைந்து கொள்ளும் மனப்பான்மை எனக்குத்தான் இருப்பதாக நினைத்தேன். என்னைவிட நீங்கள் இன்னொருபடி அதிகமாய்ப் போய் விட்டீர்கள்" என்றார் நாராயணசாமி. பிறகு துண்டை உதறித் தரையில் விரித்தார். நிம்மதியாகப் படுத்தார்.

"இத்தனை பெரிய கூட்டத்தில் எப்படியாவது சிலர் பார்த்துவிடுவார்கள்; தேடிவந்த அமைதி கிடைக்காதல்லவா?" என்றாள் லலிதா.

கீழே படுத்துச் சில நிமிடங்களுக்கெல்லாம் நண்பர் நன்றாகத் தூங்கிவிட்டார். நேற்று இரவு அதிகநேரம் விழித்துக்கொண்டிருந்த களைப்பு அவருக்கு. இன்று காலையும் சீக்கிரமாகவே இருவரும் எழுந்துவிட்டார்கள். அவரோடு கடைத் தெருவுக்குப் போய் கார் நிறையச் சாமான்கள் வாங்கி வந்தாள் லலிதா.

"சேது அத்தானை வழியில் பார்த்தீர்களா?" என்றாள் லலிதா.

"பார்த்தேன்."

"என்ன வேலையாக இங்கு வந்திருக்கிறார்?"

"தெரியாது."

'செந்தாமரை'யின் அந்த மாதத்துஇதழை ஒரு பையன் விற்றுக்கொண்டு போனான். அன்றைக்கு ஞாயிற்றுக் கிழமையாதலால் எனக்குத் தபாலில் பத்திரிகை வரவில்லை. விற்பனைக்கு மட்டிலும் ரெயிலில் வந்துவிட்டது. பையனைக்

கூப்பிட்டுப் பத்திரிகையை வாங்கிப் பிரித்தாள் லலிதா.

"இந்த இதழிலும் எழுதியிருக்கிறீர்களே!"

கதையைப் படித்துக்கொண்டு போனாள் லலிதா. இடையிடையே சற்றுச் சிந்தனை செய்தாள். நான் கடல் அலைகளையும் அவற்றின்மேல் மிதந்த சிறு படகுகளையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். சென்னைக்கு வந்த ஒரு மாதத்தில் இன்றுதான் கடற்கரைக்கு வரமுடிந்தது. மாலை நேரத்தில் ஸ்டுடியோவில் வழக்கமாக யாராவது பேச்சுக்கு வந்து விடுவார்கள். அப்படியில்லாவிட்டால் டைரக்டருடன் சினிமா பார்ப்பதற்காகக் கிளம்பி விடுவேன்—இன்றைய உணர்ச்சி எனக்குச் சிறையிலிருந்து விடுபட்ட கைதியினுடையதைப் போல இருந்தது. இதே கடற்கரையில் மாணவனாக இருந்தபோது எத்தனை எத்தனை மன மாளிகைகள் எழுப்பியிருக்கிறேன் தெரியுமா?

"அந்தச் சிநேகிதி உங்களிடம் அவள் கல்யாணத்தின் போது என்ன சொன்னாள்?" என்றாள் லலிதா.

"எந்தச் சிநேகிதி? கதையில் வரும் சிநேகிதியா?"

"கதையில்தான்! நீங்கள் எழுதும் கதையைப் பற்றி எனக்கும் கொஞ்சம் தெரியும்..."

"ஒருவன் எழுதுகிற கதையெல்லாமே அவன் வாழ்வில் நடந்த கதையாக இருக்கமுடியாது. வாசகர்கள் சிலர் இப்படித் தவறாகக் கற்பனை செய்து கொள்ளுகிறார்கள். எழுத்தாளனைவிட இந்த விஷயத்தில் மாத்திரம் அவர்களுக்குத்தான் அதிகக் கற்பனை உதயமாகிறது."

"எனக்கு எழுதத் தெரியாது; ஆனால் எழுதுகிற உங்களுடைய இருதயம் தெரியும்."

என் இருதயமா!

என் இருதயம் நடுங்கியது. கடலின் பெரிய அலை ஒன்று அதன்மீது வீசினாற்போல் உணர்ந்தேன்.

"கதையில் வருகிற அந்தப் பெண் என்ன சொன்னாள்? 'எப்போதும் குழந்தைகளாகவே இருந்துவிட்டால் என்ன?' என்றாளா அல்லது 'ஏன் நீங்கள் மட்டிலும் சிறுபிள்ளையாக இருக்கிறீர்கள்?' என்றாளா?" எனக் கேட்டாள். நான் பதில் அளிக்கவில்லை.

"ஒரு வேளை அப்படியிருந்தால் நீங்கள் இருவரும் இப்போது கணவனும் மனைவியுமாக இருப்பீர்கள்."

"இல்லை. நான் ஒருநாள்கூட அவளைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லை."

"உங்களை ஒன்று கேட்கலாமா?

"என்ன?"

'இரண்டு ஆண் நண்பர்களைப்போலவோ, இரண்டு சிநேகிதிகளைப்போலவோ ஒரு இளைஞரும் யுவதியும் சிநேகிதமாக இருக்க முடியுமா?"

"முடியும்."

"உண்மைதானா?"

"முடியுமென்றுதான் நினைக்கிறேன்."

அவள் பெருமூச்சு விட்டாள்.

"நானும் அதைத்தான் விரும்புகிறேன். ஆனால்...."

எனக்கு அவள் முகத்தைக் கவனிக்கும் துணிவு இப்போது இல்லை. அவளுடைய அடுத்த வார்த்தை எந்த மாதிரி இருக்குமோ என்ற அச்சம் என்னை உலுக்கியது—அவள் பேச்சுப் பாதியில் அறுந்துவிட்டது.

நினைவுக்கும விருப்பத்திற்கும் எத்தனையோ வேறுபாடு உண்டு. 'விரும்புகிறேன்' என்று மட்டிலும் அவள் சொல்லியிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? ஆனால்...?... ஏன் இந்த ஆனால்?'

அதற்குப் பிறகு இருவரும் ஒன்றும் பேசிக்கொள்ளவில்லை. கடற்கரை இருண்டு கொண்டு வந்தது. அந்த இருள் என்னை அறியாமல் எனக்குள்ளும் பரவுவதாக உணர்ந்தேன். 'ஆம், அதை இருள் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் என் மனம் அதை இருள் என்ற முறையில்தான் ஏற்றதா? க லின் ஆழத்திலே விழுந்தவுடன் உயிருக்கு மன்றாடும் பயங்கரமான துடிப்பு இருக்கிறதே அந்த நிலையில் துடித்தது உள்ளம். லலிதாவின் நீண்டவிழிகளான அந்தச் சோகத்து இருட் கடலின் ஆழத்தில்தான் அது அழுந்தித் துடித்திருக்க வேண்டும்.

"போகலாமா?" என்றாள்.

"சரி"

நண்பரும் எழுந்தார். மூவரும் காரைநோக்கி நடந்தோம்.

## 10

திருச்சிக்குத் திரும்பிவந்து பதினைந்து நாட்களுக்கு மேலாகி விட்டன. வந்த பிறகு ஒருமுறைகூட நண்பர் வீட்டிற்குப் போகவில்லை. ஐந்தாறு தடவைகள் புறப்பட்டேன். ஆனால் ஏனோ மனம் இடம் கொடுக்கவில்லை. ஒருநாள் அவருடைய பங்களாவின் வாசல் வரை போய் விட்டு உள்ளே நுழைய விரும்பாமல் வேறு எங்கோ திரும்பி நடந்தேன்.

மனம் நினைத்தபோது கால்கள் மறுத்தன; கால்கள் நடந்த போது மனம் மறுத்தது; ஆனால் அங்கு போகாத ஒவ்வொரு நாளும் என் நெஞ்சு சாந்தியற்றுத் தவித்தது. 'போகாமலே இருந்துவிட்டால் என்ன?' என்ற என்னுடைய எண்ணம் எத்தனை பலவீனமானது என்பதை நான் ஒவ்வொரு நிமிடமும் உணர்ந்தேன். அந்த உணர்வில் நான் ஏற்கனவே அங்கு போய் வந்த நாட்களின் சம்பவங்கள் தேங்கி இருந்தன; போகாமல் இருக்க முடியுமா? போகாமல் இருக்க வேண்டியது அவசியந்தானா?

"அந்தப்பக்கமே காணோமே! ஏன் இப்படித் திடீரென்று மாறிவிட்டீர்கள்?" என்று கேட்டுக்கொண்டு ஒரு நாள் மாலை வந்து சேர்ந்தார் நாராயணசாமி.

"சென்னை சென்றபோது செய்திருக்க வேண்டிய வேலைகள் அப்படியே கிடந்துவிட்டன. அவற்றோடு தினசரி அலுவல்களும் சேர்ந்து கொண்டதால் நேரம் கிடைக்கவில்லை" என்றேன்

"பழைய வேலைகள் இன்னுமா இருக்கின்றன?"

"முடிந்துவிட்டது. சிறிய நாவல் ஒன்று புதிதாக எழுதத் தொடங்கியிருக்கிறேன்."

"காலையில்தானே நீங்கள் வழக்கமாய் எழுதுகிறீர்கள்? சாயங்காலம் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஓய்வு வேண்டாமா?"

"ஆமாம்."

"தினசரி நீங்கள் மாலையில் அங்கே வரலாமே!"

"வருகிறேன்."

"கட்டாயம் வரவேண்டும். நாளையிலிருந்து தவருது உங்களை எதிர்பார்ப்பேன்" என்ருர் நாராயணசாமி.

அவர் புறப்பட்டுவிட்டார். அவரிடம் நான் பேசிய பேச்சில் ஒரே ஒரு உண்மை மட்டும் இருந்தது. புதிய நாவல் எழுதத் தொடங்கியிருந்தேன். அதை ஆரம்பிப்பதற்குரிய கற்பனையை எனக்குச் சென்னைக் கடற்கரை கொடுத்தது. நாவலை முழுவதும் எழுதிய பிறகு பத்திரிகையில் தொடராக வெளியிட எண்ணம். இதுவரை இரண்டு அத்தியாயங்களே முடிந்திருந்தன.

மாலைப் பொழுதுகள் எனக்கு யுகங்களாகக் கழிந்தன. சாமிநாதனும் இப்போது என்னிடம் அதிகமாகப் பழகுவதில்லை. அவனுடைய பழக்கத்திற்குக் காந்தம் கிடைத்துவிட்டாள். நான் சென்னையிலிருந்து எழுதிய கடிதத்தால் அவர்களுக்குள் இருந்த பிணக்கு நீங்கியது. ஓயாமல் இருவரும் தங்களுக்குள் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், சண்டையிட்டுக்கொண்டும் பொழுதை ஓட்டினுர்கள் கல்யாணப் பாதையை நோக்கி அவர்களுடைய காதல் கைவீசி நடந்தது—காதல்!

காதலைப்பற்றிய நினைவு வந்தபோதெல்லாம் நான் வேதனையால் கருகினேன். இந்த நினைவு மாத்திரம் வராதிருந்தால்...ஆம்; என் நண்பரின் வீட்டிற்கு நான் தாராளமாய்ப் போயிருப்பேன்.

சென்னைக்குப் புறப்பட்ட அந்த ஒருநாள் மட்டிலும் நான் அங்கு போகாதிருந்தால், அன்றைக்குப் பிறந்ததினமும் ஒன்ருகச் சேராதிருந்தால், அன்று அவள் என்னை அந்த உடையோடும் விழிகளோடும் வரவேற்காதிருந்தால், நான் அங்கு எத்தனை முறை வேண்டுமானுலும் தடையின்றிப் போயிருப்பேன். ஆனுல், ஏன் அன்று அவள் என்னை கதவருகே நின்று அந்தக் கோலத்தில் மனம் நிறைந்த வார்த்தைகளால் "வாருங்கள்" என அழைத்தாள்? ஏன் என்னை உள்ளே அனுமதிக்க விரும்பாதவள் போல் அந்த மின்வெட்டும் நேரம் தயங்கினுள்?—பின்பு சென்னைக் கடற்

கரையில் அந்தப் பயங்கரமான மாலைப் பொழுதின் அழகில் ஏன் அவள் என்னிடம் சிநேகத்தைப் பற்றிய அந்தக் கேள்வியைக் கேட்டாள்? ஏன் 'ஆனல்...' என்ற சொல்லோடு தன் பேச்சைப் பாதியில் நிறுத்தினுள்? கடவுளே! நான்தான் சாதாரண அன்புக்கும் சலனமற்ற நட்புக்கும் அதிகமான அர்த்தம் கற்பித்துக் கொள்கிறேனு? துரும்பை மலையாகவும், துளியைக் கடலாகவும் பெரிதாக்கிக் கற்பனை செய்யும் என்னுடைய விந்தை மனத்தின் வேண்டாத எண்ணங்களா இவை? நான் ஏன் கற்பனையுலகில் சஞ்சரிக்கும் கணவனுகப் பிறந்தேன்?

நான் அங்கே போகாமல் இருந்ததற்கு இன்னெரு முக்கிய காரணம் இருந்தது.

'உண்மைக் கதை'களை வெளியிடும் தமிழ்ப் பத்திரிகை ஒன்றில் சேதுராமன் ஒரு சிறுகதை எழுதியிருந்தான். அந்தக் கதை வெளிவந்த இதழ் என்னுடைய சொந்தப் பெயருக்குத் தபாலில் வந்தது, பிரித்தேன். கதைக்குப் போட்டிருந்த புகைப் படங்கள் என்னைத் திகைக்க வைத்தன. சென்னையில் நான் தங்கியிருந்த ஓட்டல், கடற்கரையில் நாங்கள் உட்கார்ந்திருந்த இடம் நாராயணசாமியின் காரைப் போன்ற ஒரு மோட்டார். இத்தனையும் நான் அதில் பார்த்தேன். கடற்கரைக்குப் பக்கத்தில் யாரோ வேறு ஒரு ஆணையும் பெண்ணையும் வைத்துப் படம் பிடித்திருந்தார்கள். கதையைப் படித்தேன்: 'கலைபோர்வைக்குள்ளே ஒளிந்திருக்கும் ஒரு பத்திரிகாசிரியரின் அந்தரங்க வாழ்வில் இது ஒரு நாளையக் கதை' என்ற வார்த்தைகளோடு அது முடிந்திருந்தது. 'கண்ணியவான்களாக நடிக்கும் கயவர்களின வாழ்க்கையை இந்த விதமாக இனிமேல் அடிக்கடி நமக்குச் சேதுராமன் சித்தரிப்பார்' என்று அந்தப் பத்திரிகை ஆசிரியரும் குறிப்பு எழுதியிருந்தார்.

இந்தக் கதையை நாராயணசாமி இதுவரையில் படிக்காமல் இருக்கமாட்டார். எனக்கு நேரடியாக அனுப்பியிருக்கும் சேதுராமன் அவருக்கும் அனுப்ப மறந்திருக்கவே மாட்டான். இந்தக் கதையை நான் படித்தபிறகு எந்த முகத்தைக்கொண்டு அவரைப் பார்ப்பது? எப்படிப்போய் அவர் வீட்டு வாசலை மிதிப்பது? வேண்டா விருந்தாளியாக

நான் இருக்க விரும்பவில்லை.

ஆனால் நாராயணசாமி நேரில் என்னிடம் வந்து அழைத்தபோது நான் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். அவருடைய முகத்தில் அன்பைத் தவிர எவ்விதக் களங்கமும் காணோம். அவரிடம் வாக்களித்தபடி மறுநாள் மாலை புறப் பட்டேன்.

நாராயணசாமி தனியாகத் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார். பெரிய தோட்டமாகையால் அதற்குள் அவரோடு சேர்ந்து நடப்பது இன்பமாக இருந்தது. மரநிழலில் மெதுவாக நடந்தோம். வழியெல் லாம் வெள்ளை வெளேரென்று வேப்பம் பூ கொட்டிக் கிடந் தது. கால்மணி நேரம் உலவிய பிறகு மரத்தடியில் கிடந்த பெஞ்சில் சற்று நேரம் உட்கார்ந்தோம்; இருவரும் அதிக மாகப் பேசிக்கொள்ளவில்லை. பிறகு எழுந்து வழக்கமாகப் பொழுது போக்கும் மண்டபத்திற்கு வந்தோம். அங்கே மேசையில் சிற்றுண்டி தயாராக இருந்தது. கோதுமை அல்வா, கீரைவடை, பழங்கள்...

கூஜாவில் காபியுடன் வந்து எங்களருகில் உட்கார்ந் தாள் லலிதா. "இத்தனை நாளாய் இந்தப் பக்கமே காணோமே!" என்றாள்.

லலிதாவை ஏறிட்டுப்பார்த்தேன்; லலிதாதானா அவள்! உருவம் மாறிப் போயிருந்தாள். பத்துப் பன்னிரண்டு நாட்களாய் நோய்ப் படுக்கையில் கிடந்து, சமீபத்தில் எழுந்த ஒருத்தி எப்படி இருப்பாளோ அப்படி இருந்தாள். தலையைச் சரியாகக்கூட வாரி முடித்துக் கொள்ளவில்லை, சாயம்போன பழைய சேலையையும் ரவிக்கையையும் அணிந் திருந்தாள். பிரமுகர் நாராயணசாமியின் மனைவியாக அவள் அன்று தோன்றவில்லை. முதல்முதலாக நான் அவளைச் சந்தித்தபோது அவளிடம் கண்ட எளிமைத் தோற்றம் அது என்றுகூடச் சொல்லமுடியாது. அந்த வீட்டு ஏழைச் சமையற்காரியின் மகளைப்போல அவளே தன்னை செய்து கொண்டிருந்தாள். முகம் சற்றுப் பெரியதாகவும் கண்கள் சிவந்தும் இருந்தன.

நான் அவளை மறுபடியும் கவனித்தேன். என்னைக் கவனியாததுபோல் அவள் காபியைத் தம்ளரில் ஊற்றிக் கொண்டிருந்தாள்

"அல்வா எப்படி இருக்கிறது, துரை? நீங்கள் இன்று வரப்போவதாக லலிதாவிடம் சொன்னேன். அவளுடைய கைபட்டாலே எந்தப்பொருளுக்கும் தனி ருசிதான் இல்லையா?" என்று நாராயணசாமி சிரித்தார்.

"அப்படியானால் இனி அதிக நாள் கழித்தே வருகிறேன்; அப்போதுதானே இந்த அல்வா கிடைக்கும்!"

"வேண்டாம்; தினந்தோறும் செய்யச்சொல்கிறேன்; வாருங்கள்."

லலிதா மெதுவாகப் புன்னகை செய்தாள்.

அன்றைக்கு என்னிடம் லலிதா சரியாக முகம் கொடுத்துப் பேசவில்லை; அதற்குப் பிறகு சில நாட்களும் அப்படியே நடந்துகொண்டாள். எங்களுடைய கலகலப்பான பேச்சுக்குக் குறுக்கே எப்படியோ ஒரு திரை விழுந்துவிட்டது. ஆனால் அந்தத் திரைக்குப் பின்னே அவளுடைய அன்புச் செயல்கள் விஸ்வரூபம் எடுத்து வளர்வதைக் கண்டேன். அவளுடைய மனமாறுதலைத் தெரிந்து கொண்டு அங்கு நான் வராமல் இருந்துவிடக்கூடாதே என்பதற்காக அவள் என்னிடம் அதிகமான பரிவைக் காண்பித்தாள். ஒவ்வொரு நாளும் நான் அங்கிருந்து புறப்படும்போது மறுநாளைக்காக என்னிடம் சில வேலைகள் கொடுப்பாள். "மதிப்புரைக்கு வந்த நல்ல நாவல்கள் இருந்தால் கொண்டு வாருங்கள்; பத்திரிகை எடுத்து வாருங்கள்" என்பதுபோல் ஏதும் சொல்லி அனுப்புவாள்—படிப்பதற்கு அவள் வீட்டில் இல்லாத பத்திரிகையும் புத்தகமுமா? இல்லை! அவள் விருப்பினால் மறுநிமிடமே ஒரு புத்தகக் கடையை விலைக்கு வாங்கத் தயாராக இருந்தார் அவளது கணவர்.

லலிதா இப்போதெல்லாம் வேண்டுமென்றே தலை வாரிக் கொள்வதில்லை; வேண்டுமென்றே நல்ல உடை உடுத்துவதில்லை. வேண்டுமென்றே தன்னைச் சன்யாசினிக் கோலத்திற்குத் தயார் செய்துகொண்டு வந்தாள்; இதன் கருத்து என்ன? எனக்கு ஒன்றுமே தெரியாதென்று நினைத்தாளா?

அவள் தன்னுடைய நெஞ்சின் சலனத்தையும் அதன் பலனையும் கண்டுகொண்டாள். ஓரிருமுறை அவளுடைய உள்ளம் என்னெதிரே அவளையறியாமல் கட்டவிழ்ந்து கொட்டிவிட்டதல்லவா? அவளது பிறந்த தினத்தன்று அவளைக் கொல்லத் துணிந்த உணர்ச்சிகளை இப்போது அவள் கொல்லத் துணிந்திருக்கிறாள். சென்னைக் கடற்கரையில் ஒருநாள் மாலை அவளை வஞ்சிக்கத்துடித்த உணர்ச்சிகளை அவள் இப்போது வஞ்சிக்கத் துடிக்கிறாள். அவளுடைய இந்தக் கடுமையான மனப்போர் அவளுக்குள்ளே இடைவிடாது குமுறிக் கொண்டிருந்ததை நான் அறிந்தேன். ஆனால் அதைத் தணிக்க நான் முயன்றேனா? முயன்றால் முடிந்திருக்குமா? ஏன் நான் முயலவில்லை?

ஏன் தெரியுமா?

நான் அந்த ஊரைவிட்டே சில மாதங்கள் வெளியூர் போயிருக்கலாம். பத்திரிகை வேலைக்கு நான் நேரே பத்திரிகாலயத்தில் இருந்துதான் ஆகவேண்டுமென்பதில்லை. என்னுடைய கிராமத்திலிருந்துகொண்டே எழுதி அனுப்பலாம்— அப்படி வெளியூருக்கே போகாவிட்டால்கூட, இங்கிருந்து கொண்டு எதையாவது காரணத்தைச் சொல்லி அவர்கள் வீட்டுக்கும் போவதை அடியோடு நிறுத்திக்கொண்டிருக்கலாம். ஆனால் நான் அதை எல்லாம் செய்யவில்லை.

ஏன் தெரியுமா?

அதை நான் உங்களுக்கு இப்போது சொல்லப்போவதில்லை! சொல்லும் காலம் இன்னும் வரவில்லை. இனி அந்தக் காலம் என்றைக்குமே வராதிருந்தாலும். இருக்கலாம். மனதில் நினைப்பதையெல்லாம் ஒருவன் வெளியில் சொல்லலாமா? அப்புறம் அப்படி நினைப்பதே தப்பு என்று இந்தச் சமூகம் வரிந்து கட்டிக்கொண்டு என்மீது பழி சுமத்தாதா?

ஒன்று மட்டும் சொல்கிறேன். அன்பு என்ற அழகான சொல் மிகவும் கொடுமை வாய்ந்தது. அன்பின் உயர்வால் உலகில் மலர்ந்திருக்கும் ஆயிரம் ஆயிரம் இன்பக் கதைகளைச் சரித்திரங்கள் சொல்கின்றன? ஆனால் அந்தக் கதைகளின் இன்ப முடிவுக்குள்ளே உள்ள இரத்தக்கண்ணீரையும், இதயக் குமுறலையும். வெளியிட முடியாத வேதனையையும்

ஏன் யாரும் நினைப்பதில்லை? அன்பினால் விளைந்த துன்பங்கள் அன்பினால் கெட்டலைந்த மனிதர்கள், அன்பினால் நிகழ்ந்த கொலைகள், கொள்ளைகள், எத்தனை எத்தனை? 'அன்பேசிவம்' என்ற தத்துவத்தை ஒரே ஒரு வகையில் நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்; அன்புத் தெய்வமான சிவபெருமான் சிறிதும் கவலையின்றிச் சாவின் நிலைக்களமான சுடலை வெளி யில் ஆனந்தத் தாண்டவமாடுகிறாரல்லவா? நான் அந்த இரக்கமற்ற அன்பை என் வெறிகொண்ட உள்ளத்தோடு சபிக்கிறேன்.

அன்று ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் மூன்று மணியிருக் கும். அலுவலக வெளிவராந்தாவில் உட்கார்ந்து வாசகர் எழுதிய கடிதங்களைப் படித்துக்கொண்டிருந்தேன்; நாராயணசாமியின் கார் அந்தப் பக்கமாகச் சென்றது. அவர் என்னைக் கவனித்து விட்டார்; கார் நின்றது, இறங்கி வந்தார். இருவரும் பேச ஆரம்பித்தோம். உலகத்தில் உள்ள எத்தனையோ விஷயங்களைத் தொட்டுக்கொண்டு வந்தது பேச்சு. அலுவலக பையன் ஜானகி குளிர்ந்த தண்ணீரை அவரிடம் கொண்டு வந்து வைத்தான். உள்ளே யிருந்த வெட்டிவேர் விசிறியை நீரில் நனைத்து அவரிடம் நீட்டினேன். அதிக உற்சாகமாய் பேசிக்கொண்டு வந்தார் நண்பர்.

"ஒரு விஷயம் கேட்கிறேன். பொதுப்படையான விஷயம் அது. நீங்கள் ஏதும் தவறாக நினைத்துக் கொள்ளக் கூடாது."

"தாராளமாய்க் கேளுங்கள்; என்னிடம் நீங்கள் எதை யும் கேட்கலாம்" என்றேன்.

" 'கலை உணர்வு உள்ளவர்கள் சுலபமாக உணர்ச்சி வசப் படுகிறார்கள். ஆகையால் மனிதப் பண்பிலிருந்து அவர்கள் நழுவுவதற்கு அதிக நேரம் ஆவதில்லை' என்கிறார்களே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

மலரைச் சுற்றி வண்டுகள் வட்டமிடுவது மலரின் குற்ற மல்ல; தேனைச் சுற்றி ஈக்கள் மொய்ப்பது தேனின் குற்ற மல்ல. கலைஞர்களுக்கு ஏற்படுகிற சூழ்நிலையில் கலை உணர்வு அற்றவர்கள் இருப்பார்களானால் எந்தவிதமாக அவர்கள் நடந்து கொள்வார்கள் என்பதுதான் கவனிக்க வேண்டிய

விஷயம் ஒழுக்கமும் கட்டுப்பாடும் மனிதப் பண்புக்கே அஸ்திவாரம் என்பதை நான் ஒரு போதும் மறுக்கவில்லை. ஆனால் கலைஞர்களைக் குறை கூறுவதைத்தான தவறென்கிறேன். அவர்களுக்கு நெஞ்சு இருக்கிறது நினைத்துப் பார்க்க. உடல் உணர்வைவிட உள்ளத்தின் உணர்வால் வாழ்பவர்கள் கலைஞர்கள்.''

பெரியவர் பெருமூச்சு வீட்டார்! "உடல். உள்ளம் ஆத்மா...'' என்று மெதுவாய்த் தமக்குள் சொல்லிக் கொண்டார்.

"கலைஞன் ஆத்ம ஞானி இல்லை என்றாலும் உடல் உணர்வால் மட்டிலும் வாழ்கிறார்களே அவர்களிலிருந்து அவன் வேறு பட்டவன்.''

"உடலின் தேவை இல்லாமல் உள்ளுணர்வால் மட்டிலும் மனிதர் வாழ முடியுமா?''

இந்தக் கேள்வி என்னைத் திகைக்க வைத்தது. வேறு யாராவது கேட்டிருந்தால் யோசியாமல் பதிலளித்திருப்பேன் நாராயணசாமியே இதை என்னிடம் கேட்டுவிட்டார்! என் தலைக்குள்ளே வலி எடுத்தது. கண்ணிமைக்கும் நேரத்தில் எதை எதையோ நினைத்துவிட்டேன். சேதுராமன் அவரைப் பற்றிக் கூறிய விவரங்கள் என் தலைவலியை அதிகமாக்கின. உள்ளத்தின் தொடர்பால் மட்டிலும் வாழ முடியுமா?

"ரொம்பவும் யோசிக்கிறீர்களே!'' என்றார் நண்பர்.

"வாழமுடியாது—சந்தர்ப்பங்களின் கொடுமையால் சிலர் வாழ்கிறார்கள். லட்சியத்திற்காக சிலர் உடலை வாட்டுகிறார்கள்.''

"சந்தர்ப்பங்களின் கொடுமை...ஹூம்! சந்தர்ப்பங்களின் கொடுமை சில சமயம் சரியான தண்டனையாகவும் இருக்கிறது.''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் அவருடைய குரலின் போக்கிலிருந்து எவ்வளவு தூரம் அவர் கலங்கியிருக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டேன். இருவரும் குனிந்த தலை நிமிராமல் புயலுக்குப்பின் ஏற்பட்ட அமைதியில் அகப்பட்டவர்கள்போல் உட்கார்ந்திருந்தோம்.

"துரை'' என்று உணர்ச்சி பொங்க என்னுடைய

இருகரங்களையும் திடீரென்று பற்றிக்கொண்டார். அவருடைய முகத்தில் எல்லையற்ற துக்கத்தின் சாயை படிந்திருந்தது.

"உங்களை நான் ஒருபோதும் தவருக நினைக்கமாட்டேன், துரை! நீங்களும் என்னை அப்படி நினைக்கமாட்டீர்களே?"

என்னுடைய மனம், துடிப்பை நிறுத்திவிட்டது. கலங்கும் கண்களோடு அவரைக் கவனித்தேன். அவருடைய பேச்சின் பொருள், என் முன்னே மின்வெட்டைப்போல் நெளிந்து மறைந்தது. என்னைப்பற்றியும் லலிதாவைப்பற்றியும் சேதுராமன் எழுதிய அந்தக் கதை; எவ்வளவு தூரம் அவரை அது பாதித்திருக்கிறது என்பதை இன்றுதான தெரிந்துகொண்டேன்.

அவரைப்பற்றிய நினைவுகள் வேகமாய் என் மனக்கண்ணில் சுழன்றன. இன்னும் அவரை என்ஞல் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. முதற்சந்திப்பில் அவர் நடந்துகொண்டவிதம், பிறகு அவரிடம் வெளியான குழந்தையுள்ளம், அவரது காதல் கல்யாணம், புத்தக ஆராய்ச்சி, கலைப்பற்று எல்லாம் ஒரே சிக்கலாக எனக்குத் தோன்றியது. கதைகளிலும் நாடகங்களிலும் எழுத்தாளர்கள் சிலர் பாத்திரப்பண்பு என்ற ஒன்றைவகுத்துக்கொண்டு கதையின் ஆரம்பம் முதல் கடைசிவரை ஒரே மாதிரியாக மனிதரின் குணங்களைச் சித்திரிக்கிருர்களே, அந்த இலக்கணத்தை நான் நம்புவதா? அல்லது இதோ என் எதிரே பல்வேறு சந்தர்ப்பங்களின் பண்புகளால் ஒரே உருவத்தில் தோன்றும் இந்த அன்பு மனிதரின் உண்மை வாழ்வை நம்புவதா?

நாழிகையாயிற்று.

"இன்று ஞாயிற்றுக்கிழமை. வீட்டிற்கு வாருங்கள். நல்ல சினிமாவாக இருந்தால் வெளியே புறப்படுவோம். அல்லது வீட்டிலேயே நிம்மதியாய் இருந்து பேசுவோம்."

நான் தயங்கினேன்.

"என்ன யோசனை செய்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை. நான் அங்கு வராமலே இருந்திருந்தால் உங்களுக்கு இந்தக் கஷ்டம் வந்திருக்காதல்லவா?

என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். நான் இனி எங்கும் வரவில்லை''—தலையைக் கீழே தொங்கவிட்டுக்கொண்டு அவரை நேரடியாகப் பார்க்க வெட்கியவன்போல் இந்த வார்த்தைகளைக் கூறினேன்.

அவர் சிரித்தார். எழுந்து நின்று என்னுடைய கரத்தைப் பற்றினார். "எழுந்திருங்கள், துரை. கோழையைப் போல் எதையும் என்னிடம் பேசாதீர்கள். இந்த உலகம் வாழத் தெரியாதவனுக்காக நீலிக்கண்ணீர் வடிக்கும்; வாழத் துடிப்பவன் வழியில் குறுக்கே போய் நிற்கும். பழிப்பவருக்காகப் பயந்தால் வாழவே முடியாது'' என்றார்.

நான் அவருடன் எழுந்தேன். காரின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே உட்கார்ந்தபோது, தெருப்பக்கத்திலிருந்து வந்த சாமிநாதனும் காந்தமும் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்தனர்.

## 11

வாழ்வில் ஒவ்வொருவருக்கும் மறக்கமுடியாத நிகழ்ச்சிகள் ஏற்படுகிற நாட்களோ நிமிடங்களோ சில இருக்குமல்லவா? அவை இன்பம் நிறைந்தனவாக இருக்கலாம்; துன்பம் சூழ்ந்தவையாக இருக்கலாம். இந்த நாள் என் நெஞ்சை இருகூறாகப் பிளந்த நாள்; என் உயிரையும் உணர்வையும் உறிஞ்சிய நாள்; என்னைத் துரும்பாக்கிச் சுழல்காற்றில் அலையவிட்ட நாள்—

அலுவலகத்திலிருந்து என்னை அழைத்துவந்த நாராயணசாமி, "மாடி அறையில் உட்கார்ந்திருங்கள். ஐந்து நிமிடத்தில் வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு வீட்டிற்குள் நுழைந்தார். டிரைவரிடம் நகரத்தில் நடக்கும் சினிமாக்களைப் பற்றிப் 'போன்' மூலமாக விசாரித்து வைக்கச் சொன்னார்.

மாடிப்படிகளில் ஏறினேன். பாதி வழி வந்த பிறகு மாடியிலிருந்து லலிதாவின் குரல் கோபமாக ஒலித்தது. மேலே என் கால்கள் நகரவில்லை. அங்கு நின்றபடி உற்றுக் கேட்டேன்! லலிதாவின் கோபக் குரலுக்குப் பதிலாக வேறு குரலும் கேட்டது. அது சேதுராமனின் குரல்.

அவன் அவளிடம் பேசிய பேச்சு;—பேச்சா அது? நான் அங்கு நிற்க விரும்பவில்லை. ஓடோடியும் திரும்பி வந்து யார் கண்ணிலும் படாமல் என்னுடைய அறைக்குப்போக நினைத்தேன்; ஆனால் அப்படித் திரும்பி வரக்கூடிய சந்தர்ப்பமும் அது இல்லை. நான் அங்கு நின்றுதான் ஆகவேண்டும். அவசியமானால் அந்தச் சேதுராமனை அணு அணுவாக—

என் கைகள் நடுங்கின. உடம்பெல்லாம் பதறியது. கைப்பிடிக் கட்டையை இறுகப் பற்றிக் கொண்டேன். மேலேயும் போகவில்லை; கீழேயும் இறங்கவில்லை.

"அத்தான்! உன்னை மரியாதையாய்க் கேட்டுக் கொள்கிறேன், போ வெளியே!"

"லலிதா!"

"போ!"

"போகாவிட்டால்!"

"போடா வெளியே!"

"என்ன 'போடா'வா?"

"நான் என்றால் உனக்குக் கசப்பு. அந்தத் துரை என்றால்...அவனுக்கென்ன புகழ் பெற்ற ஆசிரியன்..."

கன்னத்தில் பளீர் என்று அறை விழும் ஓசை கேட்டது. அவன் சிரித்தான்.

"இன்னொரு கன்னத்திலும் அறை, லலிதா!"

"மிருகம்!"

"துரை மனிதன்! நான் மிருகம்!"

"ஆமாம்; போடா வெளியே. அத்தையைக் கூப்பிடட்டுமா?"

அவன் மீண்டும் வெறியோடு சிரித்தான்.

"அத்தையா? உன் அத்தைக்கு எல்லாம் தெரியும். யாரோ ஒரு நாடோடியுடன் நீ சுற்றுவதைவிட என்னோடிருப்பதை என் சித்தி தடுக்கமாட்டாள்."

மாடிப்படிகள் தலைகீழாய்ச் சுழன்றன. கீழே விழுந்து விடாதபடி கைப்பிடியை இறுகப் பற்றிக்கொண்டேன். சித்தியின் சம்மதத்தின் பேரிலா இவன் இங்குவந்திருக்கிறான்; எந்தப் பெண் மனமாவது இதைக் கனவிலும் ஏற்றுக் கொள்ளுமா!

அதற்குமேல் அங்கு பேச்சொலி கேட்கவில்லை. எதையோ எடுத்து அவள் சேதுவின் மீது வீசினாள். பாத்திரங்கள் உருண்டன. அந்த அறைக்குள் மட்டிலும் பூகம்பம் ஏற்பட்டது போலிருந்தது, மறுவிநாடி கன்னத்தில் கையை வைத்தவாறே தடதடவென்று கீழே இறங்கி வந்தான் சேது. என்னைக் கண்டவுடன் அவன் கண்கள் நெருப்பைக் கக்கின.

"ஆசிரியரே! வாருங்கள். உங்களை எதிர்பார்க்கும் சமயத்தில் நான் வந்துவிட்டேன்—சீக்கிரம் போங்கள்; அவள் தனியாகத்தான் இருக்கிறாள்" என்றான்.

நான் மறுபுறம் திரும்பியபோது மாடியின் கதவருகே அவள் நின்றாள். அவள் கையில் பிரம்பு துடித்துக்கொண்டிருந்தது. காளீதேவி மாதிரி அவள் ஆவேசத்துடன் துடித்தாள். என்னைக் கண்ட பிறகுகூட அவளுடைய கோபம் தணியவில்லை. கையிலிருந்த பிரம்பு மட்டிலும் நழுவிக் கீழே விழுந்தது,

"நீங்கள் எங்கே வந்தீர்கள்?"

நான் ஒன்றும் பதில் பேசவில்லை.

'அருமையான நாடகம் இது! எத்தனை அழகாய் நடிக்கிறாய்?—அவர் எங்கே வந்திருப்பார்? உனக்குத் தெரியாதா லலிதா?" என்று பரிகாசம் செய்தான் சேது.

மத்தியில் நான் நின்றேன். ஒருபுறம் நெருப்பாக லலிதாவும் மறுபுறம் புழுதி மண் நிறைந்த சூறாவளியாக சேதுவும் நின்றார்கள்.

"அவர் வீட்டில்' இல்லை; போய்ப் பிறகு வாருங்கள்!" என்றாள் லலிதா.

"அவர் இல்லாததால்தானே இவர் வந்திருக்கிறார்?" என்றான் சேது.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. என் தலை சுற்றியது. என்னைப் பார்த்துத்தானா லலிதா இப்படிச் சொல்கிறாள்? 'அவர் வீட்டில் இல்லை; போய் வாருங்கள்' என்று சொல்வது என்னிடம்தானா? வீட்டைவிட்டு வெளியே போகச் சொல்வது இந்தத் துரையையா? அதுவும் சேதுராமன் முன்னிலையிலா? நான் என்னை நம்பவில்லை.

அவளையும் நம்பவில்லை.லலிதாவின் முகத்தைத் திகைப்போடு நோக்கினேன்.

"துரை! உங்களைத்தான் சொல்கிறேன்" என்றாள் அவள்.

மறுகணம் என்ன நிகழ்ந்ததென்று எனக்குத் தெரியாது. எப்படி என்னுடைய அறைக்கு வந்து சேர்ந்தேன் என்பதும் விளங்கவில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் அவனையறியாத ஒரு சக்தி இந்த மாதிரிச் சமயங்களில் வழிகாட்டி உதவுகிறது. அந்தச் சக்திதான் என்னைக் கொண்டுவந்து என்னுடைய அறைக்குள்ளே பத்திரமாய்த் தள்ளியிருக்க வேண்டும்.

நான் அந்த மாலைப் பொழுதில், உறக்கத்திற்கும் விழிப்புக்கும் மத்தியில் பலப்பல கனவுகள் கண்டேன். இருண்ட காட்டில் புலி என்னைத் துரத்துவது போலவும், சென்னை நகரத்தெரு ஒன்றில் என் மீது மாட்டார் ஏறி விட்டது போலவும், ஆகாயத்தில் நிலையில்லாமல் பறந்து கொண்டே அலைவது போலவும் அந்தக் கனவுகள் இருந்தன.

மறுநாள் காலையில் வெகு நேரம்வரை படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியவில்லை உடம்பு முழுவதும் அடித்துப் போட்டதுபோல் வலித்தது. தலைவலியும் பொறுக்க முடியவில்லை. எட்டு மணியானவுடன் ஜானகிராமனைக் காபி வாங்க அனுப்பிவிட்டுப் படுக்கையிலேயே கிடந்தேன். நாள் முழுவதும் இப்படியே படுத்திருந்தால் தேவலாம் போலிருந்தது.

சாமிநாதன் இப்போது என்னுடன் தங்கவில்லை. அச்சகத்திற்கடுத்தாற் போலிருந்த தனி அறைக்குப்போய் விட்டான். அடிக்கடி அவன் என்னை முன்போலச் சந்திப்பதில்லை. இந்தச் சமயம் மாத்திரம் அவனைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கும் போதே அவன் வந்துவிட்டான்.

"இன்னும் எழுந்திருக்கவில்லையா? என்ன உடம்புக்கு?" என்றான்.

"ஒன்றுமில்லை" என்றேன் சோம்பலை முறித்துக் கொண்டு.

"என்னவோ ஒருமாதிரி இருக்கிறாய்" என்றான், நெற்றியில் கையை வைத்துப் பார்த்துவிட்டு. "உனக்கு உடம்பு சரியாக இல்லை; மனமும் சரியாக இல்லை" என்றான். நான்

சிரிக்க முயன்றேன்

"துரை!"

"என்ன?"

"என் வார்த்தைக்குக் கொஞ்சம் மதிப்புக்கொடு; சீக்கிரம் கல்யாணம் செய்துகொள். நானும் காந்தமும் அதற்கு ஏற்பாடு செய்கிறோம்."

"உங்கள் கல்யாணம் முதலில் நடக்கட்டும்."

"அதுதான் நிச்சயமாகிவிட்டதே! அதற்குள் உன் கல்யாணமும் முடிவாக வேண்டுமென்று நினைக்கிறேன். நாங்கள் மட்டுமல்ல, காந்தத்தின் தகப்பனாரும் உன்னைப் பற்றி அக்கறை கொண்டிருக்கிறார்."

"எல்லோருக்கும் நன்றி. நான் சமீபத்தில் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை! நான் இப்படி இருப்பதில் யாருக்கென்ன கஷ்டம் வந்தது?"

"யாருக்கோ கஷ்டம் வந்ததால்தான் சொல்கிறேன்."

"தயவு செய்து இனி இதில் தலையிடாதே!"

"உன்னை நல்லவனென்று நினைத்தேன். நீ அயோக்கியன் துரோகி; வஞ்சகன்!"

"அப்படியே இருக்கட்டும்; உன் வாயாலே அதைக் கேட்டுவிட்டதில் எனக்கு ரொம்பவும் சந்தோஷம்."

"உன்னைப்பற்றி ஊரெல்லாம் சிரிக்கிறது துரை. என்னால் காது கொடுத்துக் கேட்கமுடியவில்லை. இப்படியே போய்க் கொண்டிருந்தால் இந்தத் தமிழ்நாடே சிரிக்கப் போகிறது."

"சிரிக்கட்டும்."

"நீ பிறர் வாழ்க்கையில் தலையிடுகிறாய்! கௌரவமான ஓர் குடும்பத்தையே குட்டிச் சுவர் செய்கிறாய். உன் பெயர் கெடுவது கிடக்கட்டும். ஒரு நல்ல மனிதரின் பெயர். ஓர் இளம் பெண்ணின் மானம்...துரை, நீ மனிதன்தானா? மனிதப் பண்பை மறந்து விட்டாயா?"

நான் வேறு பக்கம் திரும்பிப் படுத்தேன். நேற்று நெஞ்சில் விழுந்த அடி போதாதென்று, இங்கே இவன் அதைக் கூரான ஊசிகளால் துளைத்துக் கொண்டிருக்கிறான்.

"இத்தனை நாளாய் கஷ்டப்பட்டுத் தேடிய பெயர்

இப்படிக் கெட்டுப் போகிறதே துரை! எதிர்காலத்தைப் பற்றி நீ எண்ணுவதில்லையா! படுகுழியில் நீ விழுந்து கொண்டிருக்கிருய், மனிதர்கள் உன்னை வெறுத்து ஒதுக்கும் பாதையில் நீ போகிருய்.''

''நீகூட என்னைச் சந்தேகிப்பது விசித்திரந்தான்'' என்றேன்.

''ராமகிருஷ்ணரின் வாக்கு முற்றிலும் உண்மை; எவ்வளவுதான் உயரப் பறந்தாலும் கழுகு கீழே குப்பை மேட்டில் கிடக்கும் செத்த எலிகளைத்தான் தேடுமாம்''— இப்படிச் சொல்லிவிட்டு அவன் வெளியேறினுன்.

அவன் வெளியே போனது எனக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. கோபமாகச் சென்றதால் சீக்கிரம் திரும்பிவர மாட்டான் என்று நினைத்தேன். ஆனுல் அரைமணி நேரத்திற்குள் திரும்பவும் அங்கே வந்து விட்டான். அவனோடு இன்னும் மூன்று பேர் அவசரமாய் உள்ளே நுழைந்தார்கள். காந்தம், அவளுடைய தகப்பனுர், அவளுடைய குடும்ப டாக்டர்.

''உங்களுக்கு என்ன உடம்புக்கு?'' என்ருர் டாக்டர்.

''ஒன்றுமில்லையே!''

சாமிநாதன் என்னைக் கண்களால் கண்டித்தான்.

டாக்டர் என் சட்டையைக் கழற்றச் சொன்னுர்; நாக்கை நீட்டச் சொன்னுர்; கண்களைத் திறக்கச் சொன்னுர் தீவிரமாகப் பரிசோதனை நடத்தினுர். ''உங்களுக்குத் தலை சுற்றுகிற மாதிரி இருக்கும்! நாக்கு கசக்குமே! மனசைப் புரட்டிக்கொண்டு வருமே!'' என்ருர்.

அவர் சொல்கிற எந்த மாதிரியும் எனக்கு இல்லை. என்ருலும் வாயைத் திறவாமல் சும்மா இருந்தேன். ''இல்லை'' யென்று சொல்லவில்லை. அவரோ ராமலிங்கத்தின் குடும்ப வைத்தியர். ராமலிங்கமோ பக்கத்தில் நிற்கிருர். உண்மையை எப்படிச் சொல்வது?

''மூளைக்கு ரொம்பவும் வேலை கொடுத்திருக்கிறீர்கள். கொஞ்சம் ஓய்வு வேண்டும். இரண்டு நாளில் சரியாகிவிடும். மருந்து கொடுத்தனுப்புகிறேன். கஞ்சியும் ஆரஞ்சுப்பழமும் சாப்பிடுங்கள்'' என்ருர்.

கதை எழுதுகிறவனுக்கும் மூளைக் கோளாறுகளுக்கும் உள்ள சம்பந்தத்தை மட்டிலும் அவர் சரியாகத் தெரிந்து வைத்துக்கொண்டிருந்தார். அதில் எனக்கு ஒரு திருப்தி. அந்தக்கோளாறு வந்துவிடுமோ என்றுதான் நானும் பயந்து கொண்டிருந்தேன். எல்லோரும் புறப்பட்டார்கள். நான் எழுதிக் கொண்டிருந்த நாவல் எதிரே கிடந்தது. ஜானகிராமனை ஓட்டலுக்கு அனுப்பிச் சூடான இட்லியும் காபியும் வாங்கிவரச் சொல்லிச் சாப்பிட்டேன். டாக்டர் அனுப்பிய மருந்தையும் காந்தத்து வீட்டுக் கஞ்சியையும் வெளியே கொட்டச் சொன்னேன். வாசற்கதவருகே ஜானகிராமனை உட்காரச் செய்து விட்டு. நாவலைத் தொடர்ந்து எழுத ஆரம்பித்தேன்.

அந்த நாவலைத் தொட்டவுடன் என்னுடைய மனவலி, உள்ளச் சுமை, நினைவுத்துன்பம் எல்லாம் எங்கோ சென்று விட்டன. என்னை மறந்தேன், புது மனிதனாக மாறித் தடங்கலற்ற வேகத்தில் எழுதிக்கொண்டு போனேன். புதிய கற்பனைக்கே அந்த நாவலில் ஒன்றும் இடமில்லை. எல்லாம் சில மாதங்களாக எதிரே நடந்த நிகழ்ச்சிகள்.

சாயங்காலம் டாக்டர் வந்தார். அவரிடம் தனியாகச் சாமிநாதன் என்னைப்பற்றி எதுவும் சொல்லியிருப்பான் என்று தெரிந்தது. அவர் மெதுவாக என்னுடைய க்ஷேமலாபங்களை விசாரிக்கத் தொடங்கிக் கடைசியாகக் கல்யாணக் கட்டத்தில் வந்து நின்றார்.

"....சீக்கிரம் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். அதன் பிறகுதான் ஒரு பெண்ணின் துணை ஆணுக்கு எத்தனை அவசியம் என்பதை நீங்கள் உணர்வீர்கள்" என்றார்.

"பெண்ணின் துணையால் ஆண்படுகிற அவஸ்தையும் அதன் பிறகுதான் தெரியும்" என்றேன் நான.

"கஷ்டமில்லாத சுகம் கிடையாது ஸார்; சீக்கிரம் எனக்கு விருந்துச் சாப்பாடு போடுங்கள்" என்றார் அவர்.

மூன்று நாட்கள் ஆகிவிட்டன. நாவலில் பாதிப்பகுதி முடிந்தது. நான்காவது நாள் என்னிடம் நாராயணசாமியின் டிரைவர் வந்தான். "உங்களை ஐயா அழைத்துவரச் சொன்னார்கள்" என்றான்.

நான் எதிர்பார்த்த அழைப்பு இத்தனை நாட்கள் கழித்து

வந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நாராயணசாமியே வருவார் என நினைத்தேன்.

"ஐயாவா அழைத்துவரச் சொன்னார்?"

"ஐயா சொன்னதாக அம்மா சொன்னார்கள்."

"வேலை அதிகமாக இருக்கிறது; இன்னொரு நாள் வருகிறேன் என்று சொல்."

"உடனே திரும்பி விடலாமென்றார்கள்."

"இப்போது நேரமில்லை."

அவன் போய்விட்டான்.

மறுநாள் தபாலில் லலிதாவின் கடிதம் வந்தது. அவள் எனக்கு எழுதியிருந்த முதல் கடிதம்:

அன்புள்ள துரை அவர்களுக்கு,

வணக்கம்.

அவருக்கு உடல் நலம் இல்லை. உங்களைப் பார்க்க மிகவும் விரும்புகிறார்; தயவு செய்து இன்று வந்து செல்லுங்கள். நானும் உங்களிடம் நேரில் பேச வேண்டியிருக்கிறது.

லலிதா.

கடிதத்தை நான் பலமுறை படித்தேன். அதில் இருந்த முதல் வாக்கியம் எனக்குப் பெருந்துன்பத்தைக் கொடுத்தது. நாராயணசாமி உடல் நலத்தோடு இருந்தால் கட்டாயம் இங்கு வராமல் இருந்திருக்க மாட்டார். திடீரென்று அவருக்கு இப்படிக் கஷ்டம் வந்ததற்குக் காரணம், அன்றைக்கு அவர் வீட்டில் நிகழ்ந்த சம்பவத்தோடு தொடர்புடையதாகத்தான் இருக்கவேண்டும்.

கடிதத்தின் கடைசி வாக்கியமும் என்னை அதிகமாகச் சிந்திக்கத் தூண்டியது. 'நானும் உங்களிடம் நேரில் பேச வேண்டியிருக்கிறது.'—அவள் எத்தனை நெஞ்சுத்துணிவோடு இதை எனக்கே எழுதியிருக்கிறாள்? என்னோடு பேசவேண்டுமாம்? இனி என்னோடு அவள் பேசுவதற்கு என்ன இருக்கிறது? எந்த முகத்தோடு என்னைப் பார்த்துப் பேசப் போகிறாள்! அவளுடைய சாகஸப் புயலில் அகப்பட்ட சின்னஞ்சிறு துரும்பு என்று என்னை நினைக்கிறாளா!

மலர்க் கொத்துக்கள். தென்றலைத் துணை கொண்டு சிரிக்கும் போது அதைப் பார்த்து ரசிப்பது போல,

அழகான பெண்களின் மென்மையான சாகஸங்களைக் கண்டு நான் ரசித்திருக்கிறேன். ஆனால் அந்தச் சாகஸத்தின் அடித்தடத்தில் அன்பு இல்லாதபோது வஞ்சத்திற்கும் ஏமாற்றுக்கும் அந்தச் சாகஸம் கருவியாகும்போது அதை ஒருவன எப்படி அநுபவிக்க முடியும்? அன்பையே எண்ணுமல் அறிவால் வாழ விரும்பும் நெஞ்சற்ற கயவர்களுக்கும் உண்மையே இல்லாமல் சாகஸத் திறமையால் மனிதரை மயக்க விரும்பும் மங்கையருக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை—புண்பட்ட என் இருதயம் அவளுடைய விசித்திரமான செய்கையால் இப்படியெல்லாம் எண்ணிப் புகைந்தது.

நாராயணசாமியைப் போய் இந்த நிலைமையில் நான் பார்க்காமல் இருந்தால் அது மனிதத்தன்மையல்ல; அவரை எனக்கு நன்ருகத் தெரியும். யோக்கியர், உத்தமர், நல்லவர். மனிதர்கள் செய்யக் கூடிய குறைந்தபட்ச தவறுகளையே அவர் செய்திருக்க முடியும். தவறிழைக்காத எந்த மனிதனும் உலகில் வாழ்ந்ததில்லையே!

நான் அங்கு போயிருப்பேன்; அங்கு அவளைப் பார்க்காமல் இருக்க முடியுமென்ருல்.

என் மனம் சொல்லியது: 'நீ டாக்டரல்ல சிறந்த டாக்டர்களைக்கொண்டு அவர் தம்மைக் கவனித்துக்கொள்ள முடியும். நீ போய்ப் பார்த்தால் அவருக்கு எந்த நலனும் ஏற்படப் போவதில்லை. நீ போவதாக இருந்தால்...போவதாக இருந்தால் அது அவளுக்காகப் போவதாய்த்தான் அர்த்தம்! இத்தனை நாளாக நீ உன்னையே ஏமாற்றிக் கொண்டு வந்திருக்கிருய்; அவளுக்காகத்தான் நீ அங்கு போருய! இனியும் உன்னை ஏமாற்றிக் கொள்ளாதே!"

கடிதத்தைக் கசக்கிக் குப்பைக் கூடையில் வீசினேன். கதவு தட்டும் சத்தம் கேட்டது. உதவியாசிரியர் சங்கரன் உள்ளே நுழைந்தார். பத்திரிகையைப் பற்றிப் பேசினேம். சங்கரன் அன்போடு பழகக்கூடிய மனிதர். எப்போதும் சிரித்த முகத்துடன் கனிவாகப் பேசுவார். அவருடைய பேச்சில் எனக்கு அமைதி கிடைத்தது.

அன்றைக்குச் சாயங்காலம், என்றுமில்லாதபடி எனக்கு ஏதாவது ஒரு பெண்ணை விரைவில் கலயாணம் செய்து

கொண்டால் தேவலாம் போலிருந்தது. சிலர் சொல்கிறபடி, கல்யாணம் என்பது ஒரு சூதாட்டம். பெரும்பாலும் ஒரே ஒருமுறை ஆடக்கூடிய சூதாட்டம். வெற்றியோ தோல்வியோ வேறு வழி இன்றி அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் ஏதாவது ஒரு பெண்ணை அவள் அழகற்றவளோ, படிப்பற்றவளோ, நாகரிகம் தெரியாதவளோ, எப்படியிருந்தாலும் அவள் பெண் என்பதற்காக மட்டிலும் மணந்துகொண்டால் போதும். அதிகம் படித்தவள் வேண்டாம்; என் கதைகளைப் படித்து உருகுபவள் வேண்டாம்; அருமையாய்ப் பேசத் தெரிந்தவள் வேண்டாம். அவள் இந்தச் சாகஸக்காரி லலிதாவைப் போல்தான் இருப்பாள்!

வெகுநாட்களுக்கு முன்பு போய் வந்த அந்தக் காவேரிக் கரைக்கு இன்று சைக்கிளில் போனேன். மணலில் துண்டை விரித்துப்படுத்தபோது அடுக்கடுக்காய் நிகழ்ச்சிகள் நெஞ்சில் வந்தன. லலிதா ஒரு சமயம் என்னிடம் கேட்டாள்:

"உங்கள் கதைகளை படித்தபோது தாகூரைப் போல் நீங்கள் வயதான கிழவராக இருப்பீர்கள் என்று நினைத்தேன்."

"என் காதற்கதைகளைப் படித்த பிறகு கூடவா அப்படி நினைத்தீர்கள்?"

"ஆமாம்; இந்தக் காலத்தில் அதிக வயதானவர்களுக்குத்தானே காதலின் அருமை தெரிகிறது?"-உடனே அவள் இதைத் தவறுதலாய்ச் சொல்லிவிட்டவள்போல் பல்லைக் கடித்துக் கொண்டாள். நான் தெரிந்து கொண்டேன்; வயதான நாராயணசாமி காதலின் அருமையை அதிகமாய்த்தான் உணர்ந்திருக்கிறார்.

பெண்களை நான் புரிந்து கொள்ள முடியாத புதிர் என்று முன்பு எங்கோ ஓரிடத்தில் சொல்லியிருக்கிறேன். ஆனால் லலிதா இருக்கிறாளே அவள் புதிருக்குள் புதிர்!

காவேரியிலிருந்து திரும்பி வந்த பிறகு அறைக்கதவைத் திறந்து விளக்கைப் போட்டேன்.

"உங்களை அந்த அம்மா வந்துதேடினாங்க" என்றான் ஜானகிராமன்.

"எந்த அம்மா?"

"லலிதா அம்மா."

"வேறே என்ன சொன்னார்கள்?"

"நாளைக்குக் காலையிலே வந்து பார்க்கிறதாகச் சொன்னாங்க" அன்றைக்கு இரவு எனக்குத் தூக்கம் வரவேயில்லை.

## 12

தூக்கம் வராத இரவு மனிதனுக்கு எத்தனை விதமான துன்பங்களைக் கொடுக்க முடியும் என்பதை நான் அன்றைக்கு உணர்ந்தேன். மறுநாள் பொழுது விடிந்தவுடன் அங்கே தங்காமல் எங்காவது வெளியில் சென்றுவிட்டால் தேவலாம் போலிருந்தது. லலிதாவைச் சந்திக்க நான் விரும்பவில்லை. அவளை இங்கே வீணாகப் பலமுறைகள் அலையவிட்டு என்னுடைய வெறுப்பைத் தெரிவித்துக் கொண்டால்கூட அது பாவமில்லை என்று தோன்றியது. ஆனால் நினைவுகள் தங்களுக்குள் போராடிக் களைத்துப்போன பின்பு நான் ஒரு முடிவுக்கு வந்தேன்; நாளைக்கு அவளைச் சந்திக்க வேண்டும்; பெண் என்றும் பாராமல் பழகிய தோஷத்தையும் மறந்து, அன்பையெல்லாம் அழித்துவிட்டு அவளைப் பழிக்குப் பழி வாங்கவேண்டும். வீட்டைவிட்டு வெளியே போகச் சொன்னவளை இந்த வீட்டைவிட்டு...

காலையில் குளித்துவிட்டு நான் உடை உடுத்தி முடிந்தவுடன் என் அறைக்கதவு திறந்தது. லலிதா கதவருகில் தயக்கத்துடன் நின்றாள். அவளைச் சாதாரணமாகப் பார்த்துவிட்டு, என் வேலையைக் கவனிக்கும் பாவனையில் நாற்காலியில் உட்கார்ந்து பத்திரிகைகளைப் புரட்டினேன்.

'வாருங்கள்' என்று நான் அழைக்கவில்லை; அவள் வந்தாள். 'உட்காருங்கள்' என்று உபசரிக்கவில்லை; அவள் உட்கார்ந்தாள். பெண்களின் கடைசி ஆயுதம் என்று சொல்லுகிறார்களே, அந்தக் கண்ணீரை அவள் தன் முதல் ஆயுதமாக உபயோகித்தாள். என் எதிரே, என்னையே இமையாமல் விழித்து நோக்கிய அவள் கண்கள் மாலைமாலையாய்க் கண்ணீர் முத்துக்களை உதிர்த்தன.

"அவர் உடம்பு ரொம்பவும் மோசமாக இருக்கிறது.

உங்களைப் பார்க்க விரும்புகிறார்.''

''எனக்கு வைத்தியம் தெரியாது: நான் டாக்டரல்ல.''

''உங்களுக்கு இரக்கம் இல்லையா?''

''இல்லை; அப்படி இருந்தாலும் இரக்கத்தால் ஒருவருடைய நோய் குணமாகாது.''

''உங்கள் வரலால் குணமாகிவிடும் என்று அவர் நினைக்கிறார்; நானும் நினைக்கிறேன்.''

'நானும் நினைக்கிறேன்' என்று அவள் கூறியவுடன், நான் என்னை மறந்துவிட்டேன்.

''அவர் நினைத்தால் அதில் தவறில்லை. ஆனால் நீங்கள்? நினைப்பதற்கு உங்களுக்கு நெஞ்சு இருக்கிறதா? மதிப்பதற்கு உங்களுக்கு மனம் இருக்கிறதா?—நீங்கள் எதற்காக இங்கே வந்தீர்கள்?''

''துரை...''

இரண்டு மூன்று நாட்களாய் என்னைப் பைத்தியமாக அடித்த என் உள்ளத்து வெறியெல்லாம் அவளைக் கண்டவுடன் வெளியே பொங்கியது. நிதானத்துக்கோ நினைவுக்கோ அங்கு நேரமில்லை. பழிவாங்கும் உணர்ச்சி என்னை அஃறு அணுவாய் மென்று தின்றது.

''நான் இளைஞன்; நீங்கள் யுவதி! நான் வெறி கொண்டவன்; நீங்கள் துணையற்ற பெண்! நான் அயோக்கியன்; நீங்கள் சுமங்கலி!—எதற்காக என் அறைக்குத் தனியே வந்தீகள்? என்னுடைய குணத்தை அறிந்த பிறகும் எப்படி நீங்கள் இங்கே வரலாம்!''

''என்னை மன்னிக்க மாட்டீர்களா, துரை?''—அவள் தேம்பினாள்.

''முதலில் இதைத் தெரிந்து கொள்ளுங்கள்; நான் உங்களைக் காதலிக்கவில்லை. உங்கள் அழகிலா, இளமையிலோ, பணத்திலோ, என் மனத்தைப் பறிகொடுத்துவிடவில்லை; வேறு எதையுமே நான் உங்களிடம் எதிர்பார்க்கவில்லை.''

''துரை! உங்களுக்கு அன்பில் நம்பிக்கை இல்லையா?''

''இருக்கிறது; அன்பு என்றால் வாழ்வை அழிக்கும் எமன் என்ற முறையில்.''

"என்னுடைய சொந்த உணர்வில் நான் அன்று இல்லை. அளவுக்கு மீறிய ஆத்திரத்தில் இருந்தேன்; என்னைப் பேயாக மாற்றிவிட்டான் சேது—வாழ்விலே ஏதோ ஒரு இடத்தில் நான் குறைப்பட்டவள் என்பதை அன்று நான் உணர்ந் தேன். அந்தக் குறையினால் எழுந்த பலவீனத்தோடு சேது ராமன் விளையாட விரும்பினான். என் நெஞ்சில் அன்றைக்கு நெருப்புப் பற்றிக் கொண்டது. அந்த நெருப்புக்கு உங்க ளுடைய அன்புருவம் கண்ணில் படவில்லை. நீங்கள் என்னை நம்பமாட்டீர்களா?"

"நம்பியதுபோதும். தயவுசெய்து இங்கிருந்து போய் விடுங்கள். ஆத்திரப்படும் உரிமை உங்களுக்கு மட்டிலும் சொந்தமல்ல மனித உணர்ச்சிகளுக்கு நானும் அடிமை தான்."

"துரை...நான்...என்னை நீங்கள் புரிந்து கொள்ள வில்லை."

"உங்களை எனக்குத் தெரியும்."

"தெரியுமா?" என்றாள் கண்களில் நீர்வழிய.

"அதனால்தான் சொல்கிறேன். ஒருவரை ஒருவர் இனிச் சந்திக்காமல் இருப்பது நம் இருவருக்குமே நல்லது. நான் கல்யாணமாகாதவன். நீங்கள் என் நண்பரின் மனைவி. அன்பு என்ற சொல்லுக்கு நம்மிடையே நேர்மையான பொருள் இருக்காது. சிநேகிதி என்ற முறையில் இந்தச் சூழ்நிலைக்குப் பின் நான் உங்களோடு பழக முடியாது!"

"அவர் உங்களைப் பார்க்க வேண்டுமென்று துடிக்கிறார். நீங்கள் வீட்டை விட்டு வெளியே வந்தவுடன், உங்களைத் தேடி அவசரமாய் நடந்தவர், படியில் கால் தவறிக் கீழே விழுந்து விட்டார். அப்போது விழுந்தவர் இன்னும் எழுந் திருக்க வில்லை."

என்னைத் தேடி வந்தவர் கீழே விழுந்துவிட்டார் என்று கேள்வியுற்றவுடன், என் ஆத்திரமனைத்தும் அணைந்து விட்டது. ஓடோடியும் சென்று அவரைப் பார்க்க விரும்பி னேன். அவரிடம் என்னுடைய தவறுதலுக்கு—முனபே அவரைப் போய்க் காணாமல் இருந்ததற்கு—மன்னிப்புக் கோரத் துடித்தேன். என்னாலா அவர் இன்று படுக்கையில்

கிடக்கிறார்? நான்தானா அவருடைய இந்த நிலைக்குக் காரணம்?

''அவர் மாத்திரமல்ல, உங்களைக் காணாமல் என்னாலும் இருக்க முடியவில்லை; இந்த இரண்டு மூன்று நாட்களாக... துரை!''

அவருக்காகக் கனிந்த என் இருதயம் இப்போது அவளுக் காகவும் உருகியது.

அவள் மேசையில் தன் தலையைக் கவிழ்த்துக் கொண் டாள். அவளுடைய தேகம் குலுங்கியது. இடைவிடாமல் குலுங்கியது. இந்தத் துன்பக் காட்சியை என்னால் காணப் பொறுக்கவில்லை. பெண்ணாய்ப் பிறப்பதே பாவம் என்கிறார் கள்; உண்மைதான்; அதுவும் இந்தத் தமிழ்நாட்டில் பெண்ணாய்ப் பிறப்பது மகாபாவம்—மென்மையான பெண் மனத்தை ஓரிரு நிமிடங்களில் என்ன பாடுபடுத்திவிட்டேன்.

நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு அவள் தலையை உயர்த்தினாள். கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''வரு கிறீர்களா போகலாம்'' என்றாள் நான் பதிலளிக்காமல் அவளைப் பின்பற்றினேன். வாசலில் கார் நிற்கவில்லை.

''டிரைவர் வருவதற்கு நாழியாகுமென்று நடந்து வந்தேன்'' என்றாள்.

நடந்து செல்வதைத் தவிர இப்போது வேறு வழியில்லை. நானும் அவளும் ஒன்றாய்த் தெருவில் நடந்தோம். எங்களைப் பார்க்கும் மனிதர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள் என்பதை நினைக்க எனக்கு நேரமில்லை.

தோட்டத்துப் பக்கத்திலிருந்த விசாலமான அறையில் நாராயணசாமி படுத்திருந்தார். உடல் பாதியாக இளைத்திருந்தது. என்னைக் கண்டவுடன் முகமலர்ச்சியோடு மௌனமாக வரவேற்றார். அவருடைய முழங்கால் அருகில் பலமான கட்டு போட்டிருந்தது. பக்கத்து நாற்காலியில் உட்காரும்படி கையைக் காண்பித்தார்.

''இன்றைக்குத்தான் உங்களுடைய உடல்நிலை பற்றித் தெரியும். இதுவரை வராமல் இருந்ததற்கு மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றேன்.

''பரவாயில்லை'' என்று புன்னகை செய்தார்.

"இரண்டு நாளைக்கு முன்புவரை காலைப்பற்றி அதிகக் கவலையாக இருந்தது. அந்தக் கவலை இப்போதில்லை. டாக்டர் நிச்சயம் சுகமாகிவிடும் என்கிறார்."

நான் பேசாதிருந்தேன்.

"உங்களைப் பார்த்தவுடன் எனக்கு எல்லாக்கவலைகளும் தீர்ந்து விட்டன. சீக்கிரம் முன்போல் எழுந்து நடமாடுவேன்" என்றார்.

"என்னால்தான் உங்களுக்கு இந்தக் கஷ்டமெல்லாம் வந்தது. கஷ்டத்தைக் கொடுத்த நான் அதைப்பற்றித் தெரிந்து கொள்ளாமலே இருந்து விட்டேன்." என் தொண்டை துயரத்தால் அடைத்துக் கொண்டது.

"எனக்கு இது கஷ்டமாகவே தோன்றவில்லை துரை. கஷ்டத்தால் கிடைக்கும் சுகம் இருக்கிறதே, இதைவிட இன்பமானது உலகத்தில் வேறெதுவும் கிடையாது. லலிதாவின் உதவிகளை இந்த மூன்று நாட்களாய் நான் கண்டு பிரமித்து விட்டேன். நான் கீழே விழுந்ததிலிருந்து அவள் உணவையும் உறக்கத்தையும் மறந்தே விட்டாள்."

லலிதாவின் தோற்றம் அவருடைய வார்த்தைகளை அப்படியே நம்பவைத்தன. இன்னும் இரண்டு நாள் அவள் இந்த மாதிரி நடந்துகொண்டால், அவளுக்காக இந்த வீட்டில் இன்னொரு நோய்ப் படுக்கை தயாராக வேண்டியதுதான்.

நாராயணசாமி மீண்டும் பேசினார்:

"துரை, இதோ உங்கள் கண்ணில் எனக்காக நீர் துளிர்க்கிறதே, இது கஷ்டத்தால் எனக்குக் கிடைக்கும் பேரின்பம். இல்லையா?"

பொங்கும் உணர்ச்சியோடு அவருடைய வெள்ளை மனம் என் கண்ணெதிரே தெரிந்தது. என்னை அவரிடம் காட்டிக் கொடுத்த என் கண்களை வேறுபுறம் திருப்பித் துடைத்துக் கொண்டேன்.

"எனக்கு இந்த மாத வேலையெல்லாம் நேற்றுடன் முடிந்துவிட்டது. இனி எப்போதும் உங்களிடமே இருக்கிறேன். உங்களுக்காக லலிதா செய்யும் வேலையில் எனக்கும் சிறிது பங்கு கிடைத்தால் அதுவே போதும்" என்றேன்.

"நிறைய வேலை தருகிறேன்; எப்போதும் பக்கத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டே இருங்கள்! அதுதான் நான் விரும்பும் முக்கியமான உதவி'' என்றார்.

அதன் பிறகு ஒரு வாரம் பகல் பொழுதில் பெரும் பகுதியை நண்பர் வீட்டில் கழித்தேன். அலுவலக வேலைகளை முற்பகலில் முடித்துக் கொண்டு மத்தியானச் சாப்பாடானதும் இங்கு வந்து விடுவேன். திரும்பவும் என் அறைக்குப் போவதற்குள் நன்றாக இருட்டிவிடும். அதுவரை அவருடைய படுக்கைக்குப் பக்கத்திலும், புத்தகசாலையிலுமாகப் பொழுது கழிந்தது.

இந்த ஒரு வாரத்தில் லலிதா தன் கணவனிடம் நடந்து கொண்ட விதம் என்னை வியப்படையச் செய்தது. மற்ற யாரையும் அவள் அவருக்கு பணிவிடை செய்ய விடவில்லை. நான் செய்ய விரும்பிய சிறிய உதவிகளுக்குக் கூட அவள் குறுக்கே நின்றாள். அவரது குறிப்பறிந்து, அவர் வாய் திறந்து சொல்லு முன்னரே அவருக்கு வேண்டியதைச் செய்தாள். அவரைச் சிரமமில்லாமலும் மகிழ்வோடும் இருக்க வைப்பதற்கு எத்தனைத் தேவைகள் உண்டோ அத்தனையும் செய்தாள். ஆஸ்பத்திரியில் கிடந்து தவிக்கும் ஒவ்வொரு நோயாளியின் அருகிலும் இப்படி ஒவ்வொரு பெண் இருந்தால்...?

நாராயணசாமியைக் கவனித்துக்கொண்ட லலிதா இப்போது தன்னையும் கவனித்துக்கொள்ளத் தவறவில்லை. தினந்தோறும் அவள் சீவிப் பின்னலிட்டுக் கொண்டாள். தோட்டத்து மலர்களில் பாதிக்கு மேல் அவள் தலையில் மணந்தன. நாளைக்கு ஒரு ரகப் புடவையும் வேளைக்கு ஒரு நிற ரவிக்கையுமாக அவள் உடை இருந்தது. கனிவைச் சொரியும் கண்களோடும், புன்னகை உதிர்க்கும் இதழ்களோடும் அவள் அந்தப் பெரிய வீட்டில் குறுக்கும் நெடுக்கும் அலைந்தாள். அவளுடைய கணவரின் அறையை வளைய வளைய வந்தாள்.

அத்துடன் என்னோடும் அவள் அதிகமாய் நெருங்கிப் பழகினாள். அவளுடைய அத்தை, மாமா, வேலைக்காரர்கள், முதலியவர்களின் சந்தேகப் பார்வையை அவள் லட்சியம்

செய்யவில்லை. அவளுடைய இந்தப் போக்கு எனக்கு விசித்திரமாக இருந்தது; சங்கடமாகவும் தோன்றியது.

"சாப்பிட்டுத்தான் போகவேண்டும், இன்றைக்குச் சாப்பிடாமல் போகக்கூடாது" என்பாள் ஒரு நாள்.

"அடிக்கடி காபி குடிப்பீர்களாமே; எங்கள் வீட்டுக் காபி பிடிக்கவில்லையா?" என்பாள்.

காந்தம் என்னைப் பற்றி இவளிடம் நிறையக் கூறியிருக்கிறாள். இவளும் சொந்தமாக என்னுடைய விருப்பு, வெறுப்பு, மனப்போக்கு இதைத் தெரிந்து வைத்திருக்கிறாள். ஆகையால் கவனிப்பு முறையில் அவளுடைய கணவருக்கு அடுத்த நோயாளியாக என்னைத் தீர்மானித்துவிட்டாள். லலிதா!

சென்னையிலிருந்து வெளியான என்னுடைய சமீபத்து நாவல் ஒன்று நாராயணசாமியின் புத்தக அலமாரியிலிருந்தது. நாவல் வெளிவந்து ஒரு வாரம்கூட ஆகவில்லை. இரண்டு நாட்களுக்கு முன்புதான எனக்கே புத்தகங்கள் வந்தன. நாராயணசாமிக்கு உடல் முழுவதும் சுகமான பிறகு ஒரு புத்தகம் கொண்டுவந்து கொடுக்க விரும்பினேன். அதற்குள் அது இங்கு எப்படியோ வந்துவிட்டது, அவர் நோய்ப் படுக்கையிலிருந்து எழுவதற்கு முன்னுல்!

புத்தகத்தைப் பிரித்தும் பார்த்தேன் அதை லலிதா படித்து இருப்பதற்கான அடையாளங்கள் இருந்தன. அவள் படிக்கும் புத்தகங்களிலெல்லாம் அவளுக்குப் பிடித்தமான வரிகளின் கீழ் பென்சில் கோடுகளைக் காணலாம். இந்தப் புத்தகத்திலும் சில பக்கங்கள் பென்சில் மயமாக இருந்தன.

பல மாதங்களுக்கு முன்பு நான் எழுதிய எழுத்துக்களை இப்போது திரும்பவும் படித்தேன். அந்த வாக்கியங்களின் கீழ் இருந்த கோடுகள் மற்றகோடுகளைக் காட்டிலும் அழுத்தமாக இருந்தன. எனக்கே இப்போது அந்த எழுத்துக்களின் பொருள் நூதனமாக விளங்கியது. முன்பு நான் அதை எந்தக் கருத்தில் எழுதினேனே, ஆனுல் இன்றைக்கு....?

'பஞ்சுக் குவியலைப் போல் வெள்ளையாக இருந்த என்னுடைய உள்ளத்தில், என்னையறியாமலே ஒருநாள் சின்னஞ்சிறு நெருப்புத்துண்டு விழுந்துவிட்டது. வெகுநாள்

வரையில் நான் அதைக் கவனிக்கவே இல்லை. கவனிக்கவில்லை என்ற காரணத்தால் அந்தக்கனல் அப்படியே அணைந்து போயிருக்கக்கூடாதா?...ஐயோ! இப்போது அந்தப் பஞ்சுக் குவியல் பற்றிக்கொண்டு கொழுந்துவிட்டு எரிகிறதே! நான் என்ன செய்வேன்?''

நான் எழுதிய எழுத்துக்களே என்னைக் கொன்றுவிடுவதைப்போல் பார்த்தன. கதையின் எந்தக் கட்டத்தில் எந்தச் சந்தர்ப்பத்திற்காக இதை எழுதினேனோ தெரியாது. ஆனால் அவைகளை லலிதா உபயோகப்படுத்தியிருக்கும் விதம் என்னைத் திடுக்கிட வைத்தது. என் எண்ணங்களைக் கொண்டே என்னைப் பழி வாங்கத் திட்டமிட்டு விட்டாளா? —அவள் மண்ணிலே பிறக்கக் கூடியவளல்ல; மனத்திலே மட்டும் பிறக்க வேண்டியவள்.

கதவுப்பக்கம் லலிதாவின் நிழல் தெரிந்தது. அவள் வந்து கொண்டிருந்தாள். புத்தகத்தின் அடுத்த பக்கத்தை வேண்டுமென்றே திருப்பினேன்..

''உங்கள் கதையை நீங்களே படிக்கிறீர்களா?''

''இல்லை. நான் எழுதிக் கொண்டிருக்கும்போதே அது எப்படி அச்சுப் புத்தகமாகமாறி உங்களிடம் வருகிறது என்று ஆச்சரியப்பட்டேன்!''

''இவ்வளவுதானா?—நீங்கள் எழுதத் தொடங்குமுன்பே எந்தக் கதையை எழுதப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியுமே!''

நினைவுக்குள்ளே நினைவாக உலவக்கூடிய இந்த மாயப் பெண்ணுக்கு நான் என்ன பதிலைச் சொல்லுவது?

''உங்களுடைய நாவலின் ஏழாவது பக்கத்தைப் புரட்டிப் பாருங்கள்; அதில் நீங்கள் என்ன எழுதியிருக்கிறீர்கள் தெரியுமா?''

நான் படித்துப் பார்த்தேன். அதில் என்னுடைய கதாநாயகியின் உடையழகு வர்ணனை இருந்தது; 'அவள் மின்னக்கூடிய மேகவர்ணப் பட்டாடை உடுத்தியிருந்தாள்; காலை நேரத்தில் மலரும் புத்தம் புது ரோஜாவின் நிறத்தில் அந்தச் சேலையின் அகலமான கரை ஓடியிருந்தது; கச்சிதமான கருப்புக் கலர் ரவிக்கை...'

லலிதா சிரித்தாள். அவள் சிரித்த பிறகுதான் எனக்கு அதன் பொருளே தெரிந்தது. அவளுடைய உடைகளைக் கவனித்தேன்—கதைகளில் நான் எழுதியுள்ள அதிக மேக வர்ணப் பட்டாடை, அதே ரோஜா நிறக் கரை; அதே கருப்புக்கலர் ரவிக்கை...என்ன இது!

"நேற்றுத்தான் இவைகளை வாங்கினேன்."

"உங்களுக்குச் சாதாரண உடையே நன்றாக இருக்கிறது; நான்கூட அதைத்தான் விரும்புகிறேன்."

"பொய்!"

"பொய்யையும் மெய்யையும் நீங்கள் ஆராயக்கூடிய நிலையில் இல்லையே!"

"ஏன் இல்லை?" என்று கோபமாய்க் கேட்டுவிட்டு அவள் வேகமாக வெளியே சென்றாள்.

அதே சமயம் கொல்லைப்புறக்கதவருகே நாராயணசாமியின் உருவம் தெரிந்தது. நேற்றிலிருந்து அவர் மெதுவாய் எழுந்து நடமாடக்கூடிய சக்தியைப் பெற்றிருந்தார்—ஒரு வேளை எங்கள் பேச்சை அவர் கேட்டிருந்தால்....

## 13

அந்த மாதம் முடிந்தது. சாமிநாதன் காந்தத்தைக் கல்யாணம் செய்துகொண்டு தன்னுடைய சொந்த கிராமத்துக்குப் போயிருந்தான். சேதுராமன் அன்றைய நிகழ்ச்சிக்குப் பிறகு வீட்டுப் பக்கமே திரும்பவில்லை. அவன் எங்கிருந்தானென்று யாருக்கும் தெரியாது; ஆனால் அவனுடைய கடிதங்கள் மட்டும் அடிக்கடி எனக்கு வந்து கொண்டிருந்தன. அந்தக் கடிதங்களின் மூலம் அவன் எனக்கு அறிவுரைகள் வழங்கினான்; என்னைப் பயமுறுத்தினான்! பரிகசித்து நகைத்தான்.

அத்தோடு நிற்கவில்லை. உள்ளூரிலிருந்து வெளியாகும் 'மஞ்சள்' பத்திரிகை ஒன்றில் என் பெயர் வந்திருந்தது. அந்தப் பத்திரிகாசிரியர் என்னை என் போக்குக்காக எச்சரித்திருந்தார் உடனே நான் திருந்தாவிடில் கௌரவம் மிகுந்த ஒரு குடும்பத்தின் கதையை அடுத்த மாதமே வெளியிடப் போவதாக அதில் குறிப்பும் காணப்பட்டது—சேதுராமனைத்

தவிர வேறு யார் எனக்கு இந்த 'உதவி'யைச் செய்திருக்க முடியும்?

திருச்சி நகரத்துத் தெருக்களில் முன்போல நான் தலை நிமிர்ந்து கைவீசிச் செல்ல முடியவில்லை. என்னை உற்றுப் பார்ப்பவர்களெல்லாம் எனக்குப் பின்னே கேலி செய்து சிரிப்பதாகத் தோன்றியது. எழுத்தாளன் என்ற முறையில் என்னைப் பலர் தெரிந்து வைத்திருந்தார்கள். பத்திரிகை ஆசிரியராக இருந்ததால் பல பொது நிகழ்ச்சிகளில் பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறேன். அப்போது மனிதர்கள் என்னைக் கூர்ந்து நோக்கினால் அதனால் நான் பெருமை அடைந்ததுண்டு. என் எழுத்தும் அந்த எழுத்துக் கொடுத்த பதவியும் எனக்குப் பல சந்தர்ப்பங்களில் பூரிப்பைத் தந்திருக்கின்றன—ஆனால் இப்போது?

இப்போது என்னுடைய கௌரவப் போர்வை கழன்று விட்டது. ஏச்சும் பேச்சும், கேலியும் பரிகாசமும் என்னைச் சூழ்ந்து கொண்டன. நான் தெருவழியே எங்கும் போக விரும்பவில்லை. எந்த நேரமும் என்னுடைய அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தால்தான் அமைதி கிடைக்கும் போல் இருந்தது.

என்னைப்பற்றி இருக்கட்டும்; என்னுடைய நண்பர் நாராயணசாமி! எனக்குப் பரிவு காட்டிய குற்றத்திற்காக, என்னிடம் அன்பு செலுத்திய பாவத்திற்காக, அவருடைய பெயர் கீழ்த்தரமான மக்களின் மத்தியில் அகப்பட்டுத் தவித்தது. அவருடைய வீட்டைச் சுற்றிலும் பழி பாவத்திற்கு அஞ்சாதவர்களின் அவமானப் பேச்சு நெருப்பாய்ப் பற்றி எரிவதை நான் கண்ணாரக்கண்டேன். அந்த நெருப்பை அங்கே அப்படிப் பற்ற வைத்தது சேதுராமனா? நானா அல்லது...அல்லது என் கை அவருடைய பெயரை இங்கே எழுத நடுங்குகிறது.

என் பங்கு அதில் உண்டு. அதை நான் மறைக்க நினைப்பது நேர்மையில்லை. நான் ஏன் அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த நாளில் முதன் முதலாக அங்கு போனேன்? அவர் ஏன் என்னை உற்சாகத்தோடு உபசரித்தார்? அவளுக்கு ஏன் என்னை அறிமுகப்படுத்தி, அவளோடு நெருங்கிப் பழகச் சந்

தர்ப்பம் அளித்தார்?—அவள் சிநேகிதிதானு? ஊராரின் பழிச் சொல்லில் உண்மை கிடையாதா?

இந்தத் தொல்லேகளுக்கெல்லாம் ஒரு முடிவு காலம் நெருங்கிக் கொண்டிருந்தது.

லலிதாவும் நானும் அவளுடைய அறையில் தனியாக இருந்தோம். எங்களுக்கு மத்தியில் நான் முன்பு குறிப்பிட்ட அந்த உள்ளூர்ப் பத்திரிகை கிடந்தது. அவளுடைய கண்கள் கலங்கி இருந்தன.

"லலிதா, நான் பம்பாய்க்குப் போகப் போகிறேன்" என்றேன்.

"என்ன காரியமாய்ப் போகிறீர்கள்?"

"முக்கியமான காரியம் ஒன்றும் இல்லே. என்னுடைய எழுத்தாள நண்பர் ஒருவர் அங்கு இருக்கிருர். வெகு நாட்களாக என்னே அங்கு வரும்படி அழைத்துக் கொண்டிருக்கிருர். பம்பாய்க்குப் போய் அவரையும் கூட்டிக்கொண்டு வடநாட்டில் சில மாதங்கள் சுற்ற விரும்புகிறேன்."

"எவ்வளவு நாளில் திரும்புவீர்கள்?"

"ஐந்தாறு மாதங்கள் ஆகலாம்."

என்னே அவள் புரிந்துகொண்டாள். எதற்காகப் புறப்படுகிறேன் என்பதையும் தெரிந்து கொண்டாள்.

"அந்தச் சிரமம் உங்களுக்கு நான் வைக்கப்போவதில்லே. சீக்கிரம் நாங்களே பர்மாவுக்குப் புறப்படுகிறேம். அங்கேயே எப்போதும் தங்கிவிடலாமென்று தீர்மானம்."

"வேண்டாம் லலிதா! எனக்காக நீங்கள் எதையும் செய்ய வேண்டாம்."

"உங்களுக்கு நான் கொடுத்ததுன்பமெல்லாம் போதும் உங்கள் பெயருக்கு நான் பெருந்தீங்கு செய்துவிட்டேன். நீங்கள் இந்த நாட்டுக்குப் பிரயோசனப்படக்கூடிய மனிதர்."

"இல்லே லலிதா! தவறு என்னுடையதுதான். நான்தான் குற்றமுள்ளவன்."

"எது தவறு, எது தவறில்லே என்பதை நீங்களோ நானே தீர்மானம் செய்ய முடியாது. ஒன்று மட்டிலும் உங்களேக் கேட்டுக் கொள்கிறேன்; தயவு செய்து நீங்கள் இப்போது

பம்பாய் போகவேண்டாம். நாங்கள் பர்மா புறப்பட முடிவு செய்துவிட்டோம். இங்கிருந்து நாங்கள் போகும்வரையிலாவது நீங்கள் திருச்சியில் இருக்கத்தான் வேண்டும்.''

எங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தவர்போல் பேச்சுக்கு மத்தியில் உள்ளே வந்தார் நாராயணசாமி. வந்து கொண்டே, ''ஆமாம், நாங்கள் பர்மா போகவேண்டுமென்று லலிதா தீர்மானம் செய்து விட்டாள். அவளுடைய தீர்மானத்தை ஒரே ஒரு திருத்தத்துடன் நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்!'' என்று சொல்லிச் சிரித்தார்.

உள்ளம் நொந்து தவிக்க வேண்டியவர் இப்படி வேடிக்கையாய்ச் சிரித்தது எனக்கு விளங்கவில்லை. கவலையின் எல்லைக் கோட்டுக்குள்ளேயே அதை மறப்பதற்கு இந்தச் சிரிப்பா? அல்லது மறைப்பதற்காகவா?

''பர்மா அரசாங்கத்தில் என்னுடைய தம்பி இன்ஜினியராக இருக்கிறான். அவனுக்கு நான் இங்கே லலிதாவைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பது தெரியாது. தெரிய வேண்டாமென்று நான் சும்மாயிருந்துவிட்டேன். அங்கேயே வந்து விடும்படி தொந்தரவு செய்கிறான். நாங்கள் இருவரும் நேரில் போய் அவனைத் திகைக்க வைக்கப்போகிறோம்'' என்றார்.

''உங்களுடைய திருத்தத்தைப் பற்றிச் சொல்லவில்லையே'' என்றேன் நான்.

''பர்மா போவதற்கு முன்னால் சென்னையில் ஒருமாதம் தங்கவேண்டும். இதுதான் என்னுடைய திருத்தம். திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டுத் திருவல்லிக்கேணியில் ஒரு வீடும் நிச்சயமாகி விட்டது. இந்த வாரக் கடைசியில் சென்னை கிளம்ப வேண்டும்.''

''அங்கிருந்து நேரே பர்மா போகிறோம்'' என்றாள் லலிதா.

''ஆமாம்; சென்னைக் கடற்காற்றை பர்மா சென்ற பிறகு எப்படி அநுபவிக்கமுடியும்? ஆகையால்தான் கடற்கரைக்குப் பக்கத்திலேயே வீடு பார்த்திருக்கிறேன.''

எனக்கு அதற்கு மேல் இருக்கப் பிடிக்கவில்லை. திடீரென்று பேச்சுக்கு மத்தியில் எழுந்து வரவும் மனமில்லை.

அவர்களுடைய முடிவு என்னுடைய நரம்புகளில் மின்னலாய்ப் பாய்ந்துவிட்டது. இந்த அதிர்ச்சியை அவர் தெரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று அஞ்சினேன். ஆனால் என் முகம் என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

"ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?" என்றார்."

"ஒன்றுமில்லை; தலையை வலிக்கிறது"

"உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு அடிக்கடி தலைவலி வருகிறது."

"சற்று மன்னிக்க வேண்டும். நான் போய் வருகிறேன்" என்று சொல்லிப் பதிலுக்குக் காத்திராமல் வேகமாய் எழுந்தேன். மாடிப்படிகளில் நான் இறங்கிக் கொண்டிருந்த போது, "துரை!" என்று அவர் அழைக்கும் குரல் கேட்டது, அதை நான் காதில் போட்டுக் கொள்ளாமல் அந்த வீட்டை விட்டு வெளியே நடந்தேன்—இனிமேல் இங்கு திரும்பவே கூடாது! இந்த ஒரு வாரம் வரையில் திரும்பிப் பாராதிருந்தால்பிறகு இந்த வாழ்வு முழுவதுமே இங்கு வரவேண்டாம். முதலில் சென்னை, அப்புறம் பர்மா, அதற்கப்புறம் மீள முடியாத உலகம்...

சந்திப்பு என்ற ஓர் நிகழ்ச்சி இல்லாவிட்டால் பிரிவு என்கிற வேதனையை ஏன் மனிதன் அநுபவிக்கவேண்டும். லலிதா போகப் போகிறாளா?

லலிதா போகப் போகிறாள்! இரவும் பகலும் இந்த நினைவு என்னை வாட்டி வதைத்தது. நிமிடங்கள் நகரவில்லை. ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாயிற்று. சீக்கிரம் அவர்கள் போய்விட மாட்டார்களா என ஏங்கினேன். சித்திரவதைப் பட்டுக் கொண்டிருக்கும் குற்றவாளி தன் உடலில் உயிர்த் துடிப்பு இருக்கும் வரையில் தானே அந்தவலியை உணருவான்? உயிர் போய் விட்டால் உடலைப் பற்றிய கவலை அவனுக்கு எதற்கு?

லலிதா புறப்பட்டுக் கொண்டிருந்தாள்.

அவர்கள் சென்னைக்குப் போகும் அந்தக் கடைசி நாள் வந்துவிட்டது. மத்தியானம் டிரைவரிடம் கடிதம் கொடுத்தனுப்பி அவசியம் என்னை வீட்டிற்கு வரும்படி அழைத்திருந்தார் நாராணயசாமி. புறப்பட்டேன். நண்பரின்

வீடு பரபரப்பாகக் காணப்பட்டது. வேலைக்காரர்கள் அங்குமிங்கும் ஓடிச் சாமான்களை லாரிகளில் ஏற்றிக்கொண்டிருந்தார்கள், லலிதாவின் அத்தை குறுக்கும் நெடுக்கும் நடந்து வழக்கம்போல் வேலை செய்பவர்களை விரட்டிக் கொண்டிருந்தார். அவருடைய கணவரின் முகத்தில் மட்டும் களை இல்லை.

நாராயணசாமி உள்ளே ஏதோ வேலையாக இருந்தார். அவருக்காக வெளி அறையில் நான் காத்திருந்தேன். என்னுடைய மனம், காலிசெய்யப்படும் அந்த வீட்டைக் கண்டவுடன் தன்னுடைய உணர்ச்சிகள் யாவற்றையும் இழந்துவிட்டது. லலிதாவின் அத்தையும் மாமாவும் அங்குதான் இருக்கப் போகிறார்கள்; யார் இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? லலிதா இருக்க மாட்டாள்!

அறைக்கதவு திறந்தது. லலிதா உள்ளே நுழைந்தாள். எதிரில் இருந்த மேசையைப் பிடித்துக்கொண்டே என்னை மௌனமாகப் பார்த்தாள்.

"இந்த நாலு நாளைக்குள் உங்களை அடையாளமே தெரியவில்லை. நீங்கள் ரொம்பவும் இளைத்துப் போய்விட்டீர்கள். உங்கள் உடம்புக்கு என்ன?" என்றாள்.

"இதே கேள்வியை நானும் உங்களிடம் கேட்கலாமா?" அவள் பதில் சொல்லவில்லை. கண்கள் கீழே தாழ்ந்தன. புன்னகை செய்ய முயன்றாள்.

ஒரு விநாடி சென்றது.

"நீங்கள் ஏன் இப்படி உங்களையே வாட்டிக் கொள்கிறீர்கள்? இது எனக்குப் புரியவில்லை" என்றாள்.

"புரியாமல் இருப்பதே நல்லது. இன்னும் ஒரு மணி நேரம்வரை புரியாமல் இருந்துவிட்டால், அப்புறம் என்றைக்குமே அதைப் புரிந்துகொள்ளவேண்டிய அவசியம் இல்லை—நீங்கள் புறப்படும் நேரம் நெருங்கிவிட்டதல்லவா?"

"புறப்படும் நேரம்...!" அவள் பெருமூச்சுவிட்டாள். "பிரியும் வேளை வந்துவிட்டது; உங்களிடம் சொல்லிக் கொண்டு போவதற்குத்தான் வந்தேன். போய்வரட்டுமா?"

"போய் வாருங்கள்" என்று சொல்வதற்கு நாவையெடுத்தேன். வார்த்தைகள் தொண்டைக்குள் சிக்கிக்

கொண்டன. குரலின் கலக்கம் அவளுக்குத் தெரியக் கூடாது என்பதற்காக வாயை மூடிக்கொண்டேன்.

"போய் வரட்டுமா?" என்றாள் மீண்டும்.

"அன்றைக்கு என் அறையில் நான் உங்களிடம் கோபமாய்ப் பேசியதையெல்லாம் மறந்து விடுங்கள். உங்கள் மனதை ரொம்பவும் புண்படுத்தி விட்டேன். அன்பு கொண்ட காரணத்தால் ஆத்திரமடைந்தேன். என்னை மன்னித்து விடுங்கள்."

"நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும். மன்னிக்க முடியாத கொடுமையைச் செய்தவள் நான்" இப்படிச் சொல்லிவிட்டு ஒரு கணம் கழித்து, "எனக்காக நீங்கள் ஒரு காரியம் செய்வீர்களா?" என்றாள்.

"என்ன?"

"சென்னையில் ஒரு மாதம் தங்கிவிட்டுத்தான் பர்மா புறப்படுகிறோம். பர்மா புறப்படும் முன்பு ஒரு முறை நீங்கள் அவசியம் சென்னைக்கு வரவேண்டும். அவரிடம் சொல்லி எழுதச் சொல்கிறேன்."

"இல்லை; வேண்டாம்."

"ஒரு முறை வாருங்கள்; ஒரே ஒரு நாள்..."

"வேண்டாம், இனி நாம் சந்திக்கவே வேண்டாம்!"

"துரை!"

"......"

"உங்களை மீண்டும் ஒருமுறை சந்திக்காமல் நான் பர்மா போக முடியாது."

"சந்திக்காவிட்டால்?"

"கடலைத் தாண்டித்தானே கப்பலில் செல்லவேண்டும்? கடல் தண்ணீர் உங்களைவிடக் கருணை உள்ளது. யாரையும் சந்திக்க மாட்டேன் என்று அது சொல்லாது."

அந்த அறையின் மேல்தளம் அப்படியே பெயர்ந்து என் தலையில் விழுகிற மாதிரி இருந்தது.

கண்ணீருடன் அவள் கை கூப்பினாள்.

"போய் வாருங்கள்" என்றேன்.

அவள் வெளியே புறப்படுவதற்கும் நண்பர் நாராயணசாமி உள்ளே நுழைவதற்கும் நேரம் சரியாக இருந்தது.

எதிரே உட்கார்ந்து என்னுடைய எதிர்கால நலன்களைப் பற்றிய சில வார்த்தைகள் கூறினார், அடிக்கடி கடிதம் எழுதும்படி தெரிவித்தார். பிறகு காபி பலகாரங்கள் வந்தன சாப்பிட்டோம்.

என்னை அன்போடு தழுவி விடை பெற்றுக்கொண்டார். கார் தயாராக நின்றது. காருக்குள் லலிதா முன்னதாகவே ஏறியிருந்தாள். நாராயணசாமியும் அவளருகில் அமர்ந்தவுடன் கார் நகர்ந்தது.

கார் போய்விட்டது.

அந்தக் கார் புழுதி மண்ணைக் கிளறிவிட்டு அதை என் கண்களிலும் எண்ணத்திலும் வாரிப் போட்டுவிட்டு வேகமாய் மறைந்தது. சிலையாக நான் அங்கு நின்றேன். எத்தனை நேரம் நின்றேனோ தெரியாது. என்னைப் பார்த்து லலிதாவின் அத்தை கேலியாகச் சிரிக்கும் வரையிலும், அந்த வீட்டு வேலைக்காரர்கள் என்னை ஏளனமாக நோக்கி நகைக்கும் வரையிலும் நின்றிருப்பேன்.

அவர்கள் போய்விட்டார்கள்—லலிதா போய்விட்டாள்!

லலிதா போய்விட்டாள்! இனிமேல் நான் என்னுடைய இருதயத்தை உங்களுக்குத் திறந்து காட்டலாம். அவள் இப்போது இங்கு இல்லை. ஆகையால் அவளுக்கு நான் மறைத்து வைத்த ரகசியத்தை உங்களிடம் சொல்கிறேன். அவளுக்கு மாத்திரமென்ன? நானே தெரிந்துகொள்ளாமலிருந்த உண்மை அது! அதை இதுவரை எல்லோரிடமும் மறைத்தேன். இனிமேல் அந்த ரகசியத்தை என்னால் பாது காக்க முடியாது. உள்ளம் அதனுள்ளே உள்ள உணர்வின் வெப்பம் தாங்க முடியாமல் வெடித்து விடும் போலிருக்கிறது. ஆகையால் தானாக அது வெடித்துச் சிதறுமுன், நானாக உங்களிடம் அதைப் பிளந்து காட்டுகிறேன்.

நான் அவளைக் காதலித்தேன்!

நான அவளைக் காதலிதேன்—அவளுடைய அழகுக்காக அல்ல; அவளை விட எத்தனையோ அழகிகளை நான் பெற முடியும். அவளுடைய படிப்புக்காக அல்ல; படித்த பெண்களின் தீவிரப் போக்கு எனக்குப் பிடிக்காது. அவளுடைய பணத்துக்காக அல்ல; பணத்தைப் பெண்ணின் மூலம் பெற

விரும்பும் பேடியல்ல நான்.

நான் அவளைக் காதலித்தேன்—அவளுடைய அன்புக் களஞ்சியமான நெஞ்சுக்காக, அந்த நெஞ்சில் நான் கண்ட சோகம் கனிந்த அழகுக்காக, அந்த நெஞ்சு தேக்கி வைத்திருந்த தெவிட்டாத கலைச் சுவைக்காக! அவளுடைய கண்களின் ஏக்கம் என் கற்பனையின் ஊற்றாக இருந்தது; மண்ணிலும், விண்ணிலும் காற்றிலும், கடலிலும் காணாத கனவுகளையெல்லாம் நான் அதில் கண்டேன். வாழத் தெரிந்த அவள், வாழத் துடித்த அவள், வாழ முடியாமல் தவித்த மௌனமான தவிப்பினால் என் உள்ளத்தின் அன்பைக் கவர்ந்து கொண்டாள்.

அவள் என் நண்பரின் மனைவி. மனைவி என்ற உயர்ந்த ஸ்தானத்தின் பொறுப்பும் கண்ணியமும் எனக்குத் தெரியும். என்னுடைய நண்பர் நாராயணசாமியைப் பற்றி நான் அதிகமாய்த் தெரிந்து வைத்திருந்தேன். மனிதன் என்ற முறையில் என்னிடம் எத்தனையோ குறைபாடுகள் இருக்கலாம். ஆனால் ஒன்று மட்டிலும் சொல்கிறேன்; துரோக நினைவு அற்றவன் நான். எனக்குப் பிடிக்காதவர்களுக்குக் கூட நான் துரோகம் நினைத்ததில்லை. நண்பர் நாராயணசாமியின் வாழ்வுக்கா தீங்கு இழைப்பேன்? அந்த நினைவு என்னை நிலைகுலையச் செய்கிறது.

நீங்கள் என்னைப் புரிந்துகொண்டீர்களா? உங்களுடைய அனுதாபம் எனக்கு வேண்டாம். ஆனால் ஒரு மனிதனின் செயலைத் தவறானது என்று தீர்ப்புக் கூறுமுன்பு ஒரு முறைக்குப் பலமுறை சிந்தனை செய்யுங்கள். அந்தச் சூழ்நிலையில், நீங்களோ, உங்களுக்கு வேண்டிய வேறு யாரோ இருந்தால் என்ன செய்ய முடியும் என்பதையும் யோசித்துப் பாருங்கள்.—காட்டுக்குப் போய் யோகம் செய்வதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. வெகு காலம் தவம் செய்து விநாடிப் பொழுதில் அதை இழந்த விஸ்வாமித்திரரின் கதை எனக்குத் தெரியும். நினைவை அழிக்க நான் பழகவில்லை; நினைவுதான் வாழ்வு. கற்பனைதான் என் தொழில்—இப்போது அவள் இங்கு இல்லாததால் என்னை விட்டு என்றைக்

குமே அவள் பிரிந்து விட்டதால், இனி நான் அவளைச் சந்திப்பதே இல்லை என்று முடிவு கட்டி விட்டதால் நான் இதை உங்களுக்குச் சொல்கிறேன்; நான் அவளைக் காதலித்தேன்! யாரைக் காதலிக்கக்கூடாது என்று சுற்றியுள்ள உலகம் சடங்காலும் சம்பிரதாயத்தாலும் வேலியிட்டிருக்கிறதோ அவளைக் காதலித்தேன்...

## 14

இரண்டு நாட்கள் சென்றன.

ஜூரவேகத்தில் நாவல் வளர்ந்துகொண்டிருந்தது. அந்த நாவலை நான் தொடங்கியிருக்காவிட்டால் இந்தச் சமயம் எந்த நிலையில் இருப்பேனோ தெரியாது. என் கவலை கண்ணீர் துயரம் எல்லாவற்றையும் இந்த நாவல்தான் மறக்கச் செய்கிறது. இதை எழுத உட்காரும்போது எனக்கு வேறு எந்த நினைவுகளும் வருவதில்லை. அன்றொரு நாள் மாலைப் பொழுதில் இருள் பரவும் வேளையில் கடற்கரையில் நானும் லலிதாவும் ஒன்றாய் உட்கார்ந்து ஒருவரையொருவர் பார்த்து இந்த உலகை மறந்தோமே, அந்தச் சூழ்நிலையைத்தான் எனக்கு இந்த நாவல் தருகிறது.

ஜானகிராமன் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு அறைக்கு வெளியே உட்கார்ந்திருந்தான். இந்தச் சிறிய வயதில் இவ்வளவு சுறுசுறுப்பும், குறிப்பறியும் குணமும் நேர்மையும் அவனுக்கு இருப்பது என்னுடைய அதிர்ஷ்டந்தான். எனக்கு எந்தெந்த விதத்தில் உதவி செய்யவேண்டுமென்பதை அவன் தெளிவாகத் தெரிந்துகொண்டிருந்தான். என்னைப் பற்றிய நினைவே எனக்குப் பெரும்பாலும் வருவதில்லை என்பதைக் கண்டு அந்தப் பொறுப்பை அவன் முழுவதும் ஏற்றுக் கொண்டான்.

கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஒன்பதாயிற்று. பத்துமணிக்கெல்லாம் அலுவலக நேரம். எழுதிக்கொண்டிருந்த நாவலின் அத்தியாயத்தை முடித்துவிட்டு, அன்றையப் பத்திரிகையைப் புரட்டினேன்.

''ஐயா வந்திருக்காங்க'' என்று ஜானகிராமன் அறிவித்தான்.

“வரச்சொல்” என்றேன். சொல்லிவிட்டு நானே அவரை வரவேற்பதற்காக எழுந்து சென்றேன்.

பத்திரிகையாளர் ராமலிங்கம் மௌனமாக உள்ளே நுழைந்தார். அவர் முகம் என்னவோ போல் இருந்தது. தீவிரமான யோசனையில் இருப்பவர்போல் காணப்பட்டார். வந்தவர் என்னை ஏறிட்டுப் பார்க்காமல் நேரே நாற்காலியில் உட்கார்ந்தார். தலையைக் கீழே கவிழ்த்துக் கொண்டே “உங்களிடம் சில விஷயங்கள் தனியாகப் பேசவேண்டும்” என்றார்

ஜானகிராமன் வெளியே போய்விட்டான். நான் அவருக்கு எதிரே அமர்ந்து அவருடைய கைகளில் இருந்த கடிதங்களையும் பத்திரிகைகளையும் கவனித்தேன். அவர் வந்திருப்பதின் நோக்கம் எனக்கு ஒருவாறு விளங்கி விட்டது.

“இதையெல்லாம் கொஞ்சம் படித்துப் பாருங்கள்” என்று என்னிடம் நீட்டினார். நான் வாங்கிப் பார்த்தேன். சேதுராமனின் கடிதங்கள் பல பெயர்களில், பலமாதிரியாக எழுதப்பட்டிருந்தன. அவற்றோடு தமிழ்நாட்டில் சமீப காலத்தில் வெளியாகும் ‘உண்மைச் சம்பவம்’ பத்திரிகைகள் இரண்டும், என்னைப் பற்றிச் சுருக்கமாக ‘எச்சரிக்கை’ செய் திருந்த ஒரு மஞ்சள் பத்திரிகையும் இருந்தன. நான் அவற்றை மேற்போக்காக நோக்கிவிட்டு அவரிடமே திருப்பிக் கொடுத்தேன்.

அவர் ஆரம்பித்தார்:

“ஒழுக்கங் கெட்டவர்கள் இந்த நாட்டில் உபதேசம் செய்து வாழமுடியாது. அயோக்கியர்கள் இங்கே அறிஞர் களாக முடியாது. மனிதனுடைய திறமையைத் தனியாக வும் பண்பைத் தனியாகவும் பிரித்து நோக்குவது மேல்நாட்டு வழக்கம். தமிழ்நாட்டில் மக்கள் அந்த மாதிரி இல்லை. பொது வாழ்விலும் ஈடுபடும் மனிதர்கள் அவர்களுடைய சொந்த வாழ்விலும் உயர்வாக இருந்தால்தான் அவர் களுக்கு மதிப்புக் கொடுப்பார்கள்.”

“உண்மைதான்” என்றேன் அமைதியாக.

“நான் இப்போது உங்களைப்பற்றித்தான் சொல்கிறேன்.

நீங்கள் பிரபலமான பத்திரிகையின் ஆசிரியர். உங்கள் கதைகளை ஆயிரக்கணக்கான பேர் படித்து ரசிக்கிறார்கள். உங்களை அவர்கள் மனிதராக மதிக்க வேண்டுமல்லவா?''

நான் வாயைத் திறவாமல் இருந்தேன்.

''இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்றார் ராமலிங்கம்.

''சொல்லுவதற்கு ஒன்றுமில்லை; நீங்கள் சொல்லுங்கள்'' என்றேன்.

''ஒன்றுமில்லையா? வயதில் சிறியவர் எனினும் பொறுப்பை உணரக்கூடியவர் என்று நினைத்தேன்.''

''நான் என்ன செய்யவேண்டும்?—அதைச் சொல்லுங்கள்.''

''உங்களுக்கும் அந்தக் குடும்பத்துக்கும் உள்ள தொடர்பை உங்கள் எதிர்கால நன்மைக்காகவும் என்னுடைய ஸ்தாபனத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்தாகவும் நீங்கள் அறுத்துக் கொள்ளவேண்டும்.''

நான் கொதிப்படைந்தேன். நாராயாணசாமி குடும்பம் அந்த ஊரைவிட்டுப் போனது இன்னும் அவருக்குத் தெரியவில்லை. நானும் அதை அவரிடம் தெரிவிக்கவில்லை.

''அறுத்துக் கொள்ளாவிட்டால்?'' என்றேன்.

''யோசனை செய்யுங்கள். உணர்ச்சி வசப்படுவதில் பயனில்லை. உணர்ச்சிகளின் வாழ்வு நிமிட நேரந்தான்.''

''நான் தவறிழைக்கவில்லை, நீங்கள் நம்புகிறீர்களா?''

''நான் நம்புவது கிடக்கட்டும். உலகம் நம்ப வேண்டுமே!''

''உலகத்தைப் பற்றிய கவலை எனக்கில்லை.''

''நான் கவலைப்பட வேண்டியிருக்கிறது. உலகம் என் பத்திரிகையைக் காசு கொடுத்து வாங்குகிறது; நான் பத்திரிகையின் சொந்தக்காரன்.''

''அதற்காக?''

''பத்திரிகை—அல்லது உங்கள் காதலி!''

''என் காதலி!' இவர் இதை உச்சரித்த விதம் என்னைத் திகைக்க வைத்தது; என்னால் நிதானமாகப் பேசமுடியவில்லை.

''பத்திரிகையை நீங்கள் ஒப்புக்கொள்ளலாம்.''

அவர் நாற்காலியைவிட்டு எழுந்து, வேகமாக அதை ஒரு புறம் தள்ளினர். "அவசரத்தில் சொல்லிவிட்டீர்கள். அமைதியாக யோசனை செய்து ஒரு வாரத்தில் பதில் சொல்லுங்கள்'' என்ருர்.

"அப்போதும் இதே பதில்தான்."

"துரை! உங்களை நல்ல பிள்ளை என்று நினைத்தேன்.''

"ஒழுக்கமற்ற அயோக்கியன் எப்படி நல்லவனுக முடியும்?''

ஆரம்பத்தில் அவர் சுற்றி வளைத்துக்கொண்டு கூறிய சொற்களை இப்போது அவரிடமே திருப்பிச் சொன்னபோது அவருடைய தேகம் பதறியது.

"ஆமாம், இன்றைக்கே கணக்கைத் தீர்த்துக்கொள்ளுங்கள்'' என்று வெளியே நடந்தார்.

ராமலிங்கத்தைப்போன்ற அநுபவசாலிகளுக்கு சாதுர்யமாகப் பேசத் தெரிந்தது பெரிய காரியமல்ல. இப்போதெல்லாம் அரிச்சுவடி படிக்கும் பையன்கள்கூட அறிவாளிகளின் சொற்களை அடுக்குத் தொடராக ஒப்புவிக்கிருர்கள். எனக்கு அவர் பயந்த அந்த உலகத்தின் ஞாபகம் வந்தது; உலகம் வாழத் தெரியாதவர்களுக்காக நீலிக் கண்ணீர் வடிக்கும்; வாழத் துடிப்பவர்களுக்குக் குறுக்கே நிற்கும்.

அவர் கொண்டுவந்திருந்த கடிதங்களும் பத்திரிகைகளும் என்னெதிரே மேசையில் கிடந்தன. பத்திரிகைகளா அவை? தமிழ் பேசுகிறவர்களின் பண்பு இப்படிப் பாழாய்ப் போகுமென்று யாருமே நினைத்திருக்க மாட்டார்கள். ஐந்து வருடங்களுக்கு முன்பு தமிழ்நாட்டைவிட்டு வெளியேபோன ஒருவர் இன்று திரும்பி வந்து நகரத்தின் தெரு மூலையில் உள்ள சிறு பெட்டிக்கடை முன்பு நின்ருல் போதும்; அந்தக் கடையில் தொங்குகிற வெளியீடுகளின் வெளித்தோற்றமே அவருக்குத் தமிழகத்தில் வளர்ந்து வரும் அநாகரிக எழுத்தைப் பற்றிக் கதை கதையாய்ச் சொல்லும்.

பன்னிரண்டு மணிக்கெல்லாம் என் மேசையில் சம்பளப் பணத்தை எண்ணி வைத்துக் கணக்கைக் காண்பித்தார் மானேஜர். உதவியாசிரியர் சங்கரனை அழைத்து அரைகுறையாக விட்டிருந்த வேலை விவரங்களைத் தெரிவித்தேன்.

அன்றைக்கு இரவு பம்பாய் புறப்படுவதாகவும் குறிப்பிட்டேன். பத்திரிகாலயத்தில் அன்று யாருக்கும் எந்த வேலையுமே ஓடவில்லை. அடிக்கடி என்னை வந்து பார்த்தார்கள்; தங்களுக்குள் இரண்டு மூன்று பேர்களாகக் கூடிக் கூடிப் பேசிக் கொண்டார்கள். கடைசியாகப் பத்திரிகாலயத்தின் தொடர்பு எனக்கு அன்று மாலை நடந்த தேநீர் விருந்துடன் 'இனிது' முடிந்தது.

அறையில் நானும் ஜானகிராமனும் மட்டும் இருந்தோம். ஜானகிராமன் படுக்கையைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருந்தான். அறைக்குள்ளிருந்த என்னுடைய முக்கியமான சாமான்களெல்லாம் முன்பே பெட்டிக்குள் போய்விட்டன. நான் புறப்படுவதற்குத் தயாராக இருந்தேன்.

வேலையைவிட்டுப் போவதைவிட எனக்கு அந்த வேலையின் மூலம் பழகிய மனிதர்களை விட்டுப் போவதுதான் கஷ்டமாக இருந்தது. உதவியாசிரியர் சங்கரின் அன்பையும் ஜானகிராமனின் பணிவிடைகளையும் என்னால் என்றைக்குமே மறக்கமுடியாது. நான் வேலையை விட்டு நீங்கிய செய்தியை அறிந்ததிலிருந்து ஜானகிராமனின் முகத்தில் களை இல்லை. அடிக்கடி அவன் வாட்டத்தோடு என்னைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டான். உற்சாகமில்லாமல் இயந்திரம் மாதிரி நடந்து கொண்டான். அவனுக்காக நான் அன்று வாங்கிக் கொடுத்த புதுத் துணிகளை அவனுக்கு வாங்கிக் கொள்ளவே மனமில்லை. மிகவும் பிடிவாதத்திற்குப் பிறகு ஏற்றுக் கொண்டான்.

ஏற்கனவே நான் பம்பாய்க்குப் போக விரும்பினேன் அல்லவா? அந்த நண்பரைச் சந்திப்பதற்கு இதைவிட வேறு ஏற்ற சமயம் கிடைக்கப்போவதில்லை. அங்கு போய் அவருடன் சில வாரங்கள் நிம்மதியாய்த் தங்க விரும்பினேன். அங்கே நான் யார்என்பது அவரைத்தவிர மற்றவர்களுக்குத் தெரியாது. சேதுராமனின் கடிதங்களும் கட்டுரைகளும் அங்கே என்னைத் தேடிவராது. பம்பாய் நகரத்தின் புதிய சூழ்நிலையில், அதன் சுறுசுறுப்பின் மத்தியில் என்னுடைய நண்பரோடு நான் துன்பத்தை மறக்கலாம்.

நல்ல வேளையாக இந்தச் சமயத்தில் சாமிநாதன் திருச்சி

யில் இல்லை. காந்தாவுடன் சொந்த ஊருக்குப் போனவன் பத்துப் பதினைந்து நாட்களாக அங்கேயே தங்கிவிட்டான். அவன் இங்கு இல்லாதது எனக்குச்சௌகர்யமாக இருந்தது. அவன் மட்டும் இங்கிருந்தால், எனக்கும் அவன் மாமனாருக்கும் ஏற்பட்டுள்ள மனவேறுபாடு அவனுக்குத் தர்மசங்கடத்தைக் கொடுத்திருக்கும். நண்பனுக்காக அவன் பரிந்து பேசுவானா? அல்லது மாமனாரின் பக்கம் உண்மையிருக்கிறது என்று நம்பி என்னைத் திருத்துவதற்கு முற்படுவானா?

இரவு ஒன்பதரை மணிக்குத் திருச்சியில் ரெயில் ஏறினேன். வழியனுப்புவதற்காகப் பத்திரிகாலயத்து நண்பர்கள் வந்திருந்தார்கள். ஜானகிராமன் தேம்பித் தேம்பி அழுது கொண்டு நின்றான். சங்கரனிடம் அவனைப்பற்றித் தனியாகச் சொல்லிவிட்டு வந்தேன். சின்னஞ்சிறு பிராயத்தில்தான் எத்தகைய தீவிரமான அன்பு மலர்கிறது உள்ளத்தில்!

ரெயில் நகர்ந்தது. நண்பர்கள் கண்பார்வையிலிருந்து மறைந்தார்கள். பலமாதங்களாக எனக்குப் புகலிடமளித்த திருச்சி நகரத்தின் இரவுக் கோலத்தைக் கதவின் அருகில் நின்று கவனித்தேன். ஊரின் மத்தியில் பெரிய நந்தி விக்கிரகம்போல் படுத்துக் கிடக்கும் மலைக்கோட்டைக் குன்று கம்பீரமாக விளக்கொளியில் தெரிந்தது. அந்தக் குன்றின் மடியில் நான் சில நாட்கள் மாலைப் பொழுதுகளை நிம்மதியாய்க் கழித்திருக்கிறேன். ஒரே ஒரு முறை நான், நாராயணசாமி, லலிதா மூவரும் அதன் உச்சி வரையில் சென்று அங்கிருந்து நாலு புறமும் ஊரைச் சுற்றி வேடிக்கை பார்த்து மகிழ்ந்திருக்கிறோம்.

ரெயில் வேகமாய்ச் சென்றது. நான் ஏறியிருந்த இரண்டாம் வகுப்புப் பெட்டியில் என்னைத் தவிர யாரும் இல்லை. சன்னலின் பக்கமாக உட்கார்ந்துகொண்டு நான் என்னென்னவோ யோசனைகள் செய்தேன். உருவமில்லாத பல எண்ணங்கள், சாதிக்க முடியாத பல திட்டங்கள், பைத்தியக்காரத்தனமான லட்சியங்கள், இவையெல்லாம் கூடி என் மனத்தைக் குழப்பின. எனக்குத் தூக்கம் வரவில்லை.

இரவு இரண்டு மணியாயிற்று. விழுப்புரம் ஸ்டேஷனில் வண்டி நின்றது. இன்னும் எனக்குத் தூக்கம் வரவில்லை.

உட்காரும் இடத்தில் சாய்ந்து கொண்டும் கீழே படுத்துக் கொண்டும் பல தடவைகள் தூங்க முயற்சித்தேன் முடியவில்லை. கடைசியாகப் படுக்கையைச் சுற்றிப் பெட்டிமேல் கட்டி வைத்துவிட்டு, நான் எழுதியிருந்த நாவலின் கையெழுத்துப் பிரதியை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன்.

விழுப்புரத்திலிருந்து வண்டி புறப்படும் சமயம் அவசரம் அவசரமாக ஒரு பிரயாணி உள்ளே நுழைந்தார். கையில் ஒரு பத்திரிகையைத் தவிர வேறு எந்தச் சாமானும் அவரிடம் இல்லை. அவர் போட்டுக் கொண்டிருந்த 'செண்ட்' வாசனை மயக்கம் தருகிற மாதிரி இருந்தது. எனக்கு எதிரே வந்து உட்கார்ந்து அடிக்கடி தம்முடைய வெள்ளிப் பொடி டப்பாவைத் திறந்து மூக்குப் பொடி போட்டுக் கொண்டார். அவர் போட்டுக் கொண்ட பொடி அவருடைய மூக்கில் நுழைந்ததோ என்னவோ ஆனால் என்னுடைய சுவாசத்தில் கலந்தது.

என்னையறியாமல் நான் உட்கார்ந்தபடியே கண்ணயர்ந்து விட்டேன். அந்தத் தூக்கத்தின் மத்தியில் ஒரே கனவுகள், கனவுகள், கனவுகள்...

எத்தனை நேரம் ஆயிற்றோ தெரியாது.

சார்! டிக்கட்..."

தாம்பரம் ஸ்டேஷனிலிருந்து ரெயில் கிளம்பியது. பொழுது விடியும் நேரம். பக்கத்தில் டிக்கெட் பரிசோதகர் நின்றுகொண்டிருந்தார். அவர் அங்கே சிலநிமிடங்களாகவே என்னை எழுப்பும் முயற்சியில் நின்றுகொண்டிருக்கவேண்டும் என்று தோன்றியது. அரைத் தூக்கத்தோடு சட்டைப் பையில் கையை விட்டேன். அங்கே பர்ஸைக் காணோம். பகீரென்றது. நிமிர்ந்து உட்கார்ந்தேன். என் இடது கையில் இருந்த கைக்கடிகாரம் கழற்றப்பட்டிருந்தது. என்னுடைய பெட்டி, படுக்கை, பேனா ஒன்றையும் காணோம். பதறிப் போய் சுற்றுமுற்றும் நோக்கினேன். என்னையும் அவரையும் தவிர அந்தப் பெட்டியில் வேறு ஆளோ சாமானோ கிடையாது. என்னுடைய நாவல் மட்டிலும் கீழே விழுந்து கிடந்தது.

நாவலைக் கண்ணால் கண்டபிறகு எனக்கு எதையுமே பறி

கொடுத்ததாய்த் தோன்றவில்லை. அதை எடுத்துப் பத்திரமாக மடித்து வைத்தேன். வேறு எல்லாமே பத்திரமாய் இருந்து அந்த நாவல் மட்டிலும்திருட்டுப் போயிருந்தால்...?

"எந்த ஊருக்கு டிக்கெட் வாங்கினீர்கள்?" என்றார் பரிசோதகர்.

"பம்பாய்!"

"பர்ஸைப் பறி கொடுத்துவிட்டீர்களா?"

அவர் என்னைக் கேள்வி கேட்டவிதம், டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்யும் அநுபவசாலிகளைக் கேட்டபது போல் இருந்தது. என் வார்த்தைகளை அவர் உடனே நம்பாமல் போனதில் ஆச்சரியமில்லை. நாகரிகமாக உடையணிந்த எத்தனை ஏமாற்றுக்காரர்களை அவர் பார்த்திருப்பார்?

"டிக்கெட் மாத்திரமல்ல; படுக்கை எல்லாமே போய் விட்டது" என்றேன். பிறகு விழுப்புரத்தில் ஏறிய பிரயாணியைப் பற்றியும் அதன் பிறகு நடந்தவற்றையும் விவரமாய்க் கூறினேன். அவருக்கு என்னிடம் நம்பிக்கை ஏற்பட்டது.

"சென்னையில் இறங்கி போலீஸில் தெரிவிப்போம்" என்றார். பையில் காலணா இல்லாத நிலையில் நான் இடிந்து போய் உட்கார்ந்தேன். சென்னை எழும்பூர் ஸ்டேஷன் வந்தது; இறங்கினேன். ரெயில்வே போலீஸ் இன்ஸ்பெக்டர் என்னிடம் நடந்தவற்றை எழுதி வாங்கிக் கொண்டார். இதே மாதிரித் திருட்டு சமீபத்தில் இன்னுமொரு இடத்தில் நடந்திருப்பதாயும், அவசியம் இதைக் கண்டு பிடித்துத் தருவதாயும் சொன்னார். இரண்டு மூன்று நாட்கள் நான் சென்னையில் ஒரு நண்பன் வீட்டில் தங்குவதாய்ச் சொல்லி மயிலாப்பூரில் இருந்த அவனுடைய விலாசத்தைக் கொடுத்தேன்.

காலை எட்டு மணியாகியது. ஒரு வழியாக என்னை ஸ்டேஷனிலிருந்து வெளியே அனுப்பினார்கள். பக்கத்திலிருந்த குழாயில் பல் விளக்கினேன். ஆனால் காப்பி சாப்பிடவில்லை. காப்பி சாப்பிடக் காசு வேண்டுமே!

எழும்பூர் ஸ்டேஷனுக்கு எதிர் வரிசையில் உள்ள பெட்டிக் கடைகளின் பக்கமாக நடைபாதையில் ஒதுங்கி நடந்தேன். யாரோ ஒருவன் என் பெயரைப் பின்னால் நின்று

கொண்டு உரத்த குரலில் உச்சரிப்பதுபோல் தோன்றியது. திரும்பிப் பார்த்தேன். ரிக்ஷா இழுக்கும் ஒருவன் பீடிப் புகையைக் காற்றில் ஊதிக்கொண்டே, அவனருகில் நின்ற இன்னொரு ரிக்ஷாக்காரனுக்கு அந்தப் பெட்டிக் கடையில் தொங்கிய பெரிய விளம்பரத்தாளைச் சுட்டிக் காட்டினான். நானும் அந்த விளம்பரத்தைப் பார்த்தேன். என்னால் அந்த இடத்தைவிட்டு நகரமுடியவில்லை. எத்தனையோ பேர் என்னை இடித்துப் புடைத்துக்கொண்டு வேகமாய்ப் போனார்கள். நான்மட்டிலும் எங்கும் போகவில்லை. அதே இடத்தில் நின்றேன்.

என்னுடைய பெயர் பெரிய பெரிய எழுத்துக்களில் அந்த விளம்பரத்தாளில் அச்சாகி இருந்தது. ஏற்கெனவே என்னை எச்சரிக்கை செய்திருந்த பிரபலமான மஞ்சள் பத்திரிகையின் விளம்பரம் அது!

எத்தனையோ முறைகள் என் பெயரை நான் விளம்பரத்தாள்களில் பார்த்திருக்கிறேன். அதற்காக நான் பெருமையும் அடைந்திருக்கிறேன். மற்றவர்கள் அதை வாசித்து நான் அருகில் இருப்பது தெரியாமலே என்னை, என் கதைகளுக்காகப் பாராட்டுவது உண்டு. அப்போது நான் பெறும் இன்பம் எத்தகையது தெரியுமா?

ஆனால் இன்றைக்கு? என் பெயர் என்னை பைத்தியமாக அடித்தது. என்னைப் பாராட்டுவதற்காகவா என் பெயரை அதில் போட்டிருக்கிறார்கள்? என்னைக் கௌரவிக்கவா என் பெயர் அங்கே காற்றில் பறக்கிறது? ஐயோ! அந்தக் கடையில் மாத்திரம் இல்லாமல், கடைக்குக் கடை அந்த விளம்பரம் தொங்குகிறதே! நான் பார்க்கும் எல்லா மனிதர்களும் அந்தப் பத்திரிகையை வாங்கி, என் பெயரைப் படித்துச் சிரித்துக் கொண்டே நடக்கிறார்களே!

**பத்திரிகாசிரியர் துரையின் பகல் வேஷம்—ருசிகரமாண கதைகள் எழுதுபவரின் ருசிகரமான சொந்தக்கதை!**

## 15

மயிலாப்பூர் நண்பன் வீடு பூட்டிக் கிடந்தது. பக்கத்தில் விசாரித்தேன். குடும்பத்துடன் வெளியூர் போய் ஒரு

வாரமாகிறதாம்! எப்போது சென்னை திரும்புவார்கள் என்று தெரியாதாம். இதைக் கேட்டவுடன் ஏற்கனவே வலித்துக் கொண்டிருந்த என் தலையில் சம்மட்டியபடி விழுந்ததைப் போலவே இருந்தது. பூட்டப்பெற்ற கதவின்மேல் சாய்ந்து நிமிடநேரம் ஓய்வு பெற்றேன். கைகள், கால்கள், உடம்பு எங்கும் ஒரே வலி. இனி ஒரு அடிகூட மேலே எடுத்து வைக்க முடியாதுபோல் தோன்றியது! நண்பன் வீட்டுத் திண்ணையில், ஒரு வாரமாகக் கூட்டப்படாமல் இருந்த வெறுந்தரையில் படுத்தேன்; வெகுநேரம் படுத்துக் கிடந்தேன். எழும்பூரிலிருந்து மயிலாப்பூர் வரையில் வெறும் வயிற்ருேடு நடந்து வந்ததாலோ, இரவில் ஏற்பட்ட பிரயாணக் களைப்பாலோ, அந்தப் பத்திரிகை விளம்பரத்தைப் பார்த்து என்னையே நான் அலட்டிக் கொண்டதாலோ என் தேகமெல்லாம் அனலாய்ச் சுட்டது.

சென்னையில் எனக்குத் தெரிந்த இன்னும் சிலர் இருந்தார்கள். ஆனுல் அவர்களில் யாரையும் நான் இந்த நிலையில் பார்க்க முடியாது. காரில் போனுல்தான் அவர்களுடைய வெளிவாசலின் இரும்புக்கதவுகளை அவர்களது வேலைக்காரர்கள் திறந்து விடுவார்கள். என்னைக் கண்டு கைகூப்புவார்கள். இல்லாவிட்டால் இந்த நிலையில் போய் நான் அவர்களிடம் கைகூப்பினுலும் எனக்கு உள்ளே நுழைய அனுமதி கிடைக்காது. கிடைத்தாலும் அந்த வீட்டுக்கார நண்பர் என்னுேடு முகம் கொடுத்துப் பேசமாட்டார்.

நான் இப்போது பத்திரிகாசிரியர் துரை இல்லை; ைபயில் காலணு இல்லாத ஏழைத் துரை. புகழ்பெற்ற எழுத்தாளன் துரை இல்லை; இகழ்பெற்ற நாடோடிக்கலைஞன். மனிதர்கள் இன்றைக்கு என்னிடம் இன்முகத்தோடு பேசி உபசரிக்க மாட்டார்கள். என் எதிரில் என்னை வாயாரப் புகழ்ந்துபெருமைப் படமாட்டார்கள். என்னுடைய இந்தக் கோலத்தில் சென்னை நகரத்துத் தெருக்களிலெல்லாம் என் பெயர் படும் பாட்டில், நான் யாரையாவது தேடிக்கொண்டு போக முடியுமா? காசும்கௌரவமும் உள்ளவர்களுக்குத்தானே இந்தச் சென்னை ஒரு சொர்க்கமாக இருக்கிறது? மற்றவர்களுக்கு நரகத்தானே இது?

ஒரே ஒரு இடத்திற்கு நான் போகலாம்; அந்த ஒரே ஒரு இடம் என்னை அழைத்தது. அந்த வீட்டின் கதவுகளை நான் எந்தநேரத்திலும் தட்டலாம். எந்த மாதிரி நிலையில் நான் இருந்தாலும் அந்த வீட்டின் கதவுகள் எனக்காகத் திறக்கப்படும். ஊரெல்லாம் எனக்கெதிரே திரண்டுஎன்னைத் துரத்தி வந்தால்கூட அந்த வீடு எனக்குப் பகிரங்கமாய்ப் புகலிடமளிக்கும்...ஆனால் நான் அங்கு போகமாட்டேன்; போகவே மாட்டேன். ஒருகாலும் திருவல்லிக்கேணியில் உள்ள என்னுடைய நண்பர் வீட்டுப் பக்கம் திரும்பவே மாட்டேன். என்னால் அவர் பெற்ற சுகமெல்லாம் போதும்—

சூரியனின் ஒளி திண்ணையில் பரவிச் சுள்ளென்று என் முகத்தில் அறைந்தது. அதற்கு மேலும் அங்கே படுத்திருக்க முடியவில்லை. எழுந்து மெதுவாக என் பலமெல்லாம் சேர்த்துக்கொண்டு நடந்தேன். எந்தப் பக்கம் நடந்தேன் என்று தெரியாது; கால்கள் எங்கோ சென்றன. செருப்பில்லாத அந்தக் கால்கள் தார் ரோட்டின் அனலால் துடிதுடித்துக் கொண்டு, நோக்கமில்லாமல் நடந்தன.

இத்தனை துன்பத்தின் மத்தியிலும் நான் என்னுடைய நாவலை மறக்கவில்லை. பத்திரமாய் அது என்கையிலிருந்தது. உச்சி வெயிலில் தலையிலிருந்து வேர்வை வழிந்தபோதுகூட அதை வைத்து என் தலை மறைத்துக் கொள்ளவில்லை—என்னுடைய உடலுக்கும் உயிருக்கும் மேலானது அது. ஏன் தெரியுமா? அது என் கதை; என்னுடைய லலிதாவின் கதை. எங்களுடைய உடலும் உயிரும் அழிந்தபிறகுகூட, அழிய முடியாத அந்த அன்பு நிமிடங்களைப் பற்றி அதில் நான் எழுதியிருந்தேன். அன்புக்கு அழிவில்லை என்பது உண்மையானால் எங்களுடைய அன்புக்கும் அதே நிலைதானே?

மயிலாப்பூரின் எல்லையில் சாந்தோம் கடற்கரைக்குப் போகிற தெரு அது. இரண்டு பக்கங்களிலும் ஏழைமக்களின் கீற்றுக் குடிசைகள். இடுப்பில் கந்தலைச் சுற்றிக் கொண்டு, அந்தத் தெருக் குழந்தைகள் நெருப்பாய்த் தகிக்கும் வெயிலைக் கவனியாமல் ஓடியாடி விளையாடினார்கள். மூன்று வயதுச் சிறுவன் ஒருவன் வேகமாக வந்து என்மேல் மோதிக்கொண்டு, கீழே விழுந்தான். மெதுவாகக் குனிந்து

அவனைத் தூக்கினேன். அவனுடைய முதுகின் மண்ணைத் தட்டிவிட்டேன். அவன் கண்களில் தெரிந்த பயம்! அப்படியே அவனை அணைத்துக்கொள்ள வேண்டும்போல் தோன்றியது. ஒருவன் ஏழையாக மாறிவிட்ட பிறகுதான் ஏழைகளின் நிலையை நன்றாக உணர முடியும் போலும்!

அவனைக் கீழே விட்டுவிட்டு மேலே நடந்தேன். நடக்க முடியவில்லை. பக்கத்தில் தண்ணீர் குழாயில் தெருப் பெண்கள் சண்டையிட்டுக்கொண்டு நின்றார்கள். கையால் சைகை செய்து தண்ணீர் வேண்டுமென்றேன். வாய்ச்சண்டை ஓய்ந்தது. எனக்கு வழிவிட்டார்கள். குழாயில் முகத்தை அலம்பிக்கொண்டு வயிறு கொள்ளுமட்டும் நீரைக் குடித்தேன்.

பத்தடித் தூரத்தில் சிறிய தென்னந்தோப்புத் தெரிந்தது. அங்கு சென்று அந்த நிழலில் மீண்டும் படுத்தேன். அப்படிப் படுக்கும்போது எனக்கு முதல்முதலாகச் சாவின் நினைவு வந்தது படுத்தபடியே உறங்கும் நிலையில் சில செத்துப்போன மனிதர்களை, தெரு ஓரங்களில் நான் இந்த நாகரிக யுகத்தில் பார்த்திருக்கிறேன். பட்டினிச் சாவுக்குப் பழக்கப்பட்ட நாடுதானே இது?

அந்தத் தென்னந்தோப்பு நிழல் என்னைப்போல இன்னும் பல பேருக்கு ஏற்கனவே புகலிடமளித்திருந்தது. குருடர்கள், முடவர்கள், நோயாளிகள் ஆகிய பல பிச்சைக்காரக் குடும்பங்களை நான் அங்கு கண்டேன். சிலர் படுத்திருந்தார்கள்; சிலர் உட்கார்ந்து கொண்டே ஒருவரை ஒருவர் கீழ்த்தரமான வார்த்தைகளால் திட்டிக் கொண்டிருந்தார்கள்; சிலர் மரத்தடியில் கற்களை அடுப்பாக்கி கஞ்சிக் காய்ச்சிக் கொண்டிருந்தார்கள்.

சென்னை நகரத்தில் 'பாரீஸ் கார்னர்' பக்கத்திலுள்ள பெரிய பெரிய கட்டடங்களைப்பற்றி நினைத்தேன்; மாம்பலத்திலும் அடையாறிலும் உள்ள பங்களாக்களைப் பற்றி நினைத்தேன்; நகரத்தின தெருக்களில் சாரை சாரையாகச் செல்லும் புத்தம் புதுக் கார்களையும் அந்தக் கார்களில் செல்லும் செல்வந்தர்களைப் பற்றியும் நினைத்தேன்—இத்தகைய சென்னைப் பட்டினத்தில்தான், தமிழ் நாட்டை ஆளும் தலைவர்களும் ஆயிரம் ஆயிரம் பிச்சைக்காரர்களும் இருக்

கிறார்கள்.

மனிதனுக்கு இரண்டு வகைப் பசி. உடற் பசிக்குச் சோறு உள்ளப் பசிக்குக் காதல். ஆனால் உடற்பசி இல்லாதவர்களால்தான் உள்ளப் பசியை அனுபவிக்க முடியும். எனக்கு இப்போது வயிறு பசித்தது. அடி வயிற்றுக்குள் தசையை யாரோ இழுத்துப் பிடித்து முறுக்குவதுபோல் உணர்ந்தேன். பசி. பசி, ஒரே பசி! என்னைச் சுற்றிலும் பசி மிகுந்தவரின் உலகம்.

நான் எனக்குள்ளே காதலை மனதாரச் சபித்தேன்; காதல்! அது பணக்காரர்களின் பங்களாக்களுக்குள் ஒளிந்திருக்கும் மாயமோகினி! ஏழைகளின் எட்டாப் பழம்! அது வெறுங் கனவு! கானல் நீர்! நெஞ்சுக்குப் போதை தரும் பொல்லாத கள்!

இந்தப் பசியிலிருந்து மட்டும் பிழைத்துக்கொண்டால் பிறகு என் எண்ணங்களையும் செயலையும் பசிக்கு எதிராகவே பயன்படுத்தக் கங்கணம் கட்டினேன். காதலைப் பற்றிக் கதைகள் எழுதி அவைகள் பசியை அறியாதவர்களால் சிரஞ்சீவி இலக்கியம் என்று புகழ் பெறுவதைவிட, ஒரே ஒரு மனிதனையாவது பசியிலிருந்து காப்பாற்றிவிட்டு என் கதை உடனுக்குடனே மடிந்து போவது மேல். ஆனால் என்னுள்ளே மூண்டெரியும் பசி என்னை மீண்டும் உயிருடன் விடும் என்று நான் நம்பவில்லை. தனக்கு எதிராகப் போரிட விரும்பும் ஒருவன் அவன் தன்னுடைய கைப்பிடியில் அகப்பட்டுத் திணரும்போது வஞ்சம் தீர்க்காமல் விட்டுவிடுமா?

தென்னை மர நிழல்கள் நீண்டன. பிச்சைக்காரக் கூட்டம் சிறிது சிறியதாய்க்கலைந்தது. நானும் மெதுவாக எழுந்து என்னுடைய முடிவறியாத நடையைத் தொடங்கினேன். அதிகம் தூரம் வரவில்லை. நான் வந்த தெரு கடற்கரையோரமாக முடிந்தது. அந்தக் கடற்கரை—அது எந்தக் கடற்கரை தெரியுமோ? அதோ, அந்தப் பழைய தோணி அதோ அந்த ஒதுக்குப் புறமான இடம், அதோ அந்த தோணியின் நிழலில் தெரியும் மணற்பரப்பு—நானும் நண்பரும் லலிதாவும் உட்கார்ந்த அந்த மறக்க முடியாத இடம்.

வயிறு பசியை மறந்தது. கால்கள் வெறி கொண்டு விட்

டன. ஓட்டமும் நடையுமாய்ச் சென்றேன். கால்கள் தரையில் படுவது தெரியவில்லை. என்னுடைய இன்பத்தின் எல்லை உருவமில்லாத சூன்யத்தில் நின்றுகொண்டு தன்னுடைய இரு கையாலும் என்னை வாரி அணைத்துக்கொள்ள அழைத்தது. அந்தக் கடற்கரையின் பொங்கும் அலைகள் என்னை அன்போடு கூவி அழைத்தன.

ஓடிவந்த நான் கால்கள் மணலில் அகப்பட்டுப் பின்னிக் கொண்டதும், அந்தத் தோணிக்கு அருகே குப்புற விழுந்தேன். கையில் இறுகப் பிடித்திருந்த நாவல் நழுவிக் கடலுக்குள் போகப் பார்த்தது. வேகமாக எழுந்து மண்டியிட்டுப் பாய்ந்து அதைப் பற்றினேன். கடல் விரும்பினால் என்னை விழுங்கலாம், என் நாவலை விழுங்க அதனால் முடியாது. பத்திரமாக அதை எடுத்து என் மார்புக்குக் கீழே போட்டுக் கொண்டேன்.

நேரம் சென்று கொண்டிருந்தது.

கனவு கண்டேனோ, கண்ணால் பார்த்தேனோ, கற்பனை விபரீதமோ, எனக்கு இப்போது ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. சேதுராமனின் தலைமையில் பத்துப்பதினைந்து முரடர்கள் என்னை நோக்கி வந்தார்கள். ஒவ்வொருவர் கையிலும் என்னைப் பற்றி எழுதியிருந்த 'உண்மைத் தூதன்' பத்திரிகை இருந்தது. எல்லோரும் என்னைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு பீடியைப் புகைத்தார்கள். என்னைப்பற்றி இழிவாகப் பேசி நகைத்தார்கள்.

"இங்குமா அவளைத்தேடி வந்துவிட்டாய்!' என்றான் சேதுராமன்.

"இல்லை; ஆசிரியர் கடலைத்தேடி வந்திருக்கிறார்!" என்றான் கூட்டத்தில் ஒருவன்.

மீண்டும் எல்லோரும் சிரித்தார்கள். என்னுடைய கைகளைப் பற்றி இழுத்துக்கொண்டுபோய்க் கடலுக்குள்ளே தள்ளினார்கள். நான் அலைகளில் மிதந்தேன்; தடுமாறினேன். கடலுக்குள் முழுகினேன். வெகு ஆழத்தில் போய்க்கொண்டிருந்தேன். முத்தும் பவளமும் சூழ்ந்த கடலின் அடிவயிற்றுக்கு வந்துவிட்டேன். ஆனால் என்னுடைய கையில் முத்திற்கும் பவளத்திற்கும் மேலான அந்தநாவல் அப்படியே

தண்ணீரில் கொஞ்சமும் நனையாமல் இருந்தது.

கடலின் ஆழத்துக்குள்ளே நான் போய்க் கொண்டிருக்கும்போது, கடலின் ஆழத்துக்குள்ளே போக விரும்பிய இனனொருத்தியின் நினைவு வந்தது. 'நீங்கள் என்னை ஒரு முறை சந்திக்காவிட்டால் கடல்நீர் கூடவா என்னைச் சந்திக்காது? கடலின் தண்ணிர் உங்களை விடக் கருணையுள்ளது' என்று சொல்லிய லலிதா...

அவள் வருவதற்கு முன்பே நான் போய்விடுவேன். அவளுக்காக ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிமிடமும் ஒவ்வொரு கணமும் காத்திருப்பேன். காதலிக்காகக் காத்திருப்பதைவிட வேறு எந்த ஆனந்தமாவது எந்த உலகத்திலாவது உண்டா! அவளுக்காக நான் முத்துமாலைகள் தொடுத்து வைப்பேன். பவளச்சரங்கள் கட்டி வைப்பேன் அவள் இங்கு வந்த பிறகு நானும் அவளும் சுறுமீனின் முதுகில் ஏறி இந்தக் கடல் முழுவதும் சுற்றி வருவோம்—எங்களை இங்கே யாரும் பழிக்கமாட்டார்கள்; பரிகசிக்கமாட்டார்கள்; தூற்றமாட்டார்கள். நான் கணவன்; அவள் என் மனைவி.

மாணவனுக இருந்தபோது ஆவியுலக ஆராய்ச்சியில் ஓரளவு பற்றுதல் கொண்டிருந்தேன். இறந்துபோன மனிதர்களுடைய ஆவிகளோடு எனக்குச் சிறிது பழக்கம் உண்டு. ஆகையால் சாவுக்குப் பின்னுள்ள வாழ்வில் எனக்கு நம்பிக்கை குறையவில்லை. நாங்கள் நிச்சயம் சமுத்திர ராஜனின் அகண்ட சாம்ராஜ்யத்தில் சந்திக்கத்தான் போகிறோம். சந்தேகமே இல்லை.

திடீரென்று எனக்கு ஓர் ஆசை பிறந்தது. அவள் இங்கே வருவதற்கு இன்னும் சில நாட்கள் ஆனாலும் ஆகட்டும். அதற்குள்ளே என்னிடமுள்ள இந்த நாவலுக்கு ஒரு முடிவு எழுதி எப்படியாவது இதை அவள் கையில் கிடைக்கும்படி செய்துவிட வேண்டும். அவள் இதைச் சிறந்த முறையில் வெளியிடுவாள். பல ஆயிரம் பிரதிகளை வெளியிட்டு எங்களைத் தூற்றியவர்களுக்கெல்லாம் வழங்குவாள். படித்துவிட்டு அவர்கள் எங்களுக்காகப் பெருமூச்சு விடுவார்கள். எங்களைத் தூற்றியதை நினைத்துக் கண்ணீர் விடுவார்கள். அவர்கள் அப்படி எங்களை நினைத்துக் கொள்ளும்போது நாங்கள் அவர்

களுக்கு மத்தியில் இருக்க மாட்டோம்!

கடலுக்குள்ளே போன என்னை நோக்கி இப்போது ஒரு சுறுமீன் வந்தது. அது என்னைச் சுமந்து செல்ல வரவில்லை; விழுங்குவதற்காக வந்தது. கடலின் வயிற்றுக்குப் பதிலாக நான் இப்போது மீனின் வயிற்றுக்குள் போய்க் கொண்டிருந்தேன்.

## 16

இது நாவலின் கடைசி அத்தியாயம். இந்தக் கட்டத்தின் முற்பகுதியில் நடந்த சில நிகழ்ச்சிகளின்போது நான் சுய உணர்வுடன் இல்லை. இரண்டு நாட்கள் சென்றபின் லலிதா என்னிடம், நான் நடந்துகொண்ட விதத்தையெல்லாம் விவரமாய்க் கூறினாள். அவற்றை வைத்துக் கொண்டு நான் இந்தப் பக்கங்களை எழுதுகிறேன்—

இரண்டு சூடான நீர்மணிகள் என் நெற்றியில் முதல் முதலாக உதிர்ந்தன. பிறகு அவைகள் அத்தோடு நிற்கவில்லை. தொடர்ந்து உதிர்ந்துகொண்டே இருந்தன. எனக்கு அந்த வெதுவெதுப்பான நீர் முத்துக்கள் அளித்த சுகம் மிகவும் இனிதாக இருந்தது. கண்களைத் திறக்க வேண்டும் என்ற எண்ணமில்லாமலே அந்தச் சுகத்தை அநுபவித்துக் கொண்டிருந்தேன்.

"துரை! துரை!"

என் காதருகில் மெதுவாக ஓர் குரல் ஒலித்தது.

"துரை!... துரை!"

திரும்பவும் அந்தக் குரல் ஒலித்தது.

நான் கண்களைத் திறந்தேன். என் முகத்துக்கு நேரே முகத்தை வைத்துக்கொண்டு என் கண்களுக்கு நேரே கண்களை வைத்துக்கொண்டு என்னைக் கண்ணீரால் கழுவிக் கொண்டிருந்தாள் லலிதா—ஆம்; லலிதாவேதான்!

"எனக்கு முன்பே நீ செத்துப் போய்விட்டாயா, லலிதா! நீ எப்படி இங்கு வந்தாய்?"

அவள் விசித்திரமாக என்னைப் பார்த்தாள்.

"என்னை நீ என்று அழைக்கிறீர்களே! ஒருநாளும் நீங்கள்

என்னை அப்படி அழைத்ததில்லையே!''

''சொல், லலிதா! நீ எப்போது செத்தாய்?—முதலில் உன் கண்களைத்துடைத்துக் கொள். அல்லது நானே துடைக்கட்டுமா?''

''வேண்டாம்; நானே துடைத்துக் கொள்கிறேன்.''

லலிதா சற்றுத் தள்ளி உட்கார்ந்தாள். சேலைத் தலைப் பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

எனக்குச் சிரிபபு வந்தது.

''இனிமேல் அந்த உலகத்துச் சம்பிரதாயங்கள் வேண்டாம். நீ வேறு நான் வேறில்லை. அந்த உலகம் நம்மைப் பொறுத்தவரையில் செத்துவிட்டது. நாம் புது யுகத்தின் புதுப் பிறவிகள்—லலிதா! ஏன் அப்படிப் பார்ககிறுய்?''

''ஐயோ! ஜன்னி வந்துவிட்டதே!'' என்று பதறினுள் லலிதா. பிறகு, ''கொஞ்சம் பேசாதிருங்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். கொஞ்சம் பேசா திருங்கள்'' என்ருள்.

''ஜன்னியா! கடலுக்குள் விழுந்து மீன் வயிற்றுக்குள் போ'ன பிறகு ஜன்னி எப்படி வரும்?''

''பேசாமல் இருங்களேன்!'' என்று மறுபடியும் கெஞ்சினுள். எழுந்து சென்று இரத்தம்போல் சிவந்திருந்த ஒரு பானத்தைக் கிண்ணத்தில் ஊற்றிஎன் இதழருகே கொண்டு வந்தாள். நான் குடித்தேன். குடலைப் புரட்டிக்கொண்டு வந்தது அதன் கசப்பு. கசப்பாக இருந்தாலென்ன? உவர்ப் பாக இருந்தாலென்ன? அவளுடைய கையால் இந்த மாதிரி கொடுப்பதாக இருந்தால் ஆயிரம் விஷக்கிண்ணங் களை நான் அருந்தத் தயாராக இருந்தேன்.

கிண்ணத்தைக் கீழே வைத்துவிட்டு என்னை வெகு நேரம் உற்றுப் பார்த்தாள். அப்போதுதான் பிறந்த செல்லக் குழந்தையை ஆசையோடு பார்க்கும் தாயைப் போல் பார்த்தாள். அவளுடைய உதடுகள் துடித்தன, நெஞ்சு விம்மியது.

அவள் கொடுத்த பானம் எனக்குள் என்னவோ மாற் றங்களைச் செய்து கொண்டிருந்தது. என் கண்கள் நன்ருய்த் தெரிந்தன. தேகமெங்கும் மின்சாரம் பரவுவது போலத் தோன்றியது. நான் சுற்றுமுற்றும் நன்ருகக் கவனித்தேன்.

ஒரு பெரிய அறை அது. மின்சார விளக்குகள் பல தொங்கின; விசிறி ஒன்று என் தலைக்கு நேரே சுழன்றது. நான் ஒரு கட்டிலில் படுத்துக் கிடந்தேன். என்னை ஒரு கம்பளிப் போர்வை மூடியிருந்தது. எனக்கு உக்கிரமாக இருந்ததால் அந்தப் போர்வையை வேகமாக உதறித் தள்ளினேன். அவள் அதைக் கண்டு முகம் மலர்ந்தாள். "இனிமேல் உங்களுக்கு ஒரு கஷ்டமும் இல்லை; உடம்பு குணமாகி விட்டது" என்றாள்.

எனக்குக் கொஞ்சம் புரிந்தது; ஆனால் அதற்குமேல் அதிகமாய்ப் புரியவில்லை.

"நீங்கள் கடற்கரையில் ஜுரத்தோடுபடுத்திருந்தீர்கள். நானும் அவரும் நல்ல வேளையாக இன்றைக்கு அங்கே வந்தோம். இப்போது நீங்கள் நம் வீட்டில்தான்இருக்கிறீர்கள்" என்றாள்.

"அப்படியானால் லலிதா என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்...நீ என்று கூப்பிட்டவுடனே! இல்லை, இல்லை. நீங்கள்...லலிதா!"

"வேண்டாம்; நீ என்றே கூப்பிடுங்கள்; அப்படி நீங்கள் அழைக்கும்போது எனக்கு எத்தனை ஆனந்தமாக இருந்தது தெரியுமா?"

"அப்படி நான் அழைக்கக்கூடாது லலிதா!"

"கூடாது!...உணர்வு தவறிய வேளையில் உங்கள் உள்ளத்தை உங்களால் மறைக்க முடியவில்லை. இன்னும் கொஞ்சநேரம் நீங்கள் ஜன்னி வேகத்தில் பேசியிருக்கக் கூடாதா?—என்னவெல்லாமோ பேசியிருப்பீர்களே!"

நான் மௌனமாக இருந்தேன். அவளும் மௌனமாக இருந்தாள்.

டெலிபோன் மணி கிணுகிணுத்தது. வேகமாகச் சென்று அதைக் கையில் எடுத்தாள். "யார்? டாக்டர் ஸாரா?— உடம்பு தேவலாம் ஸார்! சுகமாகிவிட்டது. நீங்கள் சொன்ன மாதிரியே ஒரு தரம் நன்றாக வேர்த்தது. மருந்தைக் கொடுத்தேன். இப்போது தெளிவாகப் பேசுகிறார். சாப்பாடு கொடுக்கலாமா...? சரி, ரொம்பவும் நன்றி!" என்று ரிசீவரைக் கீழே வைத்தாள்,

"யாரது?" என்றேன்.

"டாக்டர்—உங்களைக் கடற்கரையிலிருந்து கொண்டு வரும்போதே அவரையும் அழைத்து வந்தோம். இங்கு வந்து ஒருமணி நேரம் உங்களைச் சாவதானமாகப் பரிசோதனை செய்தார். மன அதிர்ச்சியால் வந்த காய்ச்சல்; உடனே சுகமாகி விடுமென்கிறார். ஆனால் சௌகர்யமான பிறகுகூட நீங்கள் அமைதியாக இங்கே எங்களுடன் கொஞ்சநாள் தங்க வேண்டுமாம். இது டாக்டர் உத்தரவு" என்றாள்

"அது மாத்திரம் முடியாது! நாளைக்கே நான் பம்பாய் புறப்படப் போகிறேன்."

"அது மாத்திரம் முடியாது! நாங்கள் இரண்டு பேரும் உங்களை விடப் போவதில்லை."

அவர்கள் இரண்டு பேர் என்பதை எனக்கு இத்தனை நேரங் கழித்துத்தான் உணர முடிந்தது. இதுவரை என்னுடைய நினைவையெல்லாம் லலிதா மட்டிலுந்தான் அடைத்துக் கொண்டிருந்தாள். இப்போது நாராயணசாமியும் நினைவுக்கு வந்தார்.

"எங்கே அவர்? நான் அவரை மறந்தேவிட்டேன்" என்றேன்.

"நீங்கள் கண் விழிப்பதற்குச் சற்று முன்னால் மாடிக்குப் போனார். அதுவரை உங்களருகேதான் உட்கார்ந்திருந்தார் என்னைக் கவனித்துக் கொள்ளச் சொல்லிப் போயிருக்கிறார்—அழைத்து வரட்டுமா?" என்றாள்.

"வேண்டாம்; அவர் தூங்கட்டும். காலையில் பார்க்கிறேன்."

லலிதா எழுந்து சென்று ரொட்டியும் சூடான பாலும் கொண்டு வந்தாள். ஆரஞ்சுப் பழங்களை உரித்து வைத்தாள். முதல்நாள் இரவுக்குப் பிறகு உணவைக் காணாத நான் அவற்றைச் சுவைத்துச் சாப்பிட்டேன். மத்தியானம் தென்னைமர நிழலில் வாடிக் கிடந்த என்னுடைய காட்சி அப்போது மனதிற்கு வந்தது.

நான் சாப்பிடுவதைப் பார்த்து அவள் புன்னகை செய்தாள். சாப்பிட்டு முடிந்தவுடன், "தூக்கம் வருகிறதா?" என்றாள்.

"வராது!"

"ஏன் வராது?"

"நீங்கள் இங்கு இருக்கிறீர்களல்லவா?—கண்ணை மூடிக்கொண்டு தூங்கினால் உங்களை எப்படிப் பார்த்துக்கொண்டிருக்க முடியும்?"

"நான் உங்களைப்போல இல்லை. தூங்கிவிட்ட பிறகு கூட எனக்கு வேண்டியவர்களைக் கனவில் பார்த்துக்கொண்டிருப்பேன்."

அவள் இப்படிச் சொன்னபோது எனக்கு வேதனையாக இருந்தது. வாழ்க்கையே அவளுக்கு ஒருகனவு. அவள் விரும்புகின்ற இன்பத்தையெல்லாம் அவள் கனவில் தவிர வேறெங்கும் பெறமுடியாது.

"உங்கள் உத்தரப்படி நீங்கள் பர்மா புறப்படும் முன்பு உங்களைச் சந்தித்துவிட்டேன். இனிமேல் கடல் தண்ணீருக்கு உங்களால் ஆபத்தில்லையே!" என்றேன்.

"நீங்களாகச் சந்திக்கவில்லை; நான் உங்களைத் தேடிப் பிடித்திருக்கிறேன்."

"எப்படியாவது நாம் சந்தித்து விட்டோம். கடவுள் கருணை உள்ளவர்."

"ஒரு வாரமாவது நீங்கள் இங்கு தங்க வேண்டும். டாக்டர் சொல்லியிருக்கிறார்."

"தயவுசெய்து மன்னித்துக்கொள்ளுங்கள். காலை ஆறு மணிக்குள் நான் இங்கிருந்து புறப்படவேண்டும். அதற்கு மேல் ஒரு நிமிடமும் தாமதிக்க மாட்டேன்."

அவள் மிகவும் பிடிவாதமாக அங்கு தங்கும்படி வற்புறுத்தினாள். உடல்நிலை கெட்டுப்போகும் என்று காரணம் கூறினாள். எனக்கு அவளுடைய பிடிவாதத்தில் அர்த்தமிருப்பதாய்த் தோன்றவில்லை.

"லலிதா! இன்னும் ஒரு வாரமல்ல, ஒரு வருடம் தங்கினால்கூட, நாம் பிரிய வேண்டியவர்கள்தான். நிலைமை இந்த ஒரு வாரத்திற்குப் பிறகு இன்னும் சிக்கலாகத்தான் இருக்கும். ஆகையால் என் முடிவில் குறுக்கிடாதீர்கள்—இப்போது இருக்கும் அருமையான நேரத்தை இன்பமாகப் பேசிக்கொண்டே கழிப்போம். பிரியும் வேளையைப் பற்றிய

கவலை இப்போது எதற்கு?''

''சரி, உங்கள் இஷ்டம். நீங்கள் பேசிக்கொண்டே இருங்கள்; நான் கேட்டுக்கொண்டே இருக்கிறேன்.''

திடீரென்று படுக்கையிலிருந்து எழுந்தேன். நாலுபக்கமும் கட்டிலில் சுற்றிப் பார்த்தேன். என்னுடைய நாவலைக் காணவில்லை.

''என்னுடைய நாவல் எங்கே? கடற்கரையில் போட்டு விட்டனோ?''

''நாவல் பத்திரமாக இருக்கிறது. அதை அவர் தம் மோடு மாடிக்கு எடுத்துக்கொண்டு போயிருக்கிறார்.''

எனக்கு அமைதி வந்தது.

அந்த இரவில் நாங்கள் மணிக்கணக்காய், ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டும், பேசாமலும், பார்த்துக் கொண்டும் பாக்காமலும், சிரித்துக்கொண்டும், அழுது கொண்டும், பொழுதை ஓட்டினோம். இரவுநேரம் இளம் வயதுள்ளவர்களைப் பைத்தியக்காரர்களாக மாற்றுகிறது. நாங்களும் பைத்தியக்காரர்களாக மாறினோம். ஆனால் வெறிகொண்டவர்களாக மாறவில்லை. எங்களை மயக்கத் துணிந்த அந்த இரவின் தன்மைக்கு எங்களைக் கெடுக்கும் துணிவு கிடையாது.

கண்கள் தூக்கத்திற்காகக் கெஞ்சின. உடல் நிலையும் தூக்கத்திற்கு ஏங்கியது. ஆகையால் என்னையறியாமல் தூங்கிப்போய் விட்டேன்; நன்றாக உறங்கினேன்.

மணி ஐந்து அடித்தது. ஜன்னல் வழியாகக் கீழ்வானம் வெளுத்து வருவதைப் பார்த்தேன். லலிதா சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தபடியே தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் விழித்துக் கொள்வதற்குள் அவளுக்குத் தெரியாமல் அவளுடைய முகத்தழகை எவ்வளவு அதிகமாய்ப் பருக முடியுமோ அவ்வளவும் பருக விரும்பினேன். வீணாகக் கண்களை இமைத்து, அந்த இமைக்கும் நேரத்தில் கிடைக்கும் இன்பக் காட்சியை நான் இழக்கவில்லை.

அவள் கண் மலர்ந்தாள். மலர்ந்த கண்கள் என்னைக் கண்டு சிரித்தன—அடடா! அவள் இன்னும் சற்று நேரம் உறங்கி இருக்கக் கூடாதா? நான் பார்ப்பதைக் கெடுத்து

விட்டாளே! இனிமேல் எந்த ஜன்மத்தில் அவளை அப்படி நான் பார்க்கப் போகிறேன்?

"முன்பே விழித்துவிட்டீர்களா?"

"இல்லை; ஐந்து நிமிடம் கூட இருக்காது."

"இதோ ஐந்து நிமிடத்தில் வந்துவிடுகிறேன்" என்று துள்ளிக் கொண்டு எழுந்தாள். அறைக்கு வெளியே சென்றாள். கால் மணியாயிற்று. கையில் பல்பொடியை எடுத்துக்கொண்டு, "வெந்நீர் தயாராக இருக்கிறது, குளிக்கிறீர்களா?" என்றாள்.

உடல் வலி தீரச் சூடான வெந்நீரில் குளித்தேன். நண்பர் நாராயணசாமியின் உடைகள் எனக்காக எடுத்து வைக்கப்பட்டிருந்தன. உடுத்துக் கொண்டேன். காபி மேசைக்கு வந்தது. குடித்துவிட்டுக் கண்ணாடிக்கு எதிரே நின்று தலைவாரிக் கொண்டேன்.

கண்ணாடியில் தெரிந்த என் உருவம் ஏனோ மங்கலாக மாறியது. சீப்பைப் பிடித்திருந்த என் வலது கை நடுங்குவதைக் கண்டேன். கண்ணாடியில் என் உருவம் மங்கியதற்குக் காரணம் கண்ணாடியல்ல. என் கண்களில் வழிந்த கண்ணீர். கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டேன். நான் இத்தனை கோழையாக ஆவேனென்று ஒருநாளும் நினைக்கவில்லை. என் கண்களிலா இந்தக் கண்ணீர்?

கண்ணாடியில் இப்போது இன்னொரு உருவம் தெரிந்தது. லலிதா எனக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். என்னுடைய உணர்ச்சிகள் என்னை அவளுக்கு முன்னே காட்டிக் கொடுத்துவிட்டன. என்னுடைய கண்ணீரைக் கண்ட அவள் சிறு குழந்தைப்போல் தேம்பித் தேம்பி அழுதாள். கண்ணீர் வெள்ளம் கட்டுக்கடங்கவில்லை.

நான் சீவிக்கொண்டு பின்னால் திரும்பினேன். எனக்கு வழிவிட விரும்பாதவள் மாதிரி அவள் குறுக்கே நின்றாள். அவளுடைய உதடுகள் துடித்தன.

"நீங்கள் போகத்தான் வேண்டுமா?"

"வேறு வழி?"

"இல்லை; நீங்கள் இங்கேயே இருங்கள்!"

இன்னும் ஒரு விநாடி அந்த இடத்தில் அவள் முன்னே தாமதித்தால், நான் என்னுடைய கட்டுப்பாடத்தனையும் இழந்து விடுவேன் போலிருந்தது. தலையைக் கீழே குனிந்து கொண்டேன்; சற்று ஒதுங்கி நின்றேன்.

"நான் போகவேண்டும் லலிதா! போகு முன்பு அவரைப் பார்த்துச் சொல்லிக் கொள்ள வேண்டும். அவர் இதற்குள் எழுந்திருப்பாரா?"

"எழுந்திருக்கும் வேளைதான்;—அதோ அந்த அறையில் இருக்கிறார்" என்று மாடிப் பக்கம் கையைக் காண்பித்தாள்.

நான் மாடிப்படிகளில் ஏறினேன். அவளும் என்னைப் பின் தொடாந்தாள். அறைக்கதவு சும்மா சாத்தியிருந்தது; திறந்தேன். அறைக்குள் அவரைக் காணவில்லை. படுக்கை சுற்றி வைக்கப்பட்டிருந்தது. அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்தேன்; லலிதா கீழே இறங்கிப்போய் அவரைத் தேடி விட்டு வந்தாள். அவளுடைய முகத்தில் கலவரம் நிறைந்திருந்தது. பதற்றத்தோடு அறைக்குள் அங்கும் இங்கும் நோக்கினாள்.

"எங்கும் அவரைக் காணோமே!" என்றாள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. எழுந்து சென்று அவருடைய மேசையைப் பார்த்தேன். அங்கே என்னுடைய நாவல் இருந்தது. அதைக் கையில் எடுத்தபோது அதற்குள்ளிருந்து ஒருகவர் விழுந்தது. அதன் விலாசலத்தைப் பார்த்தேன். 'துரை— லலிதா, இருவருக்கும்' என்று எழுதியிருந்தது. இதற்குள் லலிதாவும் என்னருகில் ஓடி வந்து நின்றாள். அவளுடைய கண்களில் நீர் நிறைந்து விட்டது.

"அன்புக் குழந்தைகளே" என்று கடிதம் ஆரம்பமாகியிருந்தது. கடிதம் சற்றுப் பெரிதாக இருந்ததால் உடனே கடைசி வரிகளை வாசித்தேன்.

"ஆகையால் நான் இன்றைய விமானத்தில் பர்மா போகிறேன். ஏற்கனவே அனுமதிச் சீட்டுப் பெற்றுவிட்டேன். தயவு செய்து என்னைத் தேடும் முயற்சியில் நீங்கள் வீணாக அலையாதீர்கள்—என்னுடைய அன்பிற்கு நீங்கள் கட்டுப்படவேண்டும். மீண்டும் உங்களைக் கேட்டுக்கொள்கி

றேன். நீங்கள் ஒன்ருக வாழுங்கள். உங்களுக்கு என் உள்ளம் நிறைந்த வாழ்த்துக்கள். நாராயணசாமி''

"முழுவதும் படியுங்கள் அதை'' என்று லலிதா துடித்தாள்.

"படிப்பதற்கு இப்போது நேரமில்லை லலிதா. உடனே புறப்படுங்கள். விமான நிலையத்திற்குச் சென்ருல் அவரை எப்படியாவது அழைத்து வந்துவிடலாம்'' என்றேன்.

காரை எடுத்துக்கொண்டு இருவரும் புறப்பட்டோம். அந்தக் கடிதம் என் சட்டைப் பைக்குள் இருந்தது. பின் சீட்டில் இருந்த லலிதா தலையைக்கூட ஒதுக்கிவிட்டுக் கொள்ளாமல் நிலைகுலைந்து கிடந்தாள். கார் ஐம்பது மைல் வேகத்திற்கு மேல் பறந்து கொண்டிருந்தது.

விமானம் புறப்படுவதற்கு ஐந்து நிமிடங்கள் இருந்தன. நிலையத்திற்குள் கார் நுழைவதை நாராயணசாமி முன்னதாகவே பார்த்துவிட்டார். வெகு வேகமாய் அவர் எங்கள் காரை நோக்கி எதிரே நடந்து வந்தார். காரை நிறுத்தினேன். கதவைத் திறந்து கொண்டு லலிதா ஓடிப்போய் அவருடைய கால்களில் விழுந்து பற்றிக்கொண்டாள். கால்களை அவள் விடவில்லை. அந்தப் புல் தரையிலிருந்து எழுந்திருக்கவுமில்லை. நான் மெதுவாக இறங்கி அவர் முன்னே சென்றேன்.

நாராயணசாமி சிரமப்பட்டு அவளைத் தரையிலிருந்து தூக்கினர். அவளை அணைத்தபடியே காருக்கு அழைத்து வந்தார். லலிதாவின் விம்மலும் அழுகையும் அதிகமாயிற்று. தேம்பித் தேம்பி அழுதாள்.

"என்னை மன்னித்து விடுங்கள்; நான் செய்ததெல்லாம் தவறுதான்—எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். வீட்டிற்கு வாருங்கள்'' என்ருள்.

நாராயணசாமி என்னைப் பார்த்தார். எனக்கு அவரைத் திரும்பிப் பார்க்கத் துணிவில்லை.

"உங்களுடைய அமைதியான வாழ்வில் நான் குறுக்கிட்டு விட்டேன். இனி ஒரு போதும் இந்தத் தவறைச்

செய்ய மாட்டேன். தயவு செய்து திரும்பி வாருங்கள்'' என்றேன் நான்.

நாராயணசாமி என்னைப் பார்த்துப் புன்னகை செய்தார். லலிதாவிடம் திரும்பி, "முதலில் நீ அழுவதை நிறுத்த வேண்டும்'' என்ருர். அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"உங்கள் இரண்டு பேருக்கும்தான் இதைச் சொல்கிறேன்—முதலில் உங்களில் யாரும் தவறு செய்யவில்லை என்பதை நீங்கள் உணரவேண்டும். இந்த உணர்வு வந்தால் தான் உங்களை என்னுல் புரிந்து கொள்ள முடியும். செய்யாத தவறுக்கு மன்னிப்பு எதற்கு? கண்ணீர் எதற்கு?'' என்ருர்.

"எப்படியிருந்தாலும் சரி; நீங்கள் இப்போது வீட்டிற்கு வரவேண்டும்'' என்ருள் லலிதா.

"என்னுடைய கடிதத்தை நீங்கள் முழுவதும் படித்தீர்களா? அந்தக் கடிதம் இப்போது எங்கே இருக்கிறது?'' என்ருர். நான் கடிதத்தை எடுத்துக் கொடுத்தேன்.

"கடிதத்தை ஒன்றும் நான் படிக்கவில்லை. அதைப் படிக்கவும் வேண்டாம். எனக்கு வேண்டியது நீங்கள்; உங்கள் கடிதமல்ல'' என்ருள் லலிதா.

"எனக்காக இந்தக் கடிதத்தை நீங்கள் இப்போது வாசிக்க வேண்டும். இதில் எழுதியிருப்பது என் முடிவான தீர்மானம். இதை நான் மாற்றப்போவதில்லை. ஏன் தெரியுமா! நான் செய்யும் சிறந்த காரியமாக நினைக்கிறேன்.''

லலிதா அந்தக் கடிதத்தைப் படித்தாள், பிறகு நானும் படித்தேன்.

"துரை! லலிதா உங்களுக்கென்றே பிறந்தவள். இதை நான் வெகுநாட்களுக்கு முன்பே தெரிந்து கொண்டேன். ஆகையால்தான் உங்கள் உள்ளங்களில் அன்பு வளர நான் வழிசெய்தேன்.''

"இந்த மாதிரியெல்லாம் நீங்கள் ஒரு முடிவும் செய்ய வேண்டாம். அவரை நான் என் அண்ணுக இனி நினைத்துக் கொள்கிறேன்'' என்ருள் லலிதா.

"மனத்தின் எண்ணங்களை விருப்பம்போல மாற்றிக்

கொள்ள முடியாது, லலிதா. அது இப்போது அவசியமில்லை. அவர் உனக்கு அண்ணனாக இருப்பதைவிட, நான் உனக்குத் தந்தையாகவும் அவர் கணவனாக இருப்பதையுமே விரும்புகிறேன். என்னுடைய நீண்டநாள் ஆசை இது; இதை எனக்காக மறுக்காதே!''

இதற்குள் விமானத்திற்கு நேரமாகிவிட்டதென்று அவரை அழைத்துச் செல்வதற்குப் பணிப்பெண் வந்துவிட்டாள். நாராயணசாமி காரிலிருந்து இறங்கினார். நாங்களும் இறங்கினோம். எல்லோரும் விமானத்தருகில் சென்றோம்.

''தயவுசெய்து சிரித்துக்கொண்டே என்னை நீங்கள் அனுப்ப வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

உயர்வான பண்புள்ள ஓர் உத்தமரை ஏற்றிக்கொண்டு விமானம் உயரப் பறந்தது. நாங்கள் ஆகாயத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டே நின்றோம். விமானம் சிறிய கழுகுபோல் மாறி, அதன் பிறகு வண்டின் உருவம் அடைந்தது. அதுவும் தேய்ந்து கண்ணிலிருந்து மறைகிற வரையில் பார்த்துக்கொண்டு நின்றோம். கையில் அவர் எழுதியிருந்த கடிதம் இருந்தது.

''அருமைக் குழந்தைகளே!

நீங்கள் இருவரும் என்னுடைய இரு கண்கள். முதலில் நீங்கள் நல்லவர்கள் என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். உங்களுக்காக நான் ஏற்படுத்தியிருந்த சூழ்நிலையில், உங்களை விட வேறு யாரும் உயர்வாகப் பழகி இருக்கமுடியாது. நான் உங்களை அடிக்கடி கவனித்துக்கொண்டுதான வந்தேன். உங்களுக்கு உதவி செய்வதற்காகததான் அப்படிக் கவனித்தேன்.

நீங்கள் மகிழ்வோடு வாழவேண்டும் என்பது என் ஆசை. நான் உங்களுக்கு வாழ்வளிக்க முடிவு செய்து விட்டேன். ஏனெனில் அது உங்களுடைய வாழ்வு. நான் அதை எப்படியோ கவர்ந்துகொண்டேன். அந்தச் செயலுக்குப் பிராயச் சித்தமாக அதை உங்களுக்கே திருப்பிக் கொடுக்கிறேன்.

நீங்கள் ஒன்றாய் வாழவேண்டும் என்பது என் அன்பின் ஆணை. இதை நீங்கள் சிறிதும் தயங்காமல் ஏற்றுக்கொள்ள

வேண்டும். இதற்காக யோசிப்பதோ, தயங்குவதோ மறுப்பதோ கோழைகளின் செயலாகும்.

சுற்றியுள்ள மனிதர்களைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். நல்ல மனிதர்களும் உலகில் நிறைய இருக்கிறார்கள். மற்றவர்களுடைய வாழ்வில் தலையிட்டு அவர்களுக்குத் துன்பம் தருவதே சிலருக்குத் தொழிலாக இருக்கிறது. அவர்களுக்காகப் பார்த்தால் எந்த நல்ல செயலுமே இங்கு நடக்காது. நாம் வாழ வேண்டும்; மற்றவர்களுக்கும் வாழ்வதற்கு வழிவிடவேண்டும்-இதுதான் உலகிற்குத் தேவையான நியதி.

என்னைப்பற்றியும் என் செயல்களைப்பற்றியும் நான் சற்று விளக்கிச் சொல்ல வேண்டியிருக்கிறது லலிதாவை நான் மணக்கும் வரையில் அவளுக்கு நல்வாழ்வளிக்க முடியுமென்ற நம்பிக்கை எனக்கு நிறைய இருந்தது. அவளும் என்னை ஏற்றுக்கொள்ள மறுக்கவில்லை. ஆனால் திருமணத்திற்கடுத்தாற்போல் நேர்ந்த கார் விபத்து என் நம்பிக்கையைப் பொய்யாக்கியது. அப்போது எனக்கேற்பட்ட துயரம் என்னுடைய நிலையில் இருந்து பார்த்தால்தான் தெரியும். எனக்காக நான் கவலைப்படவில்லை. வாழ்வின் எல்லா இன்பங்களையும் குறைவின்றிச் சுவைத்து முடித்தவன் நான். ஆனால் லலிதா? அவளுடைய எதிர்காலம்?

தவறான அடிப்படையில் என்னைப்பற்றி நினைக்க வேண்டாம். லலிதாவை எண்ணிக்கொண்டு நான் துரையுடன் பழக்கத்தைத் தொடங்கவில்லை. சாதாரண ஓர் நட்பையே நான் ஆரம்பத்தில் எதிர்பார்த்தேன். எதிர்பாராதது நடந்தது' திருமணத்திற்கு வாழ்வில் நாம் கொடுக்கும் உயர்ந்த இடத்தை நான் ஒருபோதும் மறக்கவில்லை. காதலை விட, உடலுணர்வைவிட ஒப்பற்ற தனிப் பண்பு அதற்கு உண்டு. அதைக் காப்பாற்றவே நான் இந்த முடிவு செய்தேன்.

மனித சக்திக்கு மேற்பட்ட சில காரியங்களை இயற்கை தன் போக்கில் நடத்திக் கொள்கிறது. உங்களுடைய பழக்கத்தின் உள்ளுணர்ச்சியை நான் நீண்ட நாட்களுக்குப் பின்னரே தெரிந்து கொண்டேன். தெரிந்தவுடன் எனக்குச்

சிறிது அதிர்ச்சிதான். ஆனால் சித்தித்துச் சிந்தித்து அறிவால் ஆராய்ச்சி செய்தபோது, உங்கள் போக்கு இந்தச் சூழ்நிலையில் எனக்குத் தவறாகப் பட வில்லை. கண்ணியத்தையும் கட்டுப்பாட்டையும் ஒழுக்கத்தையும் காப்பாற்றிக் கொள்ள நீங்கள் பட்ட கஷ்டங்கள் எனக்குத் தெரியாது என்கிறீர்களா? உங்களைவிட நான்தான் உங்களுக்காக அதிகமாய் வருந்தினேன். நான் மனச்சாட்சி உள்ள மனிதன்.

புனிதப் போர்வை என்ற முக்காடிட்டு லலிதாவை என் வீட்டு மூலையில் உட்கார்ந்து அழச் செய்ய எனக்கு விருப்பமில்லை. அவளைச் சிறைக் கைதியாக்கி என்னைக் காவலனாக மாற்றிக் கொள்ளவும் நான் தயாராக இல்லை. உடலைச் சிறை செய்யலாம் .உள்ளத்தை என்ன செய்வது?

இப்படியில்லாமல், திருமணத்தின் அருமை பெருமைகளைப்பற்றி ஊரறிய வேஷம் போட்டுக் கொண்டு, வீட்டிற்குள்ளே விஷத் தன்மைகளை அநுமதித்து, அவற்றைக் கவனியாததுபோல் போலி நாடகம் நடத்துவதுதான அழகா? நான் இந்த மாதிரித் தன்மையை மிகவும் வெறுக்கிறேன். லட்சியம் என்பது இன்றைய வாழ்வின் நடைமுறையோடு ஒட்டக்கூடியதாக இருக்க வேண்டும். நான் லட்சியவாதியல்ல, நடைமுறை உண்மைகளுக்குப் பரிகாரம் தேடுகிறவன்.

திருமணம் என்கிற மகத்தான தொடர்புக்கு நீங்கள் இருவரும் கொடுத்த மதிப்பும் அதைக் காப்பாற்ற நீங்கள் பட்ட துயரமும் கடைசியில் நீங்கள் செய்யவிருந்த தியாகமும் என நெஞ்சை உருக்கிவிட்டது. நான் அந்ததிருமணத் தொடர்புக்கு என்னைக் கொஞ்சமும் ஏற்றவனாகக் கருதாததால் அதிலிருந்து மகிழ்வோடு விலகிக் கொள்கிறேன். நான் செய்வதில் அணுவளவும் தியாகமில்லை. நான் வாழமுடியாதபோது, வாழ்வளிக்க முடியாதபோது, உங்களை வாழச் செய்வதில் புதுமை என்ன இருக்கிறது? தியாகம் என்ன இருக்கிறது?

இங்கே இனி இருப்பதைவிட நான் இன்னும் சந்தோஷமாகப் பர்மாவில் இருப்பேன். என்னைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம்; உங்களுடைய வாழ்வின் நலம்தான் என்னுடைய சொந்த நலம்—உங்களுடைய உழைப்பையும் நான் விட்டுச் செல்லும் பொருளையும நீங்கள் வாழ்வில் கஷ்

டப்படுகிறவர்களுக்காக உதவுங்கள். அடிக்கடி நான் கடிதம் எழுதுகிறேன். நீங்களும் பதில் அனுப்புங்கள்.

முக்கியமான விஷயம்; நாவலின் கையெழுத்துப் பிரதியை நான் படித்தேன். அதன் முடிவு இனி இன்பந்தான். விரைவில் அதற்கு ஒரு அழகான முடிவை எழுதி, புத்தகம் வந்தவுடன் முதல் பிரதியை எனக்கு அனுப்பி வையுங்கள். லட்சியம் என்றும் தியாகம் என்றும் நினைத்துப் பெண்ணின் வாழ்வைப் பழிவாங்கும் சோக முடிவை எழுதி வாழ்வில் நம்பிக்கை இழக்கச் செய்யவேண்டாம்.

ஆகையால் நான் இன்றைய விமானத்தில், பர்மா போறேன். ஏற்கனவே அநுமதிச் சீட்டுப் பெற்றுவிட்டேன் தயதுசெய்து என்னைத் தேடும் முயற்சியில் நீங்கள் வீணுக அலையாதீர்கள். என்னுடைய அன்பிற்கு நீங்கள் கட்டுப்பட வேண்டும். மீண்டும் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். நீங்கள் ஒன்ருக வாழுங்கள். உங்களுக்கு என் உள்ளம் நிறைந்த வாழ்த்துக்கள். நாராயணசாமி''

ஒரே பொட்டல் வெளியாகத் தெரிந்த விமான நிலையத்தில் நானும் லலிதாவும் மாத்திரம் இப்போது நின்ருேம். இந்தப் பரந்த உலகத்தில் ஆணும் பெண்ணுமாய் இரண்டே இரண்டு உயிர்கள் மாத்திரம் உயிர்த் துடிப்போடிருந்தால், எப்படியிருக்குமோ அப்படி இருந்தது எனக்கு; நானும் அவளும் காரை நோக்கி நடந்தோம். கார் வீட்டிற்கு வந்து சேரும்வரை அவளுடைய அழுகையும் தேம்பலும் நிற்க வில்லை.

வீட்டின் மாடியறையில் அவருடைய பெரிய படத்தைக் கண்டவுடன் நினைவற்று அதன் முன்னே வழியும் கண்ணீருடன் நின்றேன்; எனக்கெதிரில் என்னைப் போலவே லலிதாவும் வழிந்தோடும் கண்ணீரைத் துடைக்காமல் கை கூப்பி நின்றது, வெகுநேரம் சென்ற பின்புதான் எனக்குத் தெரிந்தது.

நாராயணசாமியின் அன்புக் கரம் எங்கிருந்தோ வந்து என் கண்ணீரைத் துடைப்பது போலவும் என் காதுகளில் அவர் குரல், 'இப்போது லலிதா உங்கள் சிநேகிதி மாத்திரமல்ல; துணைவி' எனக் கூறுவதுபோலவும் உணர்ந்தேன்.

என் கரம் அவள் கண்ணீரைத் துடைக்க விரைந்தது.

முற்றும்

# அகிலனின்

## நாவல்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| சித்திரப் பாவை (பாரதீய ஞான பீட பரிசு பெற்றது) | 15 | 00 |
| வேங்கையின் மைந்தன் (சாகித்ய அகாதமி பரிசு பெற்றது) | 22 | 00 |
| கயல்விழி (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது) | 15 | 00 |
| நெஞ்சினலைகள் (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது) | 8 | 00 |
| எங்கே போகிறோம்? (ராஜா சர் அண்ணாமலை செட்டியார் பரிசு பெற்றது) | 12 | 50 |
| பால்மரக் காட்டினிலே... | 7 | 50 |
| வெற்றித் திருநகர் | 15 | 00 |
| பாவை விளக்கு | 20 | 00 |
| புதுவெள்ளம் | 15 | 00 |
| வாழ்வு எங்கே? | 11 | 00 |
| பொன் மலர் | 4 | 00 |
| கொள்ளைக்காரன் | 2 | 00 |
| இன்பநினைவு | 4 | 50 |
| அவளுக்கு | 1 | 75 |
| பெண் ('கலைமகள்' நாராயணசாமி ஐயர் பரிசுபெற்றது) | 3 | 50 |

# அகிலனின் சிறுகதைத் தொகுதிகள்

| | | |
|---|---|---|
| வேலியும் பயிரும் | | 3 50 |
| விடுதலை | | 2 75 |
| பசியும் ருசியும் | | 4 50 |
| சத்திய ஆவேசம் | | 5 00 |
| எரிமலை | (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது) | 4 50 |
| குழந்தை சிரித்தது | | 4 50 |
| நெல்லூர் அரிசி | | 6 00 |
| வழி பிறந்தது | | 5 00 |
| சக்திவேல் | | 5 00 |
| நிலவினிலே | | 3 50 |
| ஆண் பெண் | | 3 50 |
| செங்கரும்பு | | 3 00 |
| மின்னுவதெல்லாம் | | 5 00 |
| ஒருவேளைச்சோறு | | 5 00 |
| சகோதரர் அன்றோ? | | 5 00 |
| கதைக்கலை | (கட்டுரை) | 5 00 |
| சோவியத் நாட்டில் | ( ,, ) | 5 00 |
| எழுத்தும் வாழ்க்கையும் | ( ,, ) | 12 50 |
| வெற்றியின் ரகசியங்கள் | ( ,, ) | 8 75 |
| நான்கண்ட ரஷ்யா | | (அச்சில்) |









பாரி புத்தகப் பண்ணை

58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600 005

